அருட்கவி தவத்திரு



# ஸாதுராம் ஸ்வாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய



















# நங்கைநல்லூர் அருட்புகழ்

1.3.2009

ஸ்வாமிகளின் ஒன்பதாவது ஆராதனை நாள் வெளியீடு

வெளியிடுவோர்:

ஸ்ரீ அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்
அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளை
பொங்கி மோநாம்பிகை டிரஸ்ட்
நங்கைநல்லூர், சென்னை-61.

உ

அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்
திருவாய் மலர்ந்தருளிய

# நங்கைநல்லூர் அருட்புகழ்



ஸ்வாமிகளின் ஒன்பதாவது ஆராதனை நாள் வெளியீடு

வெளியிடுவோர்:

ஸ்ரீ அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்
அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளை
பொங்கி மோநாம்பிகை டிரஸ்ட்,
நங்கைநல்லூர், சென்னை–600 061.
1-3-2009

| | | |
|---|---|---|
| பெயர் | : | நங்கைநல்லூர் அருட்புகழ் |
| ஆசிரியர் | : | அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு – 1-3-2009 |
| வெளியிடுவோர் | : | பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட் |
| வெளியீட்டுரிமை | : | பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட் |
| அளவு | : | A8 (Crown) |
| பக்கங்கள் | : | |
| காகிதம் | : | 80 GSM Maplitho |
| அட்டை | : | 250 GSM Mirror Coated Board |
| பொருள் | : | ஆன்மிகம் (கவிதைகள்) |
| விலை | : | ரூ.75/- |
| பிரதிகள் | : | 1100 |
| Laser Typeset & Printed | : | Visual Graphics, Chennai-61<br>Mobile: 98414 59068 |

கிடைக்குமிடங்கள் :

- **பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட்**
  பொங்கி மடாலயம், 10/22, பொங்கி மடாலயம் தெரு, நங்கைநல்லூர், சென்னை–61. Ph.: 43156781
- **R. ஸ்ரீதரன்**
  'ஸ்வர்ணபுரி" எண்.T-7, முதல் குறுக்கு, 46ஆம் தெரு, நங்கைநல்லூர், சென்னை–61. Ph.: 22241414
- **ஸ்ரீ மு.கோ. ராமன்**
  'ஸ்ரீ வைஷ்ணவி', பரப்பனங்காடி–676 303.
  Ph.: 0494 - 2411282
- **சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்**
  எண்.154, டி.டி.கே. சாலை, ஆள்வார்பேட்டை, சென்னை–600 018.

# பொருளடக்கம்

# அணிந்துரை

கருணாமூர்த்தியான பகவான் தன் பக்தர்களைக் கடைத்தேற்றப் பல அவதாரங்கள் எடுத்தார். மேலும் திருக்கோயில்களில் அர்ச்சாவதாரமாக (சிலா ரூபத்தில்) நின்றார். இருப்பினும் மக்களோடு மக்களாய் அவர்களோடு பிறந்து வளர்ந்து சில அற்புதங்களை நிகழ்த்த ''மகான்''களாகத் தோன்றினார். ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர், விவேகாநந்தர், அரவிந்தர், ரமண மஹரிஷி, சேஷாத்திரி ஸ்வாமிகள், வள்ளிமலை ஸ்வாமிகள், அருணகிரிநாதர், பட்டினத்தார் வரிசையில் 'ஸ்ரீ சாதுராம்' ஸ்வாமிகளாகவும் தோன்றினார்!

முதன் முதலில் ஸ்ரீ ஸ்வாமிகளை அடியேன் நங்கைநல்லூர் ஸ்ரீ அர்த்தநாரீச்வரர் கோவிலில் சந்தித்தேன். அவருடைய ஆற்றலைக் கண்டு வியந்து அவர் இயற்றிய 15 பாடல்களை–பாசுரங்களை 1000 பிரதிகள் அச்சடித்து இலவசமாக வழங்கினேன்.

எதுகை, மோனை, யாப்பிலக்கணம் அமையக் கவிதைகளை இயற்றவும், அடித்தும் திருத்தியும், கிழித்தும் மீண்டும் எழுதுகின்ற கவிஞர்கள் மத்தியில் ஸ்வாமிகள் ''ஆசு கவியாக'' அருவிபோல் பாடல்களைப் பொழிந்து உள்ளார்கள்!

ஒரு மகத்தான ஆன்மீக குடும்பத்தில் பிறந்தவர். இவருடைய பெரியம்மாவும், தாயுமாகச் சேர்ந்து மூவரும் 15.2.1969ல் வட திருமுல்லைவாயில் ஸ்ரீ வைஷ்ணவி ஆலயத்தில் துறவறம் ஏற்றது வரலாற்றுச் சிறப்புடையது!

1937ல் பிறந்த சேதுராமன் (பூர்வாசிரமப் பெயர்) தன்னுடைய 5ஆவது வயதில் தன் தமையனாரோடு பழநியில் 1944ம் ஆண்டு ஸ்ரீ வள்ளிமலை சுவாமிகளைத் தரிசித்தார்! திருப்புகழ் உபதேசம் பெற்றார்.

அவருடைய ஆன்மீகப் பயிருக்கு அன்றே வித்து விதைத்தாகி விட்டது. சேதுராமனுக்கு வள்ளிமலை ஸ்வாமிகள் 22.11.1950 அன்று மறைந்த துக்கம் தாள முடியவில்லை. ஒரு மாதமாக உழன்று கொண்டிருந்த மனதிற்கு விடை தேடி சேதுராமன் 1952இல் வீட்டை விட்டே வெளியேறி விட்டான்! (ரமண மஹரிஷியும் தன் வீட்டை விட்டு ஓடி வந்தவர் தாம்) அவருடன் வள்ளிமலை சுவாமிகள் கனவில் தோன்றிப் பேசினார்! ''நீ நாளை திருப்போரூருக்குப் போ'' என்றார். சேதுராமன் திருப்போரூர் சென்றார். ஒரு கிழவரை அங்குக் கோயிலில் கண்டார். கிழவருடன் திருக்கழுக்குன்றம் தரிசித்தார். சேதுராமனை அந்தக் கிழவர் சென்னைக்கு அழைத்து வந்தார்!

சேதுராமன் வீட்டை அடைந்ததும், தான் ஒரு காகிதத்தைத் திணித்த சேதுராமன் கைப் பையை "உள்ளே வைத்துவிட்டு வா'' என்றதும், உள்ளே போய்த் திரும்பி வருவதற்குள் அவர் மாயமாகிவிட்டார்! கிழவராய் வந்தவர் வள்ளிமலை ஸ்வாமிகள் என்பதை விளக்கவும் வேண்டுமோ!

அந்தப் பையிலிருந்த காகிதத்தைப் பிரித்துப் படித்தபோது அதில் "திருமுருகன் ஹர ஹரோ ஹரா கும்மி 108'' என்று எழுதியிருந்தது. ஆம் அந்த நாமாவளியே சேதுராமனை ஓர் ஆசுகவியாய் மாற்றியது!

பல கோயில்களுக்குச் சென்று அந்தந்த இறைவனைப் பக்தியுறப் பாடுவார். உடன் இருந்த தமையனார் திருப்புகழ்மணி திரு. சுப்பிரமண்யன் அதை ஒரு காகிதத்தில் குறிப்பு எடுத்துக் கொள்வார்.

என்னே விந்தை, அவை வெறும் பக்திப் பாடல்களாக மட்டும் இல்லாது 'சந்த விருத்தமாய்' அமைந்து தகுந்த இராகம், தாளங்களோடு இருந்தன. பல்லவி, அனுபல்லவி, சரணங்களோடும் இருந்தன சில. ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகளைப் பற்றி எழுத்தாளர் 'பரணீதரன்' அவர்கள் 'அருணாசல மகிமை' என்று ஆனந்த விடனில் தொடராக எழுதிவர ஸ்வாமிகளைப் பற்றிய புகழ் பரவியது!

ஸ்ரீ ஸ்வாமிகள்

1. சென்னைத் திருக்கோயில்கள் திரு அருட்புகழ் (2 பாகங்கள்)
2. ஸ்ரீ வைஷ்ணவி கும்மி
3. ஐயப்பன் அருட்புகழ்
4. ஆஞ்சநேயர் அருட்புகழ்
5. நவக்ரஹ அருட்புகழ்
6. திரு அருட்புகழ்த் திருப்பள்ளி எழுச்சிகள்
7. திருப்போரூர் இரட்டை மணிமாலை

இன்னும் பல நூல்களைப் பாடியுள்ளார்கள்! அவற்றை மிகக் குறைந்த விலையில் அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளையார் வெளியிட்டுள்ளார்கள்! அனைவரும் வாங்கிப் படித்துப் பயன் பெற வேண்டும்!

ஸ்வாமிகளின் ஆசு கவிதைகளை நேரில் கேட்டுப் பரவசமடைந்தவர்கள் பலர். தணிகைமணி வ.சு.செ. பிள்ளையர்வகள் பூரித்துப் போவார். இதுபோல் தருமபுரம் ஆதீன சமய பிரசாரக்குழுத் தலைவர் மற்றும் அந்நாள் அரசியல் தலைவர்கள், மந்திரிமார்கள், காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராச்சாரியார் ஸ்வாமிகள் மற்றும் பலர்.

அடியேன் உபதலைவராக இருக்கும் தில்லைகங்காநகர் ராஜ ராஜேச்வரி கல்சுரல் அகாடமியில் ஸ்ரீராம நவமி சமயம் "ஒரு மகானை''க்

கொண்டு விழாவினைத் துவக்கிவைப்பது வழக்கம். அதுபோல் 2000ம் ஆண்டு சாதுராம் ஸ்வாமிகளை அழைக்கத் திட்டமிட்டுருந்தோம், ஆனால் அதற்கு முன்பாகவே ஸ்வாமிகள் 10.3.2000 அன்று திருப்போரூர் முருகனடி சேர்ந்துவிட்டார்கள்! அவரை வள்ளிமலை சுவாமிகள் அழைத்துக் கொண்டு விட்டார்!

ஸ்வாமிகளின் பாடலில் எளிமை, சுவை மிகுந்திருக்கும். பல சரித்திர நிகழ்வுகள் வெடித்துச் சிதறி வரும். பல்லாவரத்தைப் பல்லவபுரம் என்றும் பழவந்தாங்கலைப் பல்லவன் தாங்கல் என்றும் அழைத்தவர் அவர்!

சாதுராம் ஸ்வாமிகபைப் பற்றிய பாடல் அவர் தமையனார் வாக்குப்படி

"வள்ளிமலை வள்ளல் திருப்புகழ்ச்
சச்சிதாநந்த மஹநீயர் தம்
ஒள்ளியநற் சீடர்புகழ் ஓங்குதிருப்
போரூரான் உவந்து ஆட் கொண்ட
கள்ளமிலாத் துறவிவள்ளி பொங்கிவயி
ணவிபதங்கள் கருத்தில் வைத்த
தெள்ளியசீர் அருட்புகழ் சொல் ஸாதுராம்
ஸ்வாமிபதம் சிரமேற் கொள்வாம்"

நாம் அவருக்கு என்ன செய்யவேண்டும்.

"பரமன் அருள்தான் நாள்எல்லாம் பண்ணார் தமிழில் அருட்புகழாப்
பரவச் சாது ராம்ஸ்வாமி பகர்ந்த பாக்கள் அழியாமல்
தரையில் காக்கும் அறப்பணியே தாழாது இயற்றப் பக்திநலம்
விரவ அமைத்த நிதிக்(கு) உதவி விரும்பி அளிப்பீர் சகத்தீரே!"

*(பாலகவி மு.கோ. ராமன்)*

அடியேனையும் மதித்து அடியேன் ஓர் "அணிந்துரை" வழங்கவும் 1.3.2009இல் ஸ்வாமிகளின் 9ஆம் ஆராதனை நாளில் "நங்கைநல்லூர் அருட்புகழ்" என்னும் நூலைப் பொங்கி மடாலயத்தில் வெளியிடவும் வேண்டியமை அந்த முருகனின் அருளே!.

வாழ்க ஸ்ரீ ஸாதுராம் புகழ்.
வளம் பெறுவோம்

வாழ்க திருஅருட்புகழ்
வாழ்வில் அமைதி பெறுவோம்!

"கௌசிகா", 7/3, 12ஆம் தெரு
தில்லை கங்கா நகர், நங்கைநல்லூர்
சென்னை–61. 20.02.2009
தொலைபேசி: 2267 0141

அன்பன்
**கீரனூர் இராமமூர்த்தி**
(ஆன்மீகச் சொற்பொழிவாளர்)

உ

ஸ்ரீ பொங்கி க்ருபா

# பதிப்புரை

வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகளின் சீடரும், திருப்போரூர் முருகன் திருவருளை 20–1–1952–இல் "திருமுருகன் ஹர ஹரோ ஹராக் கும்மி (108)'' என்னும் பாடல் மூலம் பெற்றவரும் ஆன ஸேதுராமன் எல்லாத் தெய்வங்கள் மீதும் ஆசுகவிகளாகப் பாடல்கள் பாடி அருட்கவி ஆனார். 1969 சிவராத்ரி அன்று துறவறம் ஏற்று 'ஸாதுராம் ஸ்வாமிகள்' என்ற தீட்சா நாமம் பெற்று 31 ஆண்டுகள் வாழ்ந்து 10–3–2000–இல் (ப்ரமாதி–மாசி–சுக்லபக்ஷ பஞ்சமி, பரணி–வெள்ளிக் கிழமையில்) முருகன் திருவடியில் கலந்தனர்.

அவருடைய பாடல்கள் "திருஅருட்புகழ்'' என்ற பெயரால் வழங்கப் பெற்று வருகின்றன.

அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளை, கி.பி.2003 முதல் ஆண்டு தோறும் அருட்புகழ்ப் பாடல்களை வெளியிட்டு வருகின்றது.

அருட்கவியாரின் பெற்றோர் சென்னை–1, லிங்கச் செட்டித் தெருவில் இருந்து 1965 இல் நங்கைநல்லூருக்குக் குடியேறினர். (1969–இல் வடதிருமுல்லை வாயில் வைஷ்ணவி ஆலயத்தில் ஸந்யாஸம் பெற்ற பின் தாயார் பெரிய தாயாருடன் அங்கேயே 1979 வரை இருந்தனர். 1979 இறுதியில் தாயார் மறையவும், அவருக்கு ஸமாதி கட்டப்பட்டுப் 'பொங்கி மடாலயம்' நிறுவப் பெற்றது. ஸ்வாமிகளும் நங்கைநல்லூரில் தங்கி யிருந்தனர்).

31.5.1964–இல் நங்கைநல்லூர் வரஸித்தி விநாயகர் கோயில் கும்பாபிஷேகம் நடைபெற்றது. 29.1.1967 இல் அருட்கவி ஸ்வாமிகள் வரஸித்தி விநாயகர்க்குப் 17 பாடல்களை அருட்கவிகளாகத் தந்தார்கள். அவை குறிப்புரை, பொழிப்புரையுடன் ஸ்ரீ கணேஷ் மண்டலியாரால் 1967 இல் பிலவங்க–விநாயக சதுர்த்தி நாளில் வெளியிடப் பெற்றன.

பிறகு, பல தெய்வ ஸந்நிதிகள் உண்டாயின. விநாயகர்க்கும் மற்ற ஸந்நிதித் தெய்வங்களுக்குமாக 180 பாடல்களை அருட்கவியவர்கள் பாடித் தந்தார்கள். அவை 1971 இல் ஸ்ரீ கணேஷ் மண்டலியாரால் நங்கைநல்லூர் அருட்புகழ்–2 என்ற பெயரில் வெளியிடப் பெற்றன.

பின்னர் அர்த்த நாரீச்வரருக்கும், உத்தர குருவாயூரப்பனுக்கும் பாக்களை அருளிச் செய்தார்கள் அருட்கவியவர்கள்.

ஸ்வாமிகள், திருக்கோயில்களில் உள்ள தெய்வங்கள் மீது அருட்பாடல்களை அருளுவது, தவிர பக்தர்கள் வீட்டுப் பூஜை அறைத் தெய்வங்கட்கும் புதுப் பாடல்கள் பாடுவது வழக்கம். அந்த முறையில் நங்கைநல்லூரில் உள்ள குஹாநந்தாலயம் (குஹாநந்த மண்டலி), ஷண்முக பவநம், வைஷ்ணவி இல்லம் ஆகிய மூன்று இல்லத் தெய்வங்கட்கும் ஸ்வாமிகள் அருட்புகழ்ப் பாடல்கள் அருளியுள்ளார்கள்.

இந்த ஆண்டு, நங்கைநல்லூருக்குரிய எல்லாப் பாடல்களையும் ஒன்றாகச் சேர்த்து, நங்கைநல்லூர் அருட்புகழ் என்ற பெயரில் ஒரே புத்தகமாக அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளையார் ஸ்வாமிகளின் 9ஆவது ஆராதநை நாள் 1–3–2009 இல் வெளியிடுகின்றனர்.

இந்த வெளியீட்டுக்கு ஓர் அணிந்துரை தருமாறு, ஸ்வாமிகள் பாடிய அர்த்தநாரீச்வரர் அருட்புகழை 1971 இல் 1000 ப்ரதிகள் இலவசமாக அச்சிட்டு வழங்கிய 'ஆன்மிக சிரோமணி' பிரம்மஸ்ரீ கீரனூர் இராம மூர்த்தி அவர்களை வேண்டினோம். அவரே நூலையும் அந் நாளில் வெளியிட வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டோம். அவர்களும் ஒப்புக் கொண்டார்கள்.

நூலுக்கு அணிந்துரை தந்தும், வெளியிட இசைந்தும் உதவிய ஸ்ரீ கீரனூர் இராமமூர்த்தி அவர்கட்கும் அழகாக அச்சிட்டுத் தந்த 'விஷுவல் கிராபிக்ஸ்' ஸ்ரீ R. அப்பாசாமி அவர்கட்கும் எங்கள் நன்றி கலந்த வணக்கங்களைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

இந்த மூன்றாம் பகுதிப் பாடல்களுக்குக் குறிப்புரை மட்டும் அடியேனால் எழுதிச் சேர்க்கப் பெற்றுள்ளன.

"கோயில் நகரம்'' எனக் கூறப் பெற்று வரும் இந்த நங்கைநல்லூர் வாசிகள் இந்த நூலை வாங்கிப் படித்துப் பாடி, பயன்கள் பலவற்றையும் பெற அருளுமாறு தெய்வத்தின் திருவருளும் குருவருளும் கூடவேண்டுமென வேண்டிக் கொள்கின்றோம்.

**ஸு.வே.ஸுப்ரம்மண்யன்**
**S.V.மஹாதேவன்**
அருட்கவி தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள்
அருட்புகழ் வெளியீட்டு அறக்கட்டளை,
பொங்கி மோநாம்பிகை ட்ரஸ்ட்

பொங்கி மடாலயம்
நங்கைநல்லூர்,
25.2.2009

# அருட்கவியார் பாடியுள்ள தெய்வங்களும், பிறரும்.

## தெய்வங்கள்

அநுமன்
ஆண்டாள்
இராமர்
இராமலிங்கேச்வரர்
இலக்குமி
ஐயப்பன்
ஐயனார்
க்ருஷ்ணர்
கணபதி
கன்னிகா பரமேச்வரி
கலியுக நாச்சியம்மை
காளிகாதேவி
குருவாயூரப்பன்
ஸரஸ்வதி
சித்ரகுப்தர்
சிவகாமியம்மை
சிவபெருமான்
சௌடாம்பிகை
திருமால்
திரௌபதி அம்மன்
நடராஜர்
நரசிம்மர்
நவக்கிரகங்கள்
பார்வதி
பொன்னியம்மை
முத்துமாரியம்மை
முருகவேள்
ராதை

## பண்டைப் பெரியோர்

அகத்தியர்
அருணகிரிநாதர்
ஆதிசங்கரர்
கஞ்சமலைச் சித்தர்
கருவூர்த்தேவர்
சிவஞாந முனிவர்
சுந்தரமூர்த்தி சுவாமிகள்
சேக்கிழார்
திருஞாநசம்பந்த சுவாமிகள்
திருநாவுக்கரசு சுவாமிகள்
திருவள்ளுவர்
மாணிக்கவாசக சுவாமிகள்
மெய்கண்டார்

## மகான்கள்

அருட்சக்தி அன்னை
இரெட்டியப்பட்டி சுவாமிகள்
ஒற்றைவேட்டி சுவாமிகள்
காமகோடிபீடம் சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி சுவாமிகள் & ஜயேந்த்ர ஸரஸ்வதி சுவாமிகள்
சட்டி ஸ்வாமிகள் (மாணிக்க சுவாமிகள்)
சாயிபாபா (ஷீரடி)
சிவானந்த சுவாமிகள் (ரிஷீகேசம்)
சுப்பையா சுவாமிகள் (திண்டுக்கல்)
சுப்பையா சுவாமிகள் (திருக்கழுக்குன்றம்)
சுரைக்காய் சுவாமிகள்
சேஷாத்திரி சுவாமிகள்
ரமண மகரிஷி
வள்ளிமலைத் திருப்புகழ் சச்சிதாநந்த சுவாமிகள்
விலட்சணானந்த சுவாமிகள்

அருட்கவி தவத்திரு

# ஸாதுராம் ஸ்வாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய












# நங்கைநல்லூர் அருட்புகழ் - 1

ஓம் சுத்த சக்தி

# கவியோகி மகரிஷி ஸ்ரீ சுத்தானந்த பாரதியாரின் முன்னுரை

## 1. எங்கும் பிள்ளையார்

நாம் கடிதம் எழுதும் பொழுது முதலில் பிள்ளையார் சுழி போடுகிறோம்; நாளும் கிழமையும் பிள்ளையார் பூஜை செய்கிறோம்; பிள்ளையாருக்குக் குட்டிக் கொண்டு, தோபபுக்கரணம் போட்டால் எடுத்த காரியம் சித்தி யாகும்; பிள்ளையாருக்குத் தேங்காய் உடைத்தால் நலம் என்று கருதுகிறோம்; பிள்ளையாரைப் பாடி வணங் கியே எதையும் தொடங்குகிறோம்.

## 2. அகர—உகர—மகரம்

கணபதி ஓங்கார வடிவம். யானையே 'ஓம்' என்று தெளி வாகப் பிளிறும்: யானை கப்பீரமான தோற்றமும், அயரா உழைப்பும், திட பலமும், அறிவும் கொண்டது. தாவர உணவையே உண்டு, சக்தியுடன் பொலியும் யானை முகத்தைக் கணபதிக்குத் தந்தனர் நம் அருட்பெரியோர். கணபதி உருவைக் கவனியுங்கள். கால் மடித்து அமர்ந்த கோலம் அகரம் போலும், வயிறு மகரம் போலும், தலையும் துதிக்கையும் உகரம் போலும், அகர உகர மகர ஓங்காரமே கணபதி வடிவானது. குண்டலி சக்தியே மூஷிகம். பாசத்தை அறுக்கும் பாசாங்குசமும், பதியறிவைத் துலக்கும் கொம்பெழுத்தாணியும், ஏழுலகும் ஈசுவர சக்தியில் அடக்கம் என்பதற்காக மோதகமும், சாதனத் திற் சிறந்த ஜபயோகத்தைக் காட்ட ஜபமாலையும் கணபதி கையிற் காண்கிறோம். நான்கு கரங்கள் சரியை, கிரியை

யோக, ஞான சாதனங்களால் தர்மார்த்த காம மோட்சப் பயன்களைப் பெறும் அறிகுறிகளாகும். சிவனைப் போலவே கணபதிக்கும் முக்கண் உண்டு ; நடுக்கண் ஞானக் கண்.

## 3. உருவில் உள்ள திரு

கடவுள் ஒன்றே. அது அனந்தகுண சின்மயம். அதன் குணங்களுக்கேற்ற பல பெயர் வடிவுகளைத் தந்து நாம் உபாசிக்கின்றோம். இலிங்கம் அந்தராத்ம வடிவம். நடராஜா ஐந்தொழில் வடிவம். முருகன் சிவக்கனல் வடிவம். தட்சிணாமூர்த்தி மோன ஞான போத வடிவம். பராசக்தி பரம்பொருளின் இச்சா, கிரியா, ஞானசக்தி வடிவம். அவ்வாறே கணபதி இறைவனுடைய திவ்விய வல்லமையின் வடிவமாகும். சிவகணங்களுக்குத் தலைமை பூண்டு அசுர பலத்தை அழிக்க முனைந்ததும் கணபதியே. ஔவையார் கணபதி உபாசனையால் சக்தியும் முக்தியும் அடைந்தார். லோகமான்ய திலகர் கணபதி உபாசனை செய்தே மேடை ஏறினர். காரிய சித்தி அளிக்க கணபதி எங்கும் முன்னே நிற்கிறார்.

## 4. கணபதி வழிபாடு

ஆவணி சதுர்த்தியன்று கணபதி வழிபாடு நாடெல்லாம் நடைபெறுகிறது. நாடோறும் வழிபாடு செய்தல் நலம். காலை எழுந்து மலர்களைக் கொய்து வருக. நன்றாக நீராடி, தூய ஆடை அணிந்து, சிவ சின்னங்கள் தரித்து பக்தியுடன் பூஜை அறையிற் புகுக. திருவிளக்கு ஏற்றுக. உறுதியாக அமர்க. கணபதி திருவுருவை ஐந்து நிமிஷம் தியானம் செய்க. பிறகு "ஓம் கணபதி" என்ற மந்திரத்தை ஜபமாலையில் 108 தடவை செய்க! தோத்திரம் செய்தபின் மலர்களைத் தூவி அர்ச்சனை

செய்க. தூபம், தீபம் காட்டுக. நிவேதனம் செய்து வரம் வேண்டித் துதி பாடுக. முடிவில் ஒரு நிமிஷம் தியானம் செய்து இதயத்தில் உபாசனு மூர்த்தியை ஆவாகனம் செய்து கொண்டு பாடுக.

## 5. தத்துவ விளக்கமே

இத்தகைய விநாயகரை நமது முன்னோர்கள் கிராமந்தோறும், குளக்கரைதோறும், தெருத்தெருவாய் நாட்டிக் கோவில் கட்டித் தொழுதுவந்திருக்கிறார்கள். ஔவையார், அருணகிரிநாதர், ஞானசம்பந்தர், வள்ளலார் எல்லாரும் பிள்ளையார் வழிபாடு செய்தனர் வேதமந்திரம் "கணாநாம் த்வா கணபதிம் ஹவாமஹே" என்று தொடங்குகின்றது. ஆதி சங்கர பகவானின் "கணேச பஞ்சரத்னம்" புகழ் பெற்றது. "ஸமஸ்தலோக சங்கரம் க்ருபாகரம க்ஷமாகரம் முதாகரம் யசஸ்கரம், மனஸ்கரம் நமஸ்க்ருதாம்" என்று போற்றுகிறார் சங்கரர். நமது ஹிந்து தர்ம தத்துவங்களின் உயிரோவியமே விநாயகர்.

## 6. அருட்புகழனர்

அத்தகைய விநாயகரை நமது **அருட்கவி சேதுராமப் புலவர்** இனிய சந்தத்தமிழில் உள்ளங்கனிந்து பாடியிருக்கிறார். திரிசூலத்திற்கு அருகே நங்கைநல்லூரில் உள்ள ஸ்ரீ வரசித்தி விநாயகர் கோவிலுக்கு இனி யோகந்தான். பாடல்பெற்ற தலங்களை நாம் பாராட்டிப் பணிகிறோம. ஒரு நல்ல கவியின் வாக்கினால் பாடல் பெறுவது மிகவும் அரிது. ஸ்ரீ வரசித்தி விநாயகரைப் பாட நமக்கொரு அருட்கவி எழுந்தது பெரும்பேறாகும். இவரது கவியருவியை நான் அள்ளிப்பருகி உள்ளங் குளிர்ந்துள்ளேன்.

ஸ்ரீ சேதுராமரும், அவர் சகோதரர் ஸ்ரீ சுப்பிரமணியமும் இனிய குரல்படைத்த செந்தமிழ் வித்தகர். சேது

பாட்டும் சகோதரர்குரலும் சேர்ந்து நம்உள்ளத்தை உருக்குகின்றன. அருட்கவி பதினேழு அருட்புகழ் பாக்களால் ஸ்ரீ வரசித்தி விநாயகரின் தத்துவங்களை விளக்குகிறார். இந்தப் பதினேழு கவிகளுக்கும் அவர் தமையனாரே விளக்கம் தந்துள்ளதும் அருட்பேறே.

சிந்தனைக்கும் வந்தனைக்கும் தரிசனைக்கும் உரிய விநாயகரிடம் அருட்கவி உலகம் உய்யக் கேட்கிறார்வரம் :

"உலகமெலாம் ஒரு குறையும் இன்றி உயவேண்டும்
பலகலையும் படிப்படியாய் மேலோங்க வேண்டும்
பாரெங்கும் ஒத்திமையாம் மதம் பரவ வேண்டும்"

## 7. சமயப் பாதுகாப்பு

ஆம்; சமயப் பாதுகாப்பே **சகப் பாதுகாப்பு**. சமய உணர்ச்சி குன்றினால், சன்மார்க்க நெறி தவறினால், மனிதன் தாமச அரக்கனாகிறான். அறந்தவறினால் அழிவு தான். இதை நம்மவர் கருத்திற் கொண்டு சமயாசாரங்களைச் சரிவரப் பின்பற்ற வேண்டும். உடலெடுத்த பயன் கடவுளை அடைவதே. கடவுள் மனங்கடந்து நம் உள்ளே உள்ளமாகத் துடிக்கிறார். அவரை உணராத வாழ்வு எதற்கும் உதவாது. முழுமுதற் கடவுளாக வணங்கும் மஹாகணபதியைத் தியானம் செய்கிறேன்.

செல்வக் கணபதியே சித்தி விநாயகனே
கல்விக் கடலே என் கண்மணியே—வெல்லுஞ் சொல்
ஈந்துன்னைப் பூசிக்கும் இன்பந் தரவேண்டும்
சார்ந்துன்னை வாழ்ந்தேன் சரண்.

யோக சமாஜம்,
அடையாறு, சென்னை-20
1—9—67.

**சுத்தானந்த பாரதி**

# பதிப்பாளர் முகவுரை

புதியதாக நிர்மாணம் செய்யப்பட்டு துரிதமாக அபிவிருத்தி அடைந்து வரும் நமது நங்கைநல்லூர்க் காலனியில் விநாயகர் கோயில் ஒன்று இருக்க வேண்டு மென்ற எண்ணம் அன்பர்கள் உள்ளத்தில் உதித்தது. இந் நல்லெண்ணம் கோயிலாக உருவாகியது ; 31—5—1964ல் கும்பாபிஷேகமும் நடைபெற்றது. கடந்த மூன்ருண்டுகளாக ஸ்ரீ வரசித்தி விநாயகர் நமக்கெல்லாம் அருள் பாலித்துக் கொண்டு வருவது நாம் அறிந்ததே.

நம் விநாயகருக்கு என்று தனியாகத் தோத்திரப் பாடல்கள் இருந்தால் நல்லதெனக் கருதினேம். இரண்டு ஆண்டுகளாக நங்கைநல்லூரில் வாழ்ந்துவரும் அருட்கவி ஸேதுராமன் அவர்களை அணுகி ஸ்ரீ விநாயகர் சந்நிதியில் பாடல்கள் பாடவேண்டுமென்று விஞ்ஞாபித்துக்கொண் டோம் ; அவரும் மனமுவந்து இசைந்தார். 29—1—1967ல் அருட்புகழ்ப் பாடல்கள் நிகழ்ச்சியும் நன்ருக நிறைவேறியது.

ஸ்ரீ விநாயகர் மீது நான்கு சந்தப் பாடல்களும், பதின் மூன்று விருத்தப்பாடல்களும் பாடினர். சந்நிதியில் நின்ற வாறே தட்டுத்தடங்கலின்றி ஒன்றன் பின் ஒன்ருகப் பாடல் கள் வரும் முறையும், அவை ராகம், தாளம் இவற்ருேடு இணைவதும், அப்பாடல்கள் அங்கிருந்து எழுது வோர் எழுதிக்கொள்வதற்குத் தகுந்த முறையில் பாடப் பெறுவதும் அருகிருந்து கண்டு அநுபவிக்கத் தக்கவை. இது ஒரு அருமையான வாய்ப்பேயாகும். இவ்வாய்ப்பு நமது காலனி அன்பர்கட்கு அன்று கிடைத்தது. எல்லோரும் கேட்டு ஆனந்தமடைந்தனர்.

பிறகு மேற்படி பாடல்கள் பதினேழும், நம்கோயில் மண்டபத் திருப்பணிக்காக வெளியிடப்பட்ட மலரில் அச்சிடப் பெற்றன. இப்போது பாடல்கள், அருட்கவியார் தமையனுர் அருளிசை ஸ்ரீ சுப்ரமண்யம் அவர்கள் எழுதித் தந்துள்ள குறிப்புரையுடன் "நங்கை நல்லூர் ஸ்ரீ வரசித்தி விநாயகர் அருட்புகழ்" என்னும் பெயரில் தனிப்புத்தகமாக வெளியிடப் பெறுகின்றது. ஸ்ரீ விநாயகரைப் பற்றிய பல புராண, தத்துவ உண்மைகள் இப்பாடல்களில் காணக் கிடக்கின்றன.

எங்கள் விருப்பத்தின்படி வந்து பாடிக் கொடுத்த அருட்கவி ஸ்ரீ சேதுராமன் அவர்கட்கும், பாடல்கட்குக் குறிப்புரை எழுதிக் கொடுத்த ஸ்ரீ சுப்ரமண்யம் அவர்கட்கும், சிறப்பான முன்னுரை வரைந்து உதவிய கவியோகி மகரிஷி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கட்கும், அழகாக அச்சிட்டுக் கொடுத்த திருவல்லிக்கேணி "பாரதி விஜயம்" அச்சகத்தார்க்கும் எங்கள் உளங்கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். ஸ்ரீ வரசித்தி விநாயகரின் திருவருள் எல்லோர்க்கும் பூரணமாகக் கிடைத்து உலகமெலாம் க்ஷேமமுற வேண்டுமென அப்பெருமானுடைய திருவடிகளை இறைஞ்சுகின்றோம்.

நங்கைநல்லூர்,
சென்னை-61.
4—9—67.

**ஸ்ரீ கணேஷ் மண்டலியினர்**

உ

ஸ்ரீ வைஷ்ணவி துணை

# நங்கைநல்லூர் அருட்புகழ்

## [வரஸித்தி விநாயகர் திருமுன்]

**(29—1—1967)**

[சென்னை-61 நங்கைநல்லூர்க் காலனியில் (திரிசூலபுரம்) திருக்கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ வரசித்தி விநாயகக் கடவுள் மீது அருட்கவி ஸ்ரீ சேதுராமன் அவர்கள் 29—1—'67 அன்று திருவருளுந்தப் பாடிய அருட்புகழ்ப் பாடல்கள்]

### I. சந்தப்பா

காட்டை ராகம்] 1. திருவருள் பெற [சதுச்ரஜாதி அடதாளம்

தந்தன தானன தத்தன தானனத் தனதான

இந்திர ஜாலம் எனச்சமு சாரமித் தையையேகண்-
டின்பம கோததி துய்த்தடி யார்குழுப் புகுதாமே;
அந்திரர் நூறில் அறக்கழி நாலுதத் துவமாவோர்-
அங்கையு ளோடி அகப்படு வேனெனக் கருள்கூர்வாய்;
சந்திர சேகரி புத்திர னே!தமிழ்த் த்ரயவேளைத்-
தம்பியெ னுஅழை புத்திக ணேச!தைத் தியகாலா;
நந்தி குமார! கணத்தலை வா!சென்னைக் கருகான-
நங்கை நலூர்வர சித்தி விநாயகப் பெருமானே.(1)

1. குறிப்புரை:—இந்திர ஜாலம்-மாய வித்தைகள். மித்தை -பொய். மகா உததி-பெருங்கடல். துய்த்து-அநுபவித்து. குழு-கூட்டம். அந்திரர்-வேடுவர். நூறில் அற-100-இல் அற்றுப்போமாறு. கழி-கழித்துவிட்ட. 100-4 = 96. தத்துவங்கள் தொண்ணூற்ருறு என்ப. அகப்படுவேன்—மாட்டிக்கொள்வேன். சந்திர சேகரி-சந்திரனைத் தலையில் தரித்துள்ள பார்வதி தேவி. தமிழ்த் த்ரயவேள்-முத்தமிழுக்குரிய முருகவேள். தம்பின்-தம்பி. புத்தி கணேச-பிரம புத்திரியாம் புத்தியை மணந்த கணபதியே! அல்லது அந்தக் கரணங்கள் நான்கனுள் புத்திக்கு வலிமை தரும் கணநாயகனே! தைத்திய காலா-அசுரர்களுக்கு யமனே! நந்தி-சிவபிரான். 'நந்தி நாமம் நமச்சிவாயவே' - சம்பந்தர் - '(மந்தரம்மன')' 'நந்தி என்னல் தொழப்படும் எம்மிறை'-திருமந்திரம்-9. கணத்தலைவா-சிவ கணங்களுக்கு அதிபதியே! செனைக்கு—சென்னைக்கு. நங்கைநலூர்-நங்கைநல்லூர். நலூர் என்பது இடைக்குறை.

பொழிப்புரை:—(சடையில்) மதியைச் சூடிய பார்வதி தேவியின் புதல்வனே! முத்தமிழ் வேளாம் முருகனைத் 'தம்பீ!' என்று அழைக்கும் புத்தி கணபதியே! அசுரர்களுக்கு யமன் போன்றவனே! சிவகுமாரனே! (சிவ)கணத் தலைவனே! சென்னைக்கு அருகில் இருக்கும் **நங்கைநல்லூர்** என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் **வரசித்திவிநாயகனும்** பெருமைக்குரியவனே! மாயாஜால வித்தை எனச் சொல்லப்படுகின்ற, பொய்யான, ஸம்ஸார வாழ்க்கையையே சதமாக நம்பிக்கொண்டும், பரமாநந்த ஸாகரத்தில் மூழ்கி அடியார் கூட்டத்துள் ஒன்றுசேர்ந்து இன்புருமலும், தொண்ணூற்ருறு தத்துவங்களாகிற வேடர்களின் அழகிய கைக்குள் தானே ஓடி மாட்டிக்கொள்பவனுகிய எனக்கு உன் திருவருளை மிகுதியாகச் செய்தருள்க! (அதாவது சமுசார வாழ்விலிருந்து விடுபட்டுப் பக்தர் கூட்டத்துடன் ஒன்று சேர்ந்து, இனிப் பிறவாத நிலையை எய்தத் திருவருள் பாலிப்பாயாக என்றபடி).

ஆரபி] 2. இறைவனின் ஆசி பெற [ஆதி

தந்தன தானன தத்தன தான
தந்தன தானன தத்தன தான
தந்தன தானன தத்தன தானத் தனதான

தந்தி முகேசுர ! மத்தள மான
தொந்தி மகோதர ! தொப்பைய ஞன
சந்திர சேகர ! தற்பிர தாபக் கணநாதா-
சங்கரி நேரென மெய்க்கர பாச
அங்குச தாரண ! முக்கணு மாய
சந்திர சூரிய அக்கினி பாலக் கணனே!நீள் ;
இந்திர கோபம் எனச்செய மேனி
சுந்தர மாய முதற்றெய்வ மே!பல்
இந்திரர் வேதர் உருத்திரர் பூசித் திடுபாதா-
எங்களுள் யாவரும் அற்புத மான
இன்பநல் வாழ்வு நிகழ்த்தவும் ஞாந
இங்கித மோநம் உணர்த்தியுன் ஆசிப் புகல்கூறும்;
நந்திகி ராம மதிற்பர தாழ்வ
நம்பியை ஆள, அரக்கனு மாள
நம்பிய பேரை அடைக்கலம் ஈயப் புரிலீலை-
நம்பெரு மாள்முள ரித்திரு நாதர்
எம்பெரு மானென உற்றிசை போத !
நஞ்சுகி ரீவம் அடைத்த பிநாகச் சிலையாளி ;
நந்திரி கூட மலைக்கிறை நாக
லிங்க புராரி சிவப்பர மேசர்
நண்டரி நாரை தொழத்திரு வீடுற் றருள்நீதர்—
நங்கள் விதாத புரிப்பிர மேசர்
தங்கி உலாவு சுரத்தரு கான
**நங்கை நலூர்வர சித்தி கணேசப்** பெருமானே. (2)

2. (கு. உ.) தந்தி-யானை. மத்தளமான தொந்தி-'மத்தள வயிறனை '-அருணகிரிநாதர் ('கைத்தல'). மகா உதரம்-பெருவயிறு; தொப்பை என்பதும் அஃதே. 'தொப்பையப்பற்கு' என்றார் அருணகிரியாரும். (திருப்-('தத்துவத்'). சந்திரசேகர-பிறை சூடியவனே! விநாயகர் தலையிலும் சந்திரன்: "கற்றைநெடுஞ் சடாமவுலிப் பிறையுமொரு தன் கோடுங் கரத்திற் சேர்த்தி...........நேயம் பெற்ற மழ களிற்றை"—திருக்கூவப் புராணம்; "கங்கையும் பனிவெண் திங்களும்......முக்கணுங் தாதை தானுவென்றுணர்த்த"—பேரூர்ப்புராணம். தத்பிரதாபம்-அந்தப் புகழ்ச்சி என்பது உலகறி சுட்டாகக் கடவுட்டன்மைக்கே உரிய பெரும்புகழை உணர்த்திற்றென்க. தன் பிரதாபம்-தற்புகழ்ச்சியில் விருப்பமுடைய எனினுமாம். ஏனெனில் தெய்வங்கள் தம் புகழில் தாமே விருப்பமுள்ளவை; அவை அப்படி விரும்பாவிடில் அடியார் பெருமக்கள் தெய்வப்புகழை ஓதி உய்வதெங்ஙனம்? 'ஸ்வாத்மா ராமாயை', 'ஸ்தோத்ரப்ரியாயை' 'ஸ்துதிமத்யை' முதலிய லலிதா ஸஹஸ்ரநாம நாமாவளிகளைக் காண்க. 'தாம் படிமக்கலம் வேண்டுவரேல் தமிழ் மாலைகளால் ஆம்படிமக்கலம் கொண்டு தொழுதுய் மட நெஞ்சமே' என்றார் அப்பரடிகளும். சங்கரி-பார்வதி. கரபாச அங்குச தாரண-கையில் பாசாங்குசங்களை ஏந்தியவனே! 'அங்குசபாச கரப்ரசித்த'-திருப்புகழ் ('அஞ்சனவேல்விழி') பார்வதிக்கும் பாசாங்குசங்களுண்டு; அதேபோல் கணபதிக்குமாம். ஆதலின் 'சங்கரி நேரென' என்றார். "மென் மலர்க்கை அங்குசபாசம் அணிந்து வெற்புயிர்த்த ஆரணங்கன்னையென்றுணர்த்தி"— பேரூர்ப்புராணம். முக்கணும் ஆய-மூன்று திருக்கண்களாகிய. விநாயகர்க்கு முக்கண்: 'முக்கண் விக்ரம கணராஜ'-திருப்புகழ் ('அஞ்சனவேல்விழி') சந்திர சூரிய அக்கினி-மதி, கதிர், தீ ஆகிய மூன்றும் முக்கண்கள். அதில் தீ-நெற்றிக்கண். பாலக்க(ண்)ணன்-நெற்றிக்கண்ணுடையவன். 'ஸோம ஸூர்யாக்நி லோசனாய நமঃ' —சிவாஷ்டோத்தரசதம்-43. இந்திர கோபம்-தம்பலப் பூச்சி. செய-செய்ய; சிவந்த. சுந்தரம்-அழகு. விநாயகர் திருமேனி சிவப்பு: 'வித்தகத்திப் பவள தொப்பையப்பற்கு'-திருப்புகழ் ('தத்துவத்துச்'). முதல் தெய்வம்-முன்னவன். பல் இந்திரர்-பல தேவேந்திரர்கள். வேதர்-பிரமர்கள். உருத்

திரர்-ருத்ரர்கள். இந்திரர், பிரமர் முதலியோர் பலருண்டு: ‘ நூறுகோடி பிரமர்கள் நொந்தினர் ஆறுகோடி நாராயணர் அங்ஙனே ஏறு கங்கை மணல் எண்ணில் இந்திரர் ஈறிலாத வன் ஈசன் ஒருவனே ’ என்பது அப்பர் வாக்கு. இங்கிதம்-பக்குவம். ஆசிப்புகல்-ஆசீர்வசனம் ; ஆசீர்வாத வார்த்தை. நந்திகிராமம்-நந்திக்கிராமம் என்பது ராமன் கானகம் சென்றிருந்த காலத்துப் பரதன் வாழ்ந்த இடம். பரதாழ்வ நம்பி-பரதாழ்வான் என்னும் சிறந்த ஆண்மகன். அரக்கன்-இராவணன். நம்பிய பேர்-விபீஷணன், சுக்ரீவன் முதலியோர். புரிலீலை-லீலைபுரிந்த. நம்பெருமாள்-இராமபிரானேயான ஸ்ரீ ரங்கநாதர். முளரித்திரு-தாமரையில் வாழும் இலக்குமி. இசை-புகழ்ந்தோதிய. கிரீவம்-கழுத்து. பிநாகச் சிலையாளி-‘ பிநாகம்’ என்னும் வில்லைஆள்பவர். நம்-நமது. திரிகூடமலை-திருக்குற்றாலமலை. நாகலிங்கம்-நாகை நாகநாதர் கோயில், குடந்தை நாகேச்வர ஸ்வாமிகோயில், திருநாகேச்சரம் முதலிய தலங்களில் வீற்றிருக்கும் சிவபிரான். நண்டு,அரி, நாரை தொழ-நண்டு சிவபிரானைப் பூசித்து முத்திபெற்றது திருநீடூரிலும், திருந்துதேவன் குடியிலும். அரி-கிளி ; குதிரை ; குரங்கு ; சிங்கம் ; தவளை ; பன்றி ; பாம்பு ; மயில் ; வண்டு. கிளிதொழுத தலம்-கிளிக்காடு ; சுகவனம் ; சேலம். குதிரை பூசித்த பதி-அயவந்தி ; திருச்சாத்தமங்கை. குரங்கு பணிந்த ஊர்கள்-குரக்குக்கா, குரங்கணின் முட்டம், தென்குரங்காடு துறை, வடகுரங்காடு துறை, குரக்குத்தளி, வாலிகண்டபுரம். சிங்கம் வழிபட்ட தலம்-திருநல்லூர். தவளை இறைஞ்சிய பதி-ஊற்றத்தூர் (தேவார வைப்புஸ்தலம்). பன்றிபணிந்த ஊர்-சிவபுரம். பாம்பு பூசித்த தலங்கள்-காளத்தி, திருநாகேச்சுரம், நாகபட்டினம், குடந்தைக் கீழ்க்கோட்டம், பாதாளேச்சுரம், பாம்புரம். மயில் அருச்சித்த பதிகள்-மயிலாப்பூர் ; மாயூரம். வண்டு வழிபட்ட ஊர்கள்-ஸ்ரீ சைலம், திருவெண்டுறை, வாளொளி புற்றூர். திருவீடு—முத்திவீடு. நீதர்-நீதிமான். நங்கள்-நமது. விதாதபுரி-பிரமபுரி. விதாதன்-பிரமன். பிரமேசர்-ப்ரஹ்மேச்வரர். சுரம்-திருச்சுரம் ; பல்லவபுரத்தருகே ‘திரிசூலம்’ என வழங்கும் தலம்; ‘ திருச்சுரம் ’ என்பது திரிசூலம் என மருவி வழங்குகின்றது. திருச்சுரத்திற் சிவபிரான் திருநாமம் பிரமேசன், பிரமபுரீசன் என்பனவாம்.

(பொ—உ) நந்திக்கிராமத்தில் வாழ்ந்துவந்த பரதாழ்வானெனும் நம்பியை ஆட்கொள்ளும் பொருட்டும், இராவணனாகிய இராக்கதன் இறந்து போகவும், தம்மை நம்பியிருந்தவர்களாகிய விபீஷணன், சுக்ரீவன் முதலியோர்க்கு அடைக்கலங்கொடுத்துக் காப்பாற்றும் பொருட்டும் (இராமாவதாரம் எடுத்துத்) திருவிளையாடல்கள் செய்த 'நம்பெருமாள்', 'அழகிய மணவாளன்' என்றெல்லாம் பெயர்பெற்ற ஸ்ரீ ரங்கநாதரும், தாமரையில் வாழும் இலக்குமி தேவிக்குக் கணவருமாகிய திருமால், 'எமக்கெல்லாம் தலைவரே' என்று பொருந்தப் புகழ்பாடுகின்ற பேரறிவாளனே! விஷத்தைக் கழுத்தில் அடைத்துவைத்துள்ளவரும், 'பிநாகம்' என்னும் வில்லை ஆயுதமாக ஆள்பவரும், நமது, 'திரிகூடமலை' என்னும் திருக்குற்ருலமலைக்கு இறைவரும், 'நாகலிங்கம்' எனப் பேருடையவரும், திரிபுர மெரித்தவரும், சிவனெனும் திருநாமமுடைய பரமேச்வரரும், நண்டு, (அரி) கிளி, குதிரை, குரங்கு, சிங்கம், தவளை, பன்றி, பாம்பு, மயில், வண்டு, நாரை முதலியன வழிபட அவற்றிற்கு முத்தி வீட்டைக் கொடுத்தருளிய நீதிமானும், நம்முடைய 'பிரமபுரி'யில் வாழும் ப்ரம்மேச்வரரும் ஆகிய சிவபிரான் வீற்றிருந்து திருவுலாக் கொள்கின்ற 'திருச்சுரம்' என்னும் தலத்துக்கு அருகாமையில் உள்ள நங்கை நல்லூர் என்ற திவ்ய க்ஷேத்திரத்தில் விளங்கும் வரசித்தி விநாயகனென்னும் பெருமைக் குரியவனே!

யானை முகத்தை உடைய ஈச்வரனே! மத்தளம் போற்பருத்த கொப்பூழை உடைய பெரியதிருவயிற்றினனே! தொப்பையப்பனுய்ச் சந்திரனைத் தலையிற் சூடியுள்ளவனே! (உலகறிந்த) பெரும்புகழ் படைத்த சிவகணத் தலைவனே! திரிபுர சுந்தரி தேவியைப் போல (நிறத்தாற்சிவந்த) உடம்பும், கையில் பாசாங்குசங்களும் தரித்துள்ளவனே! மூன்றுகண்களாகிய சந்திரன், சூரியன் அக்நியாகிய நெற்றிக்கண் இவற்றை உடையவனே! பெரிய, இந்திர கோபப் பூச்சியைப்போலச் சிவந்த திருமேனி அழகுபடைத்த முதற்கடவுளே! பல இந்திரர்களும், பிரமர்களும் ருத்ரர்களும் அர்ச்சனை செய்யும் திருவடிகளை உடையவனே! நாங்கள் யாவரும் அதிசயமான நல்ல இன்பவாழ்வு நடாத்த, ஞானபரிபக்குவமும், மவுநநெறியும் உணர்த்தி உனது ஆசீர்வசனங்களைக் கூறியருளுக!

சாமா] **3. இறையன்பு பெற** [ஆதி

தந்தன தானன தந்தன தானன
தந்தன தானன தந்ததான

மந்திர ஓமுரு வங்கொடு நாடொறும்
வந்தனை பேணுநர் சிந்தைமேவும்-
மங்கள தாயக! ஐங்கர நாயக!
வண்கமு நீரொடு தும்பைசூடி;
இந்திர சாபமெ னும்படி வாணுதல்
இந்திர நீலமெ னுங்கணுள்வார்-
எம்பிர மாஅரி பெண்கள் மரீசிபெண்
இன்ப மனோகர! அன்புகூர்வாய்;
தந்திர மாயம்வல் தந்திமு காசுர
தண்ட! புராதன! சஞ்சரீக-
சங்கிதம் ஓய்வறு தண்டலை நீள்வயல்
தண்புனல் ஏரிகள் பைந்தடாகம்;
நந்திடு மாபுடை எங்கணு மேதவழ்
நம்படை யாளமி லங்குபூதூர்-
நந்தமிழ் மாமறை அந்தணர் வாழ்திரு
நங்கை நல்லூருறை தம்பிரானே. (3)

3. (கு.உ.) மந்திர ஓம்-பிரணவ மஹாமந்த்ரம். ஓம் உருவம் கொடு-பிரணவ வடிவம் கொண்டு. பேணுநர்—விரும்பிச் செய்பவர்கள். மங்கள தாயக - சுபத்தைக் கொடுப்பவனே! வண்-வளப்பம் பொருந்திய. கழுநீர்-செங்கழுநீர்ப்பூ. செங்கழுநீர்ப் பூவை விநாயகரும் சூடுவர். 'கல்லைச் செங்கழுநீர் விநாயகர்' என்றே ஒரு விநாயகர்க்குத் திருநாமம் உண்டு. சூடி-சூடினவனே! இந்திர சாபம்-இந்திரன் வில் என்னும் வானவில். வாள் நுதல்-ஒளி பொருந்திய நெற்றி. இந்திர நீலம் எனும் கண்-நீலோத்பல புஷ்பம் போன்ற திருக்கண்கள். ஆள்வார்-உடையவர்கள். பிரமா-பிரமன். பிரமா பெண்-சித்தி, புத்தி இருவரும் பிரம தேவரின் பெண்கள். அரி பெண்கள்-" 1. மோதை. 2. பிரமோதை. 3. சுமகை. 4. சுந்தரி. 5. மனோரமை. 6. மங்களை. 7. கேசினி. 8. காந்தை. 9. சாருஹாஸை. 10. சுமத்யமை. 11. நந்தினி. 12. காமதை-விஷ்ணுகுமாரிகள்"—அபிதான சிந்தாமணி-பக்கம் 1440. மரீசிபெண்-வல்லபை. "மரீசி ப்ரஜாபதியின் தேவி தேவவல்லி என்பவளிடம் சக்தி வல்லபையாகப் பிறந்தனள்"—அபிதான சிந்தாமணி-பக்கம் 1268. மரீசி-பிரமபுத்திரர்; காசிபர் தந்தை. மனோஹர-கணவனே! தந்திர மாயம் வல்-மாயா தந்திரங்களில் வல்லமை படைத்த. தந்திமுகாசுர தண்ட-கஜமுகாசுரனைத் தண்டித்தவனே! புராதன-பழைமையானவனே! சஞ்சரீக சங்கிதம்-வண்டுகளின் ரீங்கார இன்னிசை. சந்தம் நோக்கிச் 'சங்கீதம்' சங்கிதம் எனவந்தது. ஓய்வு அறு-ஓய்தல் இல்லாத; எப்போதும் நிகழ்ந்து கொண்டிருக்கிற. தண்டலை-சோலை. தண்புனல்-குளிர்ந்த நீர். பைந்தடாகம்-பசிய குளங்கள்; கண்ணுக்குக் குளிர்ச்சியூட்டுவதாற் பைந்தடாகம் எனப்பட்டது. நந்திடுமா-விளங்குமாறு. புடை எங்கணும்-சுற்றுப்புறச் சூழ்நிலைகள் எங்கிலும். நம்பு அடையாளம் இலங்கு பூதூர்-விரும்பத்தக்க அறிகுறிகள் காணப்படுகின்ற புதிய ஊர். நங்கைநல்லூர் புதிதாகநிர்மாணிக்கப்பட்ட ஊராதலின் 'பூதூர்' எனப்பட்டது. தமிழ்மாமறை அந்தணர் - நாலாயிர திவ்யப் பிரபந்தமென்னும் தமிழ் வேதங்களில் வல்லுநர்களான வைணவ அந்தணர்கள். தமிழ் அந்தணர், மாமறை அந்தணர் எனப்பிரித்துத் தமிழ் வேதமாகிற தேவார, திருவாசகங்களில் வல்லமை மிக்க அந்தணர்களும், ரிக்,

யஜுர், ஸாமம், அதர்வணமென்னும் வடமொழி நால் வேதங்கள் பயின்ற சிறந்த அந்தணர்கள் எனவும் பொருள் கொள்ளலாம். திருநங்கை நலூர்-திருமங்கையாம் லக்ஷ்மி வாஸம் செய்யும் நல்ல ஊர்; பவழந்தாங்கலில் கல்லூரிச் சாலையில் உள்ள பஜனை மடத்தில் இலக்குமி தேவியோடு நாராயணமூர்த்தி குடிகொண்டிருப்பதால், இதுவே பழைமை வாய்ந்ததென்றும் இங்கு வீற்றிருக்கும் நங்கையாம் இலக்குமியின் பெயராலேயே இவ்வூருக்கும் 'நங்கை நல்லூர்' என்று பெயர் வந்ததென்பாருமுளர்.

(பொ. உ.) மாயையிலும், தந்திரங்களிலும் வல்லவனான கயமுகாசுரனைத் தண்டித்து அழித்தவனே! மிகப் பழைமையானவனே! வண்டுகளின் ரீங்காரமாகிய இன்னிசை சதா நிகழ்ந்து கொண்டிருக்கும் சோலைகளும், பெரிய வயல்களும், குளிர்ந்த தண்ணீர் நிறைந்த ஏரிகளும், கண்ணுக்குக் குளிர்ச்சி தரும் பசிய நீர்க் குளங்களும் விளக்கம் பெறும்படி சுற்றுப்புறமெங்கும் சூழ்ந்துள்ள, விரும்பத்தக்க அறிகுறிகள் காணப்படும் புதிய ஊராகிய, நமது தமிழ், சிறந்த (வடமொழி) வேதங்கள் கற்ற மறையவர்கள் வாழ்ந்து வருகின்ற லக்ஷ்மிகரம் பொருந்திய நங்கை நல்லூர் என்ற தலத்தில் வீற்றிருந்தருளும் தமக்குத் தாமே பிரானுயிருக்கும் பெருமையுடையவனே! பிரணவ மந்திரமாகிய 'ஓம்' என்பதன் வரிவடிவமே திருவுருவமாகக் கொண்டு, தினந்தோறும் (உன்னை) வழிபாடு விரும்பிச் செய்யும் அன்பர்களின் மனத்தில் வீற்றிருக்கும் மங்களத்தைக் கொடுக்கும் கடவுளே! (தும்பிக்கையொடு சேர்த்து) ஐந்து கரங்கள் கொண்ட தலைவனே! வளப்பம் மிக்க செங்கழுநீர்ப் பூவும், (வெண்) தும்பைப் பூவும் சூடிக் கொள்பவனே! இந்திரன் வில்லாகிய வான வில்லைப்போன்ற வளைந்த புருவமும், நெற்றியும், இந்திர நீலம் எனப்படும் நீலோற்பல புட்பம் போன்ற திருக்கண்களும் உடையவர்களாகிய, எம் பிரமதேவரது பெண்கள் இருவர், விஷ்ணுமூர்த்தியின் பெண்கள் பன்னிருவர், மரீசி ப்ரஜாபதியின் பெண் ஒருத்தி ஆகிய இவர்கள் பதினைவருக்கும் இன்பம் கொடுக்கும் கணவனே! (நீ என் மீது) மிகுதியாக அன்பைச் செலுத்துவாயாக!

தோடி] 4. வினவுரை [ஆதி

தந்த தய்யாத் தனதான

ஒன்று பொல்லாப் புடன்வாழ்வேன்—
உய்ந்து மெய்யாற் றுறுமாறே;
ஒன்று சொல்லாப் பிழைபோக—
உன்சொல் விள்ளாத் திறமேதோ;
என்று மெய்யார்ப் பணியானே—
எங்கள் பொல்லாப் பிள்ளையாரே;
நன்று செல்வாக் குடையானே—
நங்கை நல்லூர்ப் பெருமாளே. (4)

4. (கு.உ.) ஒன்று-பொருந்திய. பொல்லாப்பு-பொல்லாங்கு; கெட்டபேர். மெய் ஆற்று-உண்மைவழியில். ஒன்று-ஏகமாகிய பிரணவ மந்திரமாகிய ஓரெழுத்தை. சொல்லாப் பிழை-செபிக்காத குற்றம். உன் சொல்-உனது திருவருள் வாக்கியங்களை. விள்ளாத் திறம்-சொல்லாததன்மை. ஏதோ-என்னவோ ? என்று-சூரியன். மெய்-உடம்பு. ஆர்ப்பு-இடைக் கட்டாகிய அரைக் கச்சு; Belt. அணியான்-ஆபரணமாக உடையவன். விநாயகருடைய இடைக்கச்சாகிய பாம்பின் இரத்தினமாகச் சூரியனே விளங்குகிறுன் என்பது வழக்கு.

'திகட சக்கரச் செம்முகம் ஐந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்'
—கந்தபுராணம்.

பொல்லாப் பிள்ளையார் - உளிவைத்துச் செதுக்கப் பெருத, சுயம்புவான விநாயகர்; (விநாயகர் என்ற) கடவுள் தான்தோன்றி ஆதலின் இங்ஙனம் கூறப்பட்டது. நன்று-நன்ருக. செல்வாக்கு-செல்லக்கூடிய வாய்ச்சொல்; அதிகாரம்.

(பொ.உ.) சூரியனை, உடம்பில் (இடுப்பிற்) கட்டும் அரைக்கச்சுக்கு ஆபரணமாக அணிபவனே! எங்களுடைய பொல்லாப் பிள்ளையாரே! 'நாவசைந்தால் நாடசையும்' என்றபடி நன்ருகச் செல்வாக்குப் படைத்தவனே! நங்கை நல்லூரிலே வீற்றிருக்கும் பெருமைக்குரியவனே! பொருந்திய தீயகுணம், கெட்டபேர் இவற்ரேடு வாழ்பவனுகிய நான் (வாழ்வாங்கு) வாழ்ந்து, சத்திய மார்க்கத்திற் செல்லும் படிக்கு, ஓரெழுத்தாகிய பிரணவத்தை ஜெபம் செய்யாத குற்றம் ஒழிய, உன் திருவாக்கால் அநுக்ரஹ வாசகத்தைச் சொல்லாத தன்மை என்னவோ? (அநுக்ரஹ வசனத்தைச் சொல்லியருளுக! என்றபடி).

## II. எண்சீரடி ஆசிரிய விருத்தப் பதிகம்

காம்போதி] ('குரும்பைமுலை' என்ற தேவாரப்பண்) [ஆதி

5

சிந்தனைக்கும் வந்தனைக்கும் தெரிசனைக்கும் உரியோய்!
செந்தமிழும் வடமொழியும் தெரியுமறைப் புலவோய்!
பந்தனைக்கும் விடுதலைக்கும் அப்பாலாம் பரனே!
பரசிவனுர் தேருருளை அச்சொடித்த திறனே!
கந்தனை எம் ஐயனைத்தொல் வீரனைக்கைக் கபாலக்
காலவயி ரவனையெலாம் தம்பியெனக் களிப்போய்!
நந்தனைப்போல் என்றனை நீ தந்தையென அணைப்பாய்!
நங்கைநல்லூர் நன்னுவர சித்திவிநா யகனே! (1)

5. (கு.உ.) பந்தனைக்கும் விடுதலைக்கும் அப்பால்—"பந்தமும் வீடும் படைப்போன் காண்க"—திருவாசகம்—திருவண்டப் பகுதி. பரசிவனுர் தேருருளை அச்சு ஒடித்த திறன்—"முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம் அச்சது பொடிசெய்த அதிதீரா"—திருப்புகழ் ("கைத்தல"). ஐயன்-ஐயப்பன்; ஐயனுர். வீரன்-வீரபத்திரன். கபாலம்-மண்டையோடு. காலவயிரவன்-காலபைரவமூர்த்தி. நந்தன்-மைந்தன்.

(பொ.உ.) மனத்தினுல் தியானிப்பதற்கும், வாயினுல் தோத்திரித்து வழிபடுவதற்கும், காயத்தால் (கண்ணுற்) கண்டு தரிசிப்பதற்கும் உரியவனே ! செம்மையான தமிழும் வடமொழியாம் ஸம்ஸ்க்ருதமும் தெரிந்து அறிந்திருக்கும் வேதத்தில் புலமையுள்ளவனே ! கட்டுப்பாட்டிற்கும் வீடு பேற்றிற்கும் அப்பாற்பட்டுத் திகழும் பரம்பொருளே ! பரமசிவனுடைய தேர்ச் சக்கரத்தின் அச்சை முறித்த வலிமையுடையவனே ! கந்தபிரான், எமதுஐயனுர், பழைமையான வீரபத்திரக் கடவுள், கையிலே பிரமகபாலத்தை ஏந்தியுள்ள காலபயிரவர் ஆகிய நால்வரையும் தம்பிமாராக மகிழ்பவனே ! என்னைப் பிள்ளையைப் போல் பாவித்து, நீ தகப்பன் என்னும் ஸ்தானத்தில் இருந்து அணைத்து ஆண்டருள்வாயாக ! நங்கைநல்லூரில் வீற்றிருக்கும் வரசித்தி விநாயகக் கடவுளே !

6

தருமதத்த முனிவரர்முன் தந்தருளும் தநயை
தம்மைமணம் புணர்ந்தருளித் தரிசநம்தந் தனையால்
கருமபக்தி யோகமொடு ஞாநமெலாம் கற்ற
கண்ணியர்கள் புண்ணியர்கள் எண்ணிமகிழ் கடவுள் !
மருமசித்தம் மலர்போலே மஞ்சமென உனக்கே
மருவுதற்கே வைத்துளன்யான் வந்துபுகுந் தருள்வாய் !
நருமதைக்கு நிகர்நதியின் தலைவிகங்கை நந்தா !
நங்கைநல்லூர் நண்ணுவர சித்திவிநா யகனே ! (2)

6. (கு.உ.) தருமதத்த முனிவரர்-இவர் பிரமதேவனது அம்சம் ; சித்தியும் புத்தியும் இவரது மகளிராக அவதரித்துக் கணபதியை மணந்தனர். தருமதத்தர்—"காசி அரசன் புரோகிதர் ; இவர் பிரமனம்சம் ; இவரிடம் சித்தி புத்திகளவதரித்து விநாயகரை மணந்தனர்"—அபிதான சிந்தாமணி-பக்கம் 788; இச்சாகிரியா சக்திகள்-சித்திபுத்திகள்-அபி. சிந். பக்கம் 323. தநயை தம்மை:—தநயை-ஒருமை. தம்மை-பன்மை. ஒருமை பன்மை மயக்கம். தநயை-தநயைகள் எனப் பொருள்படும் ஈண்டு. கருமபக்தி யோகமொடு ஞாநம்-

கர்மயோகம், பக்தியோகம், ராஜயோகம், சிவயோகம், ஞாந யோகம் முதலியவை. கண்ணியர்கள்-மதிக்கத்தக்கவர்கள். மருமசித்தம்-ரஹஸ்யமான எனது உள்ளம். மஞ்சம்-படுக்கை. நருமதைக்கு நிகர் நதியின்-நர்மதைக்கு நேரான ஆறுகளின். தலைவி கங்கை-நர்மதை முதலான நதிகளுக்குத் தலைவியாய் விளங்கும் கங்காநதி. நந்தா-நந்தனே; மைந்தனே !

(பொ.உ.) தருமதத்த முநிவர் முன்பு பெற்றருளின பெண்களாகிய சித்தி, புத்தி இருவரையும் திருமணம் புரிந்து கொண்டு அவருக்குத் திருமணத் திருக்கோலக் காட்சி கொடுத்தவனே ! கர்மயோகம், பக்தியோகம், சிவ, ராஜ யோகங்கள், ஞாநயோகம் எல்லாவற்றையும் கற்றறிந்த மஹான்கள், புண்ணியசாலிகள் இவர்களால் தியாநிக்கப் பட்டு மகிழப் பெறுகின்ற கடவுளே ! (என்னுடைய) ரஹஸ்ய மான மனத்தை நீ வீற்றிருக்கத் தக்க மலர் போலவும், நீ பள்ளி கொள்ளத்தக்க படுக்கை போலவும், உனக்காகவே, நீ வந்து பொருந்தி வீற்றிருந்து பள்ளி கொள்வதற்காகவே (தயாராக)நான் வைத்திருக்கிறேன். நீ வந்து என்னுள் புகுந்து கொண்டு திருவருள் புரிவாயாக ! நர்மதை போன்ற பலநதிக் கூட்டங்களுக்கெல்லாம் தலைவியாகிய கங்கா நதியின் மகனே ! [கங்கை, விநாயகருக்குச் சிற்றன்னை உறவாகின்றமையின் கங்கைக்கும் குழந்தையே எனப்பட்டது]. நங்கைநல்லூரில் வீற்றிருக்கும் வரசித்தி விநாயகக் கடவுளே !

7

மூலாதா ரக்கனலை மூட்டுவிக்கும் சுடரே !
மும்முடிச்சை அவிழ்த்தருளுங் குண்டலிநிப் பணியே !
காலாதா ரங்கொடுத்துப் பக்தர்களைக் கடைக்கண்
காட்டியணைத் தாண்டருள்செய் கருணையெனுங்கடலே!
மேலாதா ரங்கடந்த கற்பூர விளக்கே !
விழுச்சுழுனை இடகலைபிங் கலைவிளக்கும் உயிரே !
நாலாதா ரத்தொடிரண் டாள்தரும்நா யகனே !
நங்கைநல்லூர் நண்ணுவர சித்திவிநா யகனே ! (3)

7. (கு.உ.) ஆருதாரங்களுள் முதலாதாரமான மூலாதாரத்தில் (குதத்தில்) குண்டலினிப் பாம்பைத் தட்டி எழுப்புவதற்காக மூட்டப்பெறும் கனலுக்கு மூலாதாரக் கனல் எனப் பெயர். அக்கனலை மூட்டுவிப்பவர் விநாயகர்; மூலாதாரம் விநாயகருடைய ஸ்தானம். மும்முடிச்சு-ப்ரம்மக்ரந்தி, விஷ்ணுக்ரந்தி, ருத்ரக்ரந்தி என்னும் மூன்று க்ரந்திகள்; இந்த மூன்று முடிச்சுக்களையும் அவிழ்த்துக்கொண்டு கடந்து தான் குண்டலினி, ஸஹஸ்ராரத்தை அடைய வேண்டும். பணி-பாம்பு. குண்டலினியைப் பாம்பு என்பதுண்டு. ப்ரஹ்மக்ரந்தி விபேதினீ, விஷ்ணுக்ரந்தி விபேதினீ, ருத்ரக்ரந்தி விபேதினீ என லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்திலும் வருவது காண்க. கால் ஆதாரம்-(உன்) திருவடிகளாகிய பற்றுக்கோடு. மேல் ஆதாரம்—மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞை என்னும் கீழாருதாரங்களைப் போல் அவற்றின் மேலும் ஓர் ஆருதாரங்களுண்டு. 6+6—இப் பன்னிரண்டையும் கடந்த இடத்துக்குத் தான் த்வாதசாந்த ஸ்தானம் என்று பெயர். துவாதசம்—பன்னிரண்டு. விழுச்சுழுனை-விழுப்பம்மிக்க ஸுஷும்நா நாடி. இடகலை, பிங்கலை என்பன இரு நாடிகள்; இவற்றைச் சூரியகலை, சந்த்ரகலை என்பதுமுண்டு. உயிர்-பிராணன். நால் ஆதாரத்தொடு இரண்டு 4+2=6 ஆதாரங்கள். ஆருதாரங்களையும் ஆண்டருளும் தலைவர் விநாயகர்.

(பொ.உ.) மூலாதாரத்தில் குண்டலினி ஜ்வாலையை மூட்டிவைக்கும் பேரொளியே! க்ரந்தித்ரயத்தை அவிழ்த்து மேற்செல்லும் குண்டலினிப் பாம்பே! (உன்) திருவடிகளாகிற பற்றுக் கோட்டைக் கொடுத்து (உன்னுடைய பக்தர்களுக்குக் கடைக்கண் காட்டி அவர்களை அறவணைத்து ஆட்கொண்டு திருவருள் புரியும் கருணைக் கடலே! மேலே இருக்கும் ஆறு ஆதாரங்களையும் கடந்து சுடர்விடும் கற்பூர ஜோதியே! பெருமை மிக்க ஸுஷும்னை, இடைகலை, பிங்கலை ஆகிய நாடிகளை விளக்கி மேற்செல்லும் உயிர்க்குயிராம் பிராணனே! ஷடாதாரங்களையும் ஆட்சிபுரியும் தலைவனே! நங்கைநல்லூரில் வீற்றிருக்கும் வரசித்தி விநாயகக் கடவுளே!

8

வல்லபைத்தாய் சித்திபுத்தி மான்மகள்பன் னிருவர்

மணவாள ! குணவாள ! உணர்வாளர் மதியே !

சொல்லமைத்துச் சீரமைத்துத் தளைகளெலாம் நோக்கிச்

சொந்தமுறக் கவிபாடும் அந்தவகை யின்றி

வல்லபத்துன் அருளாலுன் திருமுன்வந் திருந்து

வழிபாடு செய்யஇசை மொழிபாடு விப்போய் !

நல்லபக்தர் இல்லறத்தோர் நாளுமடி பரவும்

நங்கைநல்லூர் நண்ணுவர சித்திவிநா யகனே ! (4)

8. (கு.உ.) வல்லபைத் தாய் - எங்கள் தாயாகிய வல்லபைத் தேவி. மால் மகள் பன்னிருவர்—பாடல் 3-இன் குறிப்புரை பார்க்க. குணவாள-நற்குணங்களை ஆள்பவனே ! உணர்வாளர்-மெய்யுணர்வு பெற்றவர். மதி-புத்தி. சொல், சீர், தளை இவையெல்லாம் கவிபாடுவோர் கவனிக்க வேண்டியவை. சொல் என்பது ஓரெழுத்தாலும், ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துக்களாலும் அமைவது. சீர் என்பது ஒரு சீர், இரு சீர், முச்சீர், நாற் சீர் என இவற்றின்மேலும் விரியும். தளை வெண்டளை, ஆசிரியத்தளை, கலித்தளை முதலிய. வல்லபத்து உன் அருளால்-உன் திருவருள்வலிமையால். இசை மொழி-இசைத்தமிழ்ப் பாட்டு. பாடுவிப்போய் - பாடவைக்கின்றவனே !

(பொ.உ.) எங்கள் தாயாகிய வல்லபைத் தேவிக்கும், சித்தி, புத்தி, ஆகிய தேவியர்க்கும், திருமால் மகளிர் பன்னிருவர்க்கும் மணவாளனே ! சற்குண சீலனே ! மெய் யுணர்வு மிக்க ஞாநிகளின் புத்திரூபமாய் இருப்பவனே ! சொற்களை அமைத்துச் சீர்களைப் பொருத்தித் தளையமைப் பெல்லாம் சரியாயிருக்கிறதா எனப் பார்த்துத் தானே சொந்தமாகக் கவிகள் இயற்றும் அந்த வகைகளெல்லாம் இல்லாமல், உனது திருவருள் வல்லமையால் உன் சந்நிதாநத்தில் வந்து நின்று, வணங்கி வழிபாடு செய்தவுடன் இன்னிசைத் தமிழ்க் கவிகளைத் தானகவே என் வாய்மூலம்

பாடவைக்கின்றவனே ! நல்ல பக்தர்களும், இல்லறமாகும் நல்லறத்தைக் கைக்கொண் டொழுகும் க்ருஹஸ்தர்களும் நாள்தோறும் திருவடிகளைப் புகழ்ந்து பாடும் நங்கை நல்லூ ரில் வீற்றிருக்கும் வரசித்தி விநாயகக் கடவுளே !

9

மோனவரம் பிகந்தஔவை கயிலாய மலையை
முதற்கணுற்றுக் கண்டிசைக்கத் துதிக்கையினுற் [றூக்கி
ஆனவரம் பெனுங்கயிலை ஆங்குய்த்த திறலோய் !
ஐங்கரத்தோர் செங்கரத்துள் அரதனவான் கலசம்
வானவரம் பிகந்தபெற்றோர் நீராடும் பொருட்டே
மறவாமல் உறவாக வைத்திருக்கும் வள்ளால் !
ஞானவரம் பெனுங்கருணை நதியே!நீள் கடலே !
நங்கைநல்லூர் நண்ணுவர சித்திவிநா யகனே ! (5)

9. (கு.உ.) மோன வரம்பு-மௌநத்தின் எல்லை. முதற் கண்-எல்லோருக்கும் முன்பாக. துதிக்கை - தும்பிக்கை. ஆன வரம்பு-பாரத தேசத்தின் (வடக்கு) எல்லை யாகிய. சுந்தரமூர்த்தி நாயனாரும் சேரமான் பெருமாள் நாயனாரும் கயிலாயம் செல்லுதல் கேட்ட ஔவையார் தாமும் கயிலை செல்ல விரும்பி, விநாயக பூஜையைவெகுவேகமாகச்செய்ய, விநாயகர் ஔவையை நிதானமாகப் பூஜை செய்யும் படிச் சொல்லிப் பூஜை முடிந்ததும் தமது துதிக்கையாலேயே தூக்கி நேரே கயிலையில் அவ்வையைச் சேர்த்து விட்டனர். குதிரையின் மீதும் ஆனையின் மீதும் சென்ற நாயன் மாரிருவரும் சென்று சேர்வதன் முன்னமே ஔவையார் கயிலை போய்ச் சேர்ந்து விட்டார். 'குதிரையின் காதம் கிழவியின் காதம் குலமன்னனே' என்பது தனிப்பாடல். ஓர் செங்கரம் என்பது ஈண்டு தும்பிக்கையைக் குறிக்கும். அரதனம்-இரத்தினம். வான் கலசம்-பெரிய குடம். வான வரம்பு இகந்த-ஆகாய எல்லையைக் கடந்த; அதாவது

பஞ்சபூதத்திற்கும் அப்பாற்பட்ட. ஆகாயத்துக்குள் மற்ற நான்கு பூதங்களும் அடங்கும். ஆகாய மாகிற பூதத்தை யும் கடந்த நிலையிலிருப்பவர் சிவபிரானும் பார்வதியும். விநாயகர் துதிக்கையில் ரத்நகும்பம் உண்டு. அது பார்வதி பரமேச்வரர்களை நீராட்டும் பொருட்டு அவர் வைத்திருப்பது. 'அரதனக் கலச வியன் கரம் தந்தை தாய்க் காக்கி'— தணிகைப் புராணம்-ஆபத்ஸஹாய விநாயகர்துதி. ஞான வரம்பு-அறிவின் எல்லை.கருணை நதி-கருணைப் பெருக்காறு. கருணை நீள் கடல்-பெரிய கருணைக்கடல்.

(பொ.உ.) மவுநத்தின் எல்லையையும் கடந்து, மோனம் பயின்ற ஔவைப் பிராட்டியார் எல்லோருக்கும் முன்ன தாகவே கயிலாய மலையைச் சென்று சேர்ந்து கண்டு தோத்திரம் செய்யும் படியாகத் தும்பிக்கையால் தூக்கிப் பாரதத்தின் வடவெல்லையாகிய கயிலை மலையின் மீது சேர்ப் பித்த திறமை படைத்தவனே! ஐந்து கரங்களுள் ஒரு செம்மையான கரமாகிய துதிக்கையில், ஆகாயமீறான ஐம்பூத எல்லைகளையும் கடந்து நிற்கும் பெற்றோர்களாகிய பார்வதி பரமேச்வரர்களை நீராட்டும் பொருட்டு மறக்காமல், அத் தும்பிக்கைக்கு உறவுபோல இரத்தினக் குடத்தை வைத்திருக்கும் வள்ளல் பெருமானே! ஞானத்தின் எல்லையா கிய கருணை ஆறே! நீண்ட (கருணைக்) கடலே! நங்கை நல்லூரில் வீற்றிருக்கும் வரசித்தி விநாயகக் கடவுளே!

## 10

மூடிகத்தின் மீதேறி முற்றும்வலம் வருவோய்!
முத்தமிழில் வித்தகர்க்கும் நான்மறையந் தணர்க்கும்
பாடியற்றிப் படுகாடு கிடந்துதவம் புரியும்
பான்மையர்க்கும் மேன்மையெலாம் பாலிக்குங் [கழலோய்!
வீடியற்றி விரைவாக வீதியெலாம் அமைத்து
விளக்கொளிகள் துலக்கமுற மேவுவித்து மக்கள்
நாடியக்கும் நகர்போல இனிதமைத்த பூதூர்
நங்கைநல்லூர் நண்ணுவர சித்திவிநா யகனே! (6)

10. (கு.உ.) மூடிகம்—மூஷிகம்; பெருச்சாளி. முத்தமிழ்—இயல், இசை, நாடகம் என்னும் மூன்று தமிழ்கள். வித்தகர்-அறிஞர். நால்மறைஅந்தணர்-ரிக், யஜுர், ஸாமம், அதர்வணம் என்னும் நால் வேதம் வல்ல பிராமணர்கள். பாடு இயற்றி-பெரும்பாடுபட்டு. படுகாடு கிடந்து-காடேகதியாகப் பாடுகிடந்து. "பறவையின் கணங்கள் கூடு துறந்து வந்து சூழ்ந்து படுகாடு கிடப்ப"-திவ்யப்ரபந்தம்-282 ('சிறு விரல்'). பான்மையர்-தன்மையர்கள். வீடு இயற்றி-வீடுகள் கட்டி. விரைவாக-வேகமாக. வீதி-தெருக்கள். விளக்கொளிகள்-ஒளி விளக்குகள் (lights). துலக்கம்-விளக்கம். நாடு இயக்கும் நகர்-நாட்டை ஆட்டிவைக்கும் அல்லது ஆட்சி செலுத்தும் நகரம். பூதூர்—புதிய ஊர். சில ஆண்டுகளுக்குள் வீடுகள் புதிதாகக் கட்டித் தெருக்களும் அமைத்து உண்டாக்கப்பட்டது நங்கை நல்லூர்க் காலனி என்னும் இடமாதலின் புதிய ஊர் எனப்பட்டது.

(பொ.உ.) பெருச்சாளி வாகனத்தின் மேலேறி (உலகை) முழுதும் வலம் வந்தவனே! மூன்று தமிழில் வல்லவர்களுக்கும், நால்வேதம் வல்ல அந்தணர்களுக்கும், பெரும்பாடு பட்டுப் படுகாடு கிடந்து மாதவஞ் செய்யும் பெருந்தன்மை யுடையவர்களுக்கும், மேன்மையான வரங்களையெல்லாம் கொடுத்துக் காப்பாற்றும் திருவடிகளை உடையவனே! வீடுகள் கட்டி, வேக வேகமாகத் தெருக்களெல்லாம் உண்டாக்கி, ஆங்காங்கே (மின்) விளக்குக் கம்பங்களையும் நட்டு, ஒளியானது எங்கும் பளிச்சென விளங்கும்படிச் செய்து ஜனங்களெல்லாம் நாட்டை ஆளும் நகரம் போல நன்முறையில் ஏற்படுத்தியிருக்கின்ற புதிய ஊராகிய நங்கை நல்லூரில் வீற்றிருக்கும் வரசித்தி விநாயகக் கடவுளே!

## 11

வேதமெலாம் அறியவொண்ணு மெய்ஞ்ஞான ஒளியே!
வேழமுகப் பெருமானே! யானைமுகத் தவுணன்
யாதகங்கள் தீரஒற்றைக் கோடெறிந்து தொலைத்துப்
பாரதத்தை மேருமலை ஏட்டினில்முன் வரைந்தோய்!

தீதறுசீர்த் திருஞான சம்பந்தர் அப்பர்
திருநாவ லூரர்தமிழ்த் தேவாரம் என்ற
நாதஒலி கேட்டுமகிழ்ந் தருள்சுளகுச் செவியோய் !
நங்கைநல்லூர் நண்ணுவர சித்திவிநா யகனே ! (7)

11. (கு.உ.) வேதம் எலாம்-எல்லா வேதங்களாலும். வேழம்—யானை. யானைமுகத்து அவுணன்-கஜமுகாசுரன். பாதகங்கள்-பஞ்சமாபாதகங்கள். ஒற்றைக்கோடு-ஏகதந்தம். மேருமலை ஏட்டினில் முன் பாரதத்தை வரைந்தோய் என அந்வயப் படுத்துக. 'முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில் முற்பட எழுதிய முதல்வோனே'—திருப்புகழ். (' கைத்தல ') சீர்-சிறப்பு. திருஞான சம்பந்தர், (அப்பர்) திருநாவுக்கரசர் இவர்தம் தேவாரத்தை அன்பிலாலந்துறை என்னும் தலத்திற் செவிசாய்த்துக் கேட்டருளினர் விநாயகர். அதனால் அவ்வூர் விநாயகர்க்குச் செவிசாய்த்த விநாயகர் என்கிற திருநாமமுண்டாயிற்று. திருநாவலூரர் (சுந்தரர்) தேவாரத்தைத் திருவையாற்றில், திரு நாட்டியத்தான் குடியில், திருமுருகன் பூண்டியில், திருப்பேரூரில் (அவர் வரலாற்றோடு தொடர்பு கொண்ட) விநாயகர் கேட்டு மகிழ்ந்தனர். இவற்றின் விளக்கங்களைச் 'சிவஸ்தல மஞ்சரி' என்ற நூலிற் கண்டு கொள்க ; அவ்வவ்வூர்த் தலபுராணங்களிலும் காணலாம். சுளகு—முறம். விநாயகர் செவி முறம் போன்றது. "ஸூர்ப்ப கர்ணாயநம: " என்பது விநாயக ஷோடச நாமங்களுள் ஒன்று. ஸூர்ப்பம்-முறம்.

(பொ.உ.) எல்லா வேதங்களாலும் அறிந்து கொள்ள முடியாத மெய்ஞ்ஞானப் ப்ரகாசமே! ஆனைமுகத்துடனே பெருமையை ஆள்பவனே! கஜமுகாசுரன் செய்த பஞ்ச மஹா பாதகங்களெல்லாம் அழிந்து போகும்படி, ஒடித்த ஒற்றைக் கொம்பை எறிந்து அவனை அழித்தருளி, (ஐந்தாம் வேதமான) மஹாபாரதத்தை, மேருமலையையே ஏடாக வைத்து அதில் முன்னொரு காலத்தே (ஒடித்த ஒற்றைத் தந்தத்தையே எழுத்தாணியாகக் கொண்டு) எழுதியருளினவனே! தீமையில்லாத சிறப்புப் பொருந்திய திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், திருநாவலூர்ச் சுந்தரமூர்த்தி நாயனார் இம்மூவர் பாடிய தெய்வத் தமிழாலான தேவாரம் என்னும்

கீதநாதத்தைக் கேட்டு மகிழ்ந்தருளிய முறம்போன்ற விசாலமான திருச்செவிகளை உடையவனே! நங்கைநல்லூரில் வீற்றிருக்கும் வரசித்தி விநாயகக் கடவுளே!

12

தும்பியாம் தலைதேவ உடல்பூதக் கால்கொள்
துண்டிவிநா யக!சுமுக! கபிலகண பதியே!
தம்பியாம் சரவணத்துச் சனித்தருள்ஷண் முகனைத்
தனிவள்ளி மலைவள்ளிக் கொடியுடன்முன் சேர்த்தோய்
அம்பியாங் கொன்றின்றி ஐயாற்றை அடைவான்
ஆரூரர் ஆற்றுவெள்ளத் தஞ்சுங்கால் ஆண்டாய்!
நம்பியாண் டார்நம்பி மெய்கண்டார்க் கருள்வோய்!
நங்கைநல்லூர் நண்ணுவர சித்திவிநா யகனே! (3)

12. (கு.உ.) தும்பி—யானை. தேவ உடல்-தேவர்களைப் போல் உடம்பு. பூதக்கால்-சிவகணங்களிலுள்ள பூதங்களைப் போலக் குட்டையான திருக்கால்கள். விநாயகர் விலங்கின் தலையும், தேவ உடம்பும், பூதக்காலும் உடைமையால் அவர் மூவகை வடிவும்ஒன்று சேர்ந்த திருமேனியராவர். துண்டிவிநாயகர்-காசியில் விச்வ நாதர் ஸந்நிதிக்குப் போகும் வழியிலிருப்பர் டுண்டிவிநாயகர். சுமுக-மங்களகரமான (யானை) முகத்தை உடையவ! கபில கணபதி-பொன்மை கலந்த கருநிறமுடைய விநாயகர். 'ஸுமுகாய நமஃ கபிலாய நமஃ' என்பன விநாயக ஷோடச நாமங்களுள் வருவன. சரவணத்து ஜனித்தருள் ஷண்முகன்-'சரவனம்' என்னும் நாணற்புற் காட்டில் தோன்றியருளிய ஆறுமுகப் பெருமானும் முருகன். தனி-ஒப்பற்ற. வள்ளிமலை வள்ளிக்கொடி-வள்ளிமலையில் வாழ்ந்து வந்து, 'வள்ளி' என்னும் திருநாமமுடைய கொடிபோல்வாளாம் பெண். தம்பியாம் ... ... ... சேர்த்தோய்: "அக்குற மகளுடன் அச்சிறு முருகனை அக்கண மணமருள் பெருமாளே"-திருப்புகழ் ("கைத்தல"). அம்பி-ஓடம். ஐயாற்றை-திருவையாற்றை. ஆரூரர்-சுந்தரர்.

ஆற்றுவெள்ளத்து - காவிரியாற்றிற் பெருவெள்ளம் வந்த போது. அஞ்சுங்கால்-பயப்பட்டபொழுது. சுந்தரமூர்த்தி நாயனுர் திருவையாற்றுக் கோயிலைத் தரிசிக்கச் சென்ற பொழுது காவிரியாற்றில் பெருவெள்ளம் பெருக்கெடுத்தோடவும், தென்கரையினின்று ஆற்றைக்கடக்கவழியின்றித் தவிக்கவும், வடகரையிலிருந்த விநாயகர் ஓலமிட்டு அழைத்துக் குரல் கொடுக்கவும், அவர் ' பரவும் பரிசொன் ' றெனும் தேவாரப் பதிகம் பாடவும், வெள்ளம் மேற்புறமே மலைபோல் மேலெழுந்து நின்று அவருக்கு ஆற்றைக் கடக்க வழிவிட்டது. அவர் ஆற்றைக் கடந்தபின் நீர் பழைய வண்ணமே பெருகியோடிற்று. இதனைப் பெரிய புராணத்துள்ளும், சிவஸ்தலமஞ்சரி என்னும் நூலிலும் கண்டு கொள்க. ' ஓலமிட்ட விநாயகர் ' இன்றைக்கும் திருவையாற்றில் இருக்கின்றுர். நம்பியாண்டார் நம்பி-இவர் திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையாரின் பூரண அருள் பெற்றவர் ; திருத்தொண்டர் திருவந்தாதி முதலிய திருமுறை நூல்களைப் பாடியவர் ; இவர் பொல்லா விநாயகரின் திருவருட்டுணைகொண்டு தேவாரத் திருமுறைகளைத் தில்லையினின்று வெளிப்படுத்தினுர். மெய்கண்டார்-இவர் திருப்பெண்ணுகடத்து அச்சுதகளப்பாளர்க்குத் திருவெண்காட்டு முக்குளத்தில் முழுகியதன் பயனுகக் கருவிலே திருவுடையவராய் அவதரித்தவர். இவர் செய்தவை சிவஞாந போத சூத்திரங்கள் பன்னிரண்டு; இவர் திருவெண்ணெய் நல்லூர்ப் பொல்லா விநாயகரின் பரிபூரண அநுக்ரஹம் பெற்றவர் ; இவர் அவர்மீது பாடிய துதி : ' கல்லா னிழன்மலை வில்லாரருளிய பொல்லா ரிணைமலர் நல்லார் புனைவரே ' என்பது.

(பொ.உ.) யானைத் தலையும், தேவ உடம்பும், பூதத்தைப் போன்ற இருகால்களும் கொண்ட, டுண்டி விநாயகனே ! ஷண்முகனே ! கபில விநாயகனே ! தம்பியாகச் சரவண தடாகத்தில் உதித்தருளிய ஆறுமுகப் பெருமானை ஒப்பற்ற வள்ளிமலையில் வளர்ந்த வள்ளிக் கொடிபோல் இடையுடைய வள்ளியம்மையுடன் முன்பு சேர்த்து வைத்தவனே ! ஓடம் ஒன்றும் இல்லாமல், திருவையாற்றை அடையும் பொருட்டுச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் காவேரியாற்று வெள்ளத்தைக் கண்டு பயந்திருந்தபோது ஓலமிட்டுக் கூப்பிட்டு அழைத்து

ஆட்கொண்டருளினவனே! திருநாரையூர் நம்பியாண்டார் நம்பிக்கும், மெய்கண்ட தேவநாயனார்க்கும் திருவருள் புரிந்த. வனே! நங்கைநல்லூரில் வீற்றிருக்கும் வரசித்தி விநாயகக் கடவுளே!

13

கிரமமுற எள்ளுருண்டை வளைமுறிமோ தகம்பால்

கிளரப்பம் சுகியன்வடை அதிரசம்தேன் இளநீர்

பரமருசிப் பணியாரம் அவல்பொரிபா கமுது

பச்சரிசி பிட்டிளைய படைக்கவுண்டு புடைப்போய்!

பிரமபுரி ஈசருமை திரிபுரசுந் தரிபாற்

பெருமையுற வீற்றிருக்கும் திருச்சுரத்துக் கருகாய்

நரமனிதர் தொழுந்தொண்டை நன்னாட்டிற் பொலியும்

நங்கைநல்லூர் நண்ணுவர சித்திவிநா யகனே! (9)

13. (கு.உ.) கிரமமுற-முறைப்படி. வளைமுறி-முறுக்கு. 'நெடிய வளைமுறி இக்கொடு லட்டுகம்'-திருப்புகழ் ('நினது திருவடி'). மோதகம்-கொழுக்கட்டை. கிளர்-விளங்கும். சுகியன்-நெய்யப்பம் போன்ற ஒருவகைத் தின்பண்டம். அதிரசம்-அப்ப வகைகளுள் ஒன்று. பரமருசி-மிக்க ருசி படைத்த. பணியாரம்-ஒருவகைச் சிறந்த தின்பண்டம். பொரி-அரிசிப்பொரி; எட்பொரி; நெற்பொரி; சோளப்பொரி முதலிய. பாகு-சர்க்கரைப் பாகு அல்லது வெல்லப்பாகு. அமுது-சமைத்தசோறு. பச்சரிசி-வெள்ளையான அரிசி. இளைய-இப்படிப்பட்ட நிவேதனங்கள். படைக்க-(அன்பர்கள் கொணர்ந்து) நைவேத்யம் செய்ய. புடைப்போய்-உடல் பருமன் அடைபவனே!; "நிறைய அமுதுசெய் முப்பழம் அப்பமும் நிகழ் பால்தேன் நெடிய வளைமுறி இக்கொடு லட்டுகம் நிறவில் அரிசி பருப்பவல் எட்பொரி நிகரில் இனி கதலிக்கனிவர்க்கமும் இளநீரும் மனதுமகிழ்வொடுதொட்ட" திருப்புகழ் ('நினது திருவடி'); "இக்கவரை நற்கனிகள் சர்க்கரை பருப்புடன் நெய் எட்பொரி அவற்றுவரை இளநீர் வண்டெச்சில் பய றப்பவகை பச்சரிசி பிட்டு வெளரிப்பழம்

இடிப்பல்வகை தனிமூலம் மிக்க அடிசிற் கடலை பக்ஷண மெனக்கொள் ஒரு விக்கிந சமர்த்தன் "—திருப்புகழ் ("பக்கரை")—இப்பாடல்களை ஈண்டு ஒப்பிட்டுப் பார்க்கலாம. பிரமபுரி ஈசர்—பிரம்மபுரேசர்; திருச்சுரத்துச் சிவபிரான் திருநாமம். திரிபுரசுந்தரி-திருச்சுரத்துத் தேவியார் திருநாமம். திருச்சுரம்-'திரிசூலம்' எனப்பல்லாவரத்துக்கருகில் வழங்கும் சிவஸ்தலம். நரமனிதர்-மக்கள். நரர், மனிதர் என்பன ஒருபொருள் இருசொல். தொண்டை நன்னாடு-செங்கற்பட்டு மாவட்டம் தொண்டை நாட்டைச் சேர்ந்தது; ஆக நங்கை நல்லூர் தொண்டை நாட்டுக்குட்பட்டது என்பது புலப்படும். பொலியும்-விளங்கும்.

(பொ.உ.) முறையாக எள்ளுருண்டை, முறுக்கு, கொழுக்கட்டை, பால், மிகுந்த அப்பம், சுகியன், வடை, அதிரசம், தேன், இளநீர், ருசிமிக்க பணியாரம், அவல், பொரி, பாகு, சாதம் (ஹவிஸ்), பச்சரிசி, பிட்டு இப்படிப்பட்ட பண்டங்களை (ப் பக்தர்கள் கொண்டுவந்து) நிவேதிக்க அவற்றை உட்கொண்டு (உள்ளம் புளகித்து) உடலம் பருப்பவனே! பிரம்மபுரீச்வரர் உமாதேவியாம் த்ரிபுரசுந்தரி அம்பிகையின் பக்கத்தில் பெருமைபொருந்த வீற்றிருந் தருளும் 'திருச்சுரம்' என்னும் தலத்துக்கு அருகாமையில் மானிடர்கள் வணங்கும் திருத்தொண்டை நன்னாட்டில் விளங்கும் நங்கைநல்லூரில் வீற்றிருக்கும் வரசித்திவிநாயகக் கடவுளே!

14

மூக்கண்ணும் முப்பட்டை யொடுங்கூடி வயங்கும்
மூவுருவாம் தெங்குடைத்துக் கருப்பூரம் ஏற்றி
முக்கண்ணா! பிலகாரி வாகனனே! யார்க்கும்
மூத்தவனே! முன்னவனே! மூஷிகவா கனனே!
அக்கணியும் அரனாலும் அருச்சிக்கப் பட்ட
ஆண்பிள்ளையே! ஆனையென் றார்ப்பரிப்பார்க் கருள்வோய்!
நக்கனைப்போல் அம்புலிவெம் பணிகங்கை சூடும்
நங்கைநல்லூர் நண்ணுவர சித்திவிநா யகனே! (10)

14. (கு. உ.) முக்கண்-தேங்காயிலுள்ள மூன்று கண்கள். முப்பட்டை-தேங்காயிலுள்ள மூன்று பட்டைகள். வயங்கும்-விளங்கும். மூவுருவாம் தெங்கு-பிரம விஷ்ணு ருத்ர மூர்த்திகளாம் மூவரின் திருவுருவத்தையும் நினைவூட்டும் தேங்காய். தேங்காயிலுள்ள முக்கண்கள் முக்கண்ணனும் சிவபிரானையும், முப்பட்டைகள், முக்கோட்டுத் திருநாமம் நெற்றியில் அணியும் திருமாலையும், மட்டைநார்க் குடுமி சிகையோடு கூடிய பிரமதேவனையும் நினைவூட்டும். தெங்கு-தேங்காய். முக்கண்ணு-திரிநேத்திர தாரியே! பிலகாரி-பெருச்சாளி. மூஷிககேதனனே-பெருச்சாளிக் கொடியுடையவனே! "ஆகுவாஹன கேதனுய நமஃ"-விநாயக ஸஹஸ்ர நாமம். அக்கு-எலும்பு; உருத்திராக்க மாலை. சிவபிரான் விநாயகரை அருச்சித்தது திரிபுர சம்ஹாரத்தின்போது தேரச்சொடிந்ததால். ஆனய்-ஆனையே! ஆர்ப்பரிப்பார்க்கு-ஆரவாரஞ் செய்து தோத்திரம் சொல்பவர்கட்கு. நக்கன்-நக்நன்; திகம்பரன்; சிவபிரான். அம்புலி-சந்திரன். வெம் பணி-கொடிய பாம்பு. விநாயகர் சந்திரன், பாம்பு, கங்கை இவற்றைச் சூடி முக்கண்ணுங் கொண்டவர். "கங்கையும் பனிவெண் திங்களும் விரைத்த கடுக்கையந் தொங்கலும் அரவும் தங்குபொற் சடையும் முக்கணுந் தாதை தாணு வென் றுணர்த்த"—பேரூர்ப்புராணம்.

(பொ-உ) முக்கண்களும், முப்பட்டைகளும் கொண்டு, விளங்கும் பிரம, விஷ்ணு, ருத்ர மூர்த்திகளின் மூன்று திருவுருவங்களையும் நினைவூட்டும் மூன்று வடிவமாய் அமைந்த தேங்காயை உடைத்து நிவேதித்து, கற்பூரம் ஏற்றித் தீபாராதனையும் செய்து, 'முக்கண்மூர்த்தியே! பெருச்சாளி வாகனம் உடையவனே! யாவர்க்கும் மூத்த பிரானே! யாவர்க்கும் முன்னவனும் முதற்கடவுளே! பெருச்சாளியையே கொடியாகவும் கொண்டவனே! எலும்பையும், அக்கமணி மாலையையும் அணிந்த பரமசிவனாலும் அர்ச்சனை செய்து பூஜிக்கப்பட்ட ஆண்பிள்ளையே! யானையே!' என்றெல்லாம் ஆரவாரஞ் செய்து தோத்திரம் செய்வார்க்குத் திருவருள் செய்பவனே! திகம்பரனும் சிவபெருமானைப் போல் சந்திரன், கொடிய பாம்பு, கங்காநதி இவற்றைச் சடையிற் சூடிக் கொண்டிருக்கும், நங்கை நல்லூரில் வீற்றிருக்கும் வரசித்தி விநாயகக் கடவுளே!

15

தாயகமே ! தமிழ்மறைக்கும் வடமொழிநான் மறைக்கும் ;
சங்கரனுண் களிருகச் சங்கரிபெண் பிடியா
மேயகயி லாயமலை மீதிலவ தரித்த
வேழவுரு வோய் !வேழ முண்டவிளா வாக
ஆயகல்வி கேள்விகளிற் சிறவாமே அடியேன்
ஆகாமை ஆண்டருளும் வேழமுணும் அரசே !
நாயகமாய் நகர்ப்புறத்துக் கிலக்கணமாய்த் திகழும்
நங்கைநல்லூர் நண்ணுவர சித்திவிநா யகனே ! (11)

15. (கு. உ.) தாயகம்-பிறப்பிடம். தமிழ் மறை-தேவார திருவாசகங்கள். களிறு-ஆண் யானை. பிடி-பெண் யானை. மேய-மேவிய. வேழஉரு-யானை வடிவம். சங்கரன்........ உருவோய்-' பிடியதன் உருவுமை கொளமிகு கரியது வடி கொடு தனதடி வழிபடுமவரிடர் கடிகண பதிவர அருளினன்' —திருஞாந சம்பந்தர்—வலிவலத் தேவாரம். வேழம்-உண்ட விளாவாக-'வேழம்' என்ற வியாதியால் வீணான விளாங்கனி போல-"வேழமுண்ட விளாகனியதுபோல'-திருப்புகழ் (காசி). ஆய-ஆகிய. சிறவாமே-சிறக்காமல். ஆகாமை-ஆகாத வழிக்கு. வேழம் உணும்-கரும்பை உட்கொள்ளும். நாயக மாய்-தலைமையாய். நகர்ப்புறம்-Township. இலக்கணம்-எடுத்துக் காட்டு.

(பொ. உ.) தமிழ் வேதத்துக்கும், ஸம்ஸ்க்ருத வேதங் கள் நான்கிற்கும் தாய்வீடு போல (இருப்பிடமாய்) இருப் பவனே ! சிவபிரான் ஆண்யானையாகவும், பார்வதி பெண் யானையாகவும் மேவி மகிழ்ந்த திருக்கைலாய மலையின்மீது (அவர்கள் குமாரனாய்த்) திருவவதாரம் செய்த யானை உருவம் உடையவனே! நான், (சிறப்புடையது) ஆகிய கல்வி ஞானத் திலும், கேள்வி ஞானத்திலும் சிறப்புடையவனாக ஆகாமல் யானையால் உண்ணப்பட்ட விளாம்பழம் போலவும், 'வேழம்' என்னும் வியாதி வரப்பெற்ற விளாங்கனி போலவும் ஆகி விடாமற்படிக்கு (என்னை) ஆட்கொண்டருள் புரியும்,

கரும்பை (விரும்பி) உண்ணும் அரசனே! தலைமையாகவும், (நல்ல) நகர்ப் பக்கங்களுக்கு (காலனிகளுக்கு) இலக்கண மாகவும் விளங்கும் நங்கை நல்லூரில் வீற்றிருக்கும் வரசித்தி விநாயகக் கடவுளே!

16

நாவல்விளா மாவாழை ஆசினிநற் றேங்காய்
நல்லகொய்யாக் கனிமுதலாம் பழவருக்கம் நுகரும்
ஆவல்மிக வுடையஇளங் களிறே !பொய் யாதே
அருணகிரி நாதர்கவி 'திருப்புக'ழென் றறைந்தோய்!
காவலென அடியார்க்குக் காப்பருளும் கருணை
கடாட்சமுடைத் தேமுநியே! ஆநந்த கிரியோய்!
நாவலரும் பாவலரும் முத்தமிழும் விரிக்கும்
நங்கைநல்லூர் நண்ணுவர சித்திவிநா யகனே! (12)

16. (கு.உ.) நாவல், விளா, மா (மாம்பழம்), வாழை, ஆசினி (பலா), தேங்காய் (தெங்கம்பழம்), கொய்யா முதலியவை கனிவகைகள்; விநாயகர்க்குப் பிரியமானவை. 'கபித்த ஜம்பூ பலஸார பக்ஷிதம்'—விநாயக ஸ்தோத்ரம் ('கஜானனம்'); 'நிறைய அமுதுசெய் முப்பழம் அப்பமும்... நிகரில் இனிகதலிக்கனி வர்க்கமும் இளநீரும்'—திருப்புகழ் ('நினதுதிருவடி'); 'பீஜாபூர பலாஸக்தாய நமః'—விநாயகர் அஷ்டோத்தர சதம்-50. நுகரும்-உண்டு அநுபவிக்கும். பொய்யாதே ... ... அறைந்தோய் - அருணகிரிநாதர் திருப் புகழுக்குத் 'திருப்புகழ்' எனப் பெயர் கொடுத்தவர் வய லூர்ப் பொய்யாக் கணபதியார் ஆவார்.'செய்ப்பதியும் வைத் துயர் திருப்புகழ் விருப்பமொடு செப்பென எனக்கருள்கை மறவேனே'—திருப்புகழ் ('பக்கரை'). காப்பு-ரக்ஷை. கருணை கடாக்ஷம்-கருணைக் கடைக்கண். தே முநி-தெய்வ யானைக் கன்று. தே-தெய்வம். முநி-யானைக் கன்று. ஆநந்தகிரி-இது கயிலையில் விநாயகர் இருக்கும் மலைக்குப் பெயர்; கயிலையில் ஸ்கந்தமாதன கிரி முருகருக்கு உரித்தானாற் போல ஆநந்தகிரி விமானம் விநாயகர்க்கு உரித்தாயிற்று. நாவலர்-நாக்கு வன்மை படைத்தவர்கள். பாவலர்-கவிஞர்கள். முத்

தமிழ்-இயல், இசை, நாடகம் என்னும் மூன்று தமிழ்கள். விரிக்கும்-விரிவுரைகள் நிகழ்த்தும் ; நங்கைநல்லூரில் அடிக்கடி ப்ரவசனங்கள் நடக்கும்.

(பொ. உ.) நாவற்பழம், விளாம்பழம், மாம்பழம், வாழைப்பழம், பலாப்பழம், நல்ல (தெங்கம்பழமாம்) தேங்காய், நல்ல கொய்யாப்பழம் முதலிய கனிவகைகளை ருசித்து உண்ணுவதில் மிகுந்த விருப்பமுடைய இளைய ஆண் யானையே ! பொய்யா விநாயகராயிருந்து (வயலூரில்), அருணகிரிநாத சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய சந்தக் கவிகளுக்குத் 'திருப்புகழ்' எனப் பேர்சொன்னவனே ! காவலாளியாக இருந்து அடியவர்களுக்கு 'ரக்ஷை' கொடுக்கும் கருணைக்கடைக்கண்ணுடைய, தெய்விகமான யானைக் கன்றே! ஆநந்தகிரியில் (கயிலைமலைச்சாரலில்) வீற்றிருப்பவனே ! நாவலர்களும், பாவலர்களும், முத்தமிழ் விரிவுரைகள் நிகழ்த்தும் நங்கை நல்லூரில் வீற்றிருக்கும் வரசித்தி விநாயகக் கடவுளே !

உலகமெலாம் ஒருகுறையும் இன்றிஉய்ய வேண்டும்
உத்தமர்செந் தண்மைகொளந் தணர்வாழ வேண்
பலகலையும் படிப்படியாய் மேலோங்க வேண்டும்
பாரெங்கும் பக்திமையாம் மதம்பரவ வேண்டும்
இலகருளால் இயற்கையன்னை எமக்குதவ வேண்டும்
இம்பர்மிசை உம்பர்பசு இனம்வாழ வேண்டும்
நலகணக்கில் மழைபொழிய வேண்டும்அருள் வேண்டும்
நங்கைநல்லூர் நண்ணுவர சித்திவிநா யகனே ! (13)

17. (கு.உ.) உலகமெலாம்......வேண்டும் : "லோகா: ஸமஸ்தா: ஸுகிநோ பவந்து"—ச்லோகம். 'எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே'-தாயுமானுர்-பராபரக் கண்ணி. 'குறைவிலா துயிர்கள் வாழ்க' — ("வான்முகில் வழாது பெய்க"). செந்தண்மை கொள் அந்தணர்-'அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுக

லான்'-திருக்குறள். அந்தணர் வாழவேண்டும்—"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம் வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக ஆழ்க தீய(து) எலாம் அரன் நாமமே சூழ்க வையக மும்துயர் தீர்கவே"—சம்பந்தர் தேவாரம். பலகலை-பல விதமான கலாஞானங்கள். படிப்படியாய்-சிறிது சிறிதாக. பக்திமையாம் மதம்-கடவுட் பக்தியாகிற மதம். இலகு-விளங்கும். இயற்கை அன்னை-Mother of Nature. இம்பர்-இவ்வுலகத்தவர்கள். மிசை உம்பர்-மேலுள்ள தேவர். பசு இனம்-ஆவினம்; பசுவின் கூட்டம். "கோப்ராஹ்மணேப்யஃ சுபமஸ்து நித்யம்"—ச்லோகம். நல கணக்கில்-நல்ல கணக்கில்; இடம், காலம், அளவு இவை யறிந்து மழை பெய்யின் நலம். 'வான்முகில் வழாது பெய்க'—வாழ்த்து. அருள் வேண்டும்-திருவருள் வேண்டும்.

(பொ. உ.) எல்லா உலகங்களும் ஒருவிதமான குறைவும் இல்லாமல் வாழ வேண்டும்; உத்தம குணமுடையவர்களும், செம்மையான குளிர்ந்த உள்ளம் படைத்த மறையவர்களும் வாழவேண்டும்; பலவிதமான கலையறிவுகளும் முறையே கொஞ்சம் கொஞ்சமாக மேலோங்க வேண்டும்; உலகம் எங்கணும் 'தெய்வபக்தி' என்ற மதம்பரந்து விளங்க வேண்டும்; விளங்கும் தண்ணருளால் 'இயற்கை' என்னும் தாய்எங்கட்கு உதவிபுரிய வேண்டும்; இவ்வுலகத்தவர்களும், மேலுலகிலுள்ள தேவர்களும், பசுக் கூட்டங்களும் வாழ வேண்டும்; நல்ல அளவோடு (கால, தேச, வர்த்தமானங்கட்கேற்ப) மழை பெய்ய வேண்டும்! (எல்லா வற்றிற்கும் மேலாக) உன் திருவருள் வேண்டும்! நங்கை நல்லூரில் வீற்றிருக்கும் வரசித்தி விநாயகக் கடவுளே!

(நங்கைநல்லூர் வரசித்தி விநாயகர் அருட்புகழ் குறிப்புரை பொழிப்புரைகளுடன் முற்றும்)

அருட்கவி தவத்திரு

# ஸாதுராம் ஸ்வாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய





















# நங்கைநல்லூர் அருட்புகழ் - 2

ந. ரா. முருகவேள், M.A., M.O.L.,
ஆசிரியர் : "திருக்கோயில்"

அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை - 34.
1 - 10 - '71.

# அணிந்துரை

சென்னை மீனம்பாக்கத்திற்கு அருகே நங்கைநல்லூர் என்னும் அழகிய புதிய சிறந்த ஊர் ஒன்று அமைந்துள்ளது. அதன்கண் வரசித்தி விநாயகப் பெருமான் அழகிய கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளார். கோயில் அமைந்துள்ள சூழலும், அதன் அழகும் தூய்மையும், தெய்வ சாந்நித்தியச் சிறப்பும் பிறவும், எவருள்ளமும் கொள்ளை கொள்ள வல்லன. ஊர் மக்கள் அனைவரும் அன்பும் ஆர்வமும் கொண்டு வழிபட்டு, இக்கோயிலைக் கண்ணும் கருத்துமாய்க் காத்து வருகின்றனர். 'ஸ்ரீ கணேஷ் மண்டலி' என்னும் பெயர் கொண்ட ஆலயப் பராமரிப்புக் குழுவினர், இக்கோயிலை மிகவும் நல்ல முறையில் அன்புடன் போற்றி நடத்தி வருகின்றனர்.

ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் அவர்களின் உள்ளம் கவர்ந்த புனித ஆலயம் இது. இங்குள்ள மகாமண்டபத்திற்கு ஸ்ரீ ஆச்சார்ய சுவாமிகள், 5-2-66-ல் அடிக்கல் நாட்டி அருளினார்கள். "ஸ்ரீபுதுப் பெரியவாள்" அவர்கள், இதற்கு "நைமிசாரண்ய மகா மண்டபம்" என்னும் இனிய நல்ல எழிற் பெயர் சூட்டி அருளினார்கள். இக்கோயில் சைவ-வைணவ சமரச நோக்கத்திற்கும், அபேதத் தன்மைக்கும், மிகச் சிறந்த எடுத்துக் காட்டாய் விளங்கி வருகின்றது. வனப்புமிக்க பதினறு கால் மண்டபத்தில் ஸ்ரீ வரசித்தி விநாயகர், ஸ்ரீசீதா லட்சுமணசமேத ஸ்ரீ கோதண்டராமர், ஸ்ரீ பக்த ஆஞ்சனேயர், ஸ்ரீ வள்ளி—தேவசேனா சமேத ஸ்ரீபாலசுப்பிரமணியர்,

நவக்கிரகத் தேவர்கள் ஆகியவர்களுக்குச் சந்நிதிகள் சிறந்த முறையில் அமைக்கப் பெற்றுள்ளன.

இங்ஙனம் இக்கோயிலில் எழுந்தருளியுள்ள மூர்த்திகள் அனைவரையும் பற்றிய துதி நூல்கள் பலவற்றைக் கொண்டதாக "நங்கைநல்லூர் அருட்புகழ்-2" என்னும் இந்த நூல் வெளிவருகின்றது. இதன்கண் வரசித்தி விநாயகர் வெண்பா அந்தாதி, வரசித்தி விநாயகர் இரட்டை மணிமாலை, சரவண குமாரன் அருட்புகழ், சரவண குமாரன் பதிகம், காயத்ரீ ராமாயணம், ஆஞ்சநேயர் போற்றிப் பஞ்சகம், நவக்கிரகத் தோத்திரம் முதலிய ஏழு துதி நூல்கள் அடங்கியுள்ளன. இவற்றைப் பாடியருளியவர், நமது பெருமதிப்பிற்கும் வணக்கத்திற்கும் உரிய அருட்கவி சாதுராம் சுவாமிகள் அவர்களாவர்.

இதுபோது துறவற நெறியை மேற்கொண்டு திருமுல்லைவாயில் ஸ்ரீவைஷ்ணவிதேவி ஆலயத்தைச் சேர்ந்த ஆசிரமத்தில் இருந்து வரும் இவர்கள், பூர்வாச்சிரமத்தில் அருட்கவி சேதுராமன் எனப் பெயர் பெற்றிருந்தவர்கள். யான் இவர்களை 1953-ஆம் ஆண்டு முதலே, நன்கினிது அறிந்து பழகும் பேறு பெற்றுள்ளேன். நவில்தொறும் பெருகும் நூல்நயம் போல, நாளும் நாளும் இவர்தம் பலதிறச் சிறப்பும், தெய்விகத் தன்மையும், தவநலமும் பெரிதோங்கி வளர்ந்து வருதல் காண்கின்றேன். அதனால் "மானுடம் இவர்தாம் அல்லர் நற்பெருந் தெய்வம்" என்பது போன்ற, ஒரு வகை உணர்வு தோன்ற வியந்து, மகிழ்ந்து தொழுகின்றேன். ஸ்ரீவள்ளிமலைச் சுவாமிகளின் திருவருள் பெற்ற இவர்கள், எத்தனையோ பல திருக்கோயில் களில் இறைவனின் திருமுன்னிலையில், பக்திப் பரவசம் மேலிட்டு அருள்வயப்பட்டுத் திருப்பாடல்கள் பலப்பல பாடியிருத்தலைக் கண்டும் கேட்டும் சான்றோர்கள் பற்பலர் வியந்து போற்றியுள்ளனர். இவரை முதன் முதற் கண்ட போது திருஞானசம்பந்தப் பெருமானின் நினைவே என் உள்ளத்தில் முகிழ்ந்தது.

இவர்தம் தமையனார் திரு. அருளிசைச் சுப்பிரமணியம் அவர்கள். இறைவனின் சந்நிதியில் பாடல்கள் பாடப்படும் பொழுது எழுதிக் கொள்ளுதலால் இவர் சம்பந்த சரணாலயரையும், அவற்றிற்கு இசைக் குறிப்பு அமைத்து உதவுதலால் திருநீலகண்ட யாழ்ப்பாணரையும் நமக்கு ஒருவகையில் நினைவுபடுத்துகின்றார்கள்.

"நங்கைநல்லூர் அருட்புகழ்-2" என்னும் இந்நூலில் அடங்கியுள்ள ஏழு நூல்களும் நன்கினிது சிறப்புற அமைந்துள்ளன. நங்கைநல்லூர் சென்னைக்கு அருகில், மீனம்பாக்கத்தை அடுத்து, பழவந்தாங்கல் என வழங்கும் பலவன்தாங்கலுக்கு அணித்தாக இருப்பது. மீனம்பாக்கத்திற்கு அருகில் இருத்தலால், "ஆகாய விமானங்களின் போக்குவரத்துச் சத்தம் இங்கு நாள் முழுதும் மிகுதியாகக் கேட்கும்" என்பன போன்ற கருத்துக்கள் (125, 127, 128), இந்நூலின்கண் ஆங்காங்கே பொருத்தமுற அமைந்து காணப்படுகின்றன.

விநாயகர் வெண்பா அந்தாதியில், விநாயகர் அவதாரம் (26) விநாயகர் பெருமை (7, 23, 47, 56, 64, 112) விநாயகர் தத்துவம் (39, 67) விநாயகரின் சக்திகள் (28, 32, 34) விநாயகரைச் சிவபிரான் வழிபட்டது (27, 68) முதலிய பற்பல செய்திகள் அழகுறப் பாடப் பெற்றிருக்கின்றன. விநாயகர்பால் இந்நூலாசிரியர் வேண்டிக் கொள்வதாக அமைந்துள்ள பாடல்கள் (67, 87, 88) மிக்க சொற்பொருட் சுவை நலன்கள் வாய்ந்தவை. இங்ஙனமே "இரட்டை மணிமாலை" என்னும் நூலும் செவ்விதின் அமைந்து திகழ்கின்றது.

அருணகிரிநாதர் அருளிய திருப்புகழின் நடையில், நல்ல இனிய சந்த நலங்கள் திகழச் "சரவண குமாரன் அருட்புகழ்"ப் பாடல்கள் வியந்து போற்றத்தக்க வகையில் விளங்குகின்றன. "சரவண குமாரன் பதிகம்" என்பது இராமலிங்க வள்ளலாரின் திருவருட்பாப் பாடல்களைப் போன்ற எளிய இனிய நடையில்,

உள்ளம் உருக்கும் வகையில் பாடப் பெற்றிருக்கின்றது. "முப்போதும் முத்தமிழ் முழக்கும் திருப்புகழை முறையோடு பாட வேண்டும்; மோகிக்க வைக்கும் திரைப்படப் பாக்கள் தமை முற்றிலும் மறக்க வேண்டும்" என்பன போன்ற வரிகள் மிகவும் குறிப்பிடத்தக்க சிறப்புடையனவாகும். முருகன் அடியார்கள் பலரையும் தொகுத்துக் கூறும் பாடலும், (36) அருணகிரிநாதர் அருளிய நூல்கள் பலவற்றையும் தொகுத்துக்கூறிப் போற்றும் பாடலும் இதன்கண் பெரிதும் போற்றத்தக்கனவாகத் திகழ்கின்றன.

இங்ஙனமே இராமபிரானின் துதியாக அமைந்துள்ள காயத்ரீ ராமாயணம் என்பது இராம காதையைச் சுருக்கமாகத் தொகுத்துச் சொற்பொருட் செய்யுள் நலங்கள் மிளிரப் பாடப் பெற்றுள்ளமை பெரிதும் வியந்து புகழ்ந்து மகிழ்தற்குரியது. மற்றும் ஆஞ்சநேயர் பஞ்சகம், நவக்கிரகத் தோத்திரம் என்பனவும் கவிதைச் சிறப்பும் கருத்துச் சிறப்பும் வாய்ந்து, கவின்மிக்கு ஓங்கித் துலங்குகின்றன.

ஆதலின் இவை அனைத்தும் பக்தர்களுக்கு மிகவும் பயன் படத்தக்க சிறந்த துதி நூல்களாகும். இவற்றைத் தொகுத்துப் பதிப்பித்து வெளியிடுகின்ற நங்கைநல்லூர் "ஸ்ரீ கணேஷ் மண்டலி" யின் சிறந்த தெய்விகத் தொண்டு பக்தர்கள் நன்றியுடன் போற்றுதற்குரியதாகும்.

ந. ரா. முருகவேள்

உ

ஓம்

ஸ்ரீ மஹா கணபதயே நம :

# பதிப்பாளரின் பணிவுரை

வேழமுகத்து விநாயகனைத் தொழ
வாழ்வு மிகுத்து வரும்.

நங்கைநல்லூர் காலனியில் அண்டினோர்க்கெல்லாம் அருள்பாலித்து வரும் ஸ்ரீ வரசித்தி விநாயகரை வழிபட வருவோர் மனமாரத் துதிப்பதற்குத் துணையாக இருக்க வேண்டி எமது கோரிக்கைக்கு இணங்கி அருட்கவி ஸ்ரீ சேது ராமன் (இப்பால் துறவறம் பூண்டு ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமி கள் என்ற திருநாமத்துடன் விளங்குகின்றார்.) அவர்கள் அநுபவ பூர்வமாகப் பாடிய 23 பாக்கள் அடங்கிய "ஸ்ரீ வரஸித்தி விநாயகர் அருட்புகழ்" என்ற நூலை 27—1—66 ஸ்ரீ விநாயக சதுர்த்தி வெளியீடாகப் பிரசுரிக்கப்பட்டது காலனி வாசிகள் அறிந்ததே. இப்பால் ஸ்ரீ ஸ்வாமிகள் இந்த ஆலயத்தில் எழுந்தருளியுள்ள எல்லா மூர்த்திகள் பேரிலும் மொத்தம் 180 துதிப்பாடல்களை நமக்கு அருள முன் வந்தார்கள்.

அருட்கடலிலே அவர்கள் மூழ்கி நமக்கு எடுத்துத் தந்துள்ள இம் முத்துக்குவியலின் அநுபூதி எல்லோர்க்கும் கிட்டி ஆனந்தம் எய்த வேண்டும் என்ற நோக்கத்துடன் மேற்படி பாடல்களைத் தொகுத்து "நங்கைநல்லூர் அருட் புகழ்—2" என்ற தலைப்புடன் தயாராகியிருக்கும் இந்த நூலை எங்களுடைய எளிய சின்னஞ் சிறு காணிக்கையாக ஸ்ரீ விநா யகப் பெருமானின் திருவடிகளில் மிகுந்த பணிவுடன் சமர்ப் பிக்கிறோம். இந்த நூல் தன்னுடைய இளையவனின் மஹா ஸ்கந்த ஷஷ்டியை யொட்டியப் பெருவிழாவில் பக்தர்களின் கைகளை அலங்கரிக்க வேண்டும் என்பது மூத்த பிள்ளையாரின்

திருவுள்ளமாக இருப்பது கண்டு உவகையும் பூரிப்பும் அடைகிறோம்.

உளம் தோய்ந்த நிலையில் கவிஞர் நமக்கு ஆக்கி அளித்துள்ள சொற் சித்திரத்தில் ஆழ்ந்த தத்துவமும், செறிந்த கருத்தும், பொதிந்த பொருளும், நிறைந்த அழகும், கனிந்த சுவையும் பரவிக் கிடக்கின்றன. ஆகவே பாடல்களைப் பக்தியுடன் பாடிப் பரவசம் எய்துமாறு அனைவரையும் அழைக்கிறோம்.

ஒப்பற்ற இந்நூலை உபகரித்துள்ள அருட்கவி ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள் அவர்களுக்கும், முதல் நூலைப் போலவே இதன் அரிய பொருளையும் ஆய்ந்து அனுபவிக்க வகை கண்டுள்ள ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களின் பூர்வாசிரம மூத்தவர் அருளிசை ஸ்ரீ சுப்ரமண்யன் அவர்களுக்கும், நூலுக்கு ஏற்றதாக, சிறந்ததொரு அணிந்துரை வரைந்து உதவிய "திருக்கோயில்" ஆசிரியர் "சித்தாந்தப் புலவர்மணி" ந. ரா. முருகவேள் அவர்களுக்கும், எம்மால் ஏற்பட்ட எத்தனையோ சிரமங்களைத் தாங்கி, நூலை அரிய முறையில் அச்சாக்கித்தந்த சென்னை பார்க்கர் அச்சகத்தாருக்கும் எங்கள் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். இத்திருப்பணியில் எங்களை ஆட்படுத்திய ஆனைமுகத்தானை அடிபணிந்து துதித்துத் தொழுகிறோம். ஆண்டவனின் திருவருள் எல்லோர்க்கும் பூரணமாகக் கிடைத்து உலகமெலாம் க்ஷேமமுற வேண்டுமென அவன் இருகழலிணைகளையும் இறைஞ்சுகின்றோம்!

வாழ்க வையகம்!

நங்கைநல்லூர் காலனி
சென்னை-61.
18—10—71

ஸ்ரீ கணேஷ் மண்டலியினர்

*ஸ்ரீ வரஸித்தி விநாயகர் துணை*

# I. நங்கைநல்லூர்

# ஸ்ரீ வரஸித்தி விநாயகர் வெண்பா அந்தாதி

## (அருட்கவி ஸாதுராம் ஸ்வாமிகள் அருளியது)

### காப்பு

1. பண்பாரும் நங்கைநல்லூர்ப் பஞ்சகர குஞ்ஜரமேல்
வெண்பாஅந் தாதி விளம்ப அவண்—விண்பார்
நநாயகனென் றேதஅருள் நல்குவர ஸித்தி
விநாயகன்தா னேகாப்பாம் மெய்த்து.

*குறிப்புரை:—பஞ்சகர குஞ்ஜரம் - ஐந்து கைகளையுடைய யானையாம் விநாயகர். விளம்ப - சொல்ல. அவண் - அங்கு. விண் பார்-விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும். ந-நல்ல. நாயகன் - தலைவன்; நம் நாயகன் எனலுமாம். மெய்த்து - உண்மையாக.*

### நூல்

2. மங்கலநல் வாச்சியங்கள் வானைப் பிளக்கமறை
அங்கலகி லாவா றலம்புமிடம் - கொங்கலர்த்தண்
தண்டலைகள் சூழுமிடம் தந்திமுக னூர்செறுவில்
நண்டலையும் நங்கை நலூர். (1)

*குறிப்புரை:—வாச்சியம் - வாத்யம். அலகு இலா வாறு - கணக்கில்லாமல். அலம்பும் - ஒலி செய்யும். கொங்கு -*

வாஸனை அல்லது தேன். அலர் - மலர். தண் - குளிர்ந்த. தண்டலை - சோலை. தந்தி முகன் - யானை முகக் கணபதி. செறு - வயல்.

3. நங்கைநலூர் என்றென்றும் நாவினுல் உச்சரித்தே
அங்கைமலர் தூவிஅர்ச்சித் தைங்கரனைக்-கங்கை [முடிக்
கண்ணுதலே என்றெல்லாம் கைகூப்பி எண்ணி [யெண்ணிக்
கண்ணுதலே சான்ருேர் கடன். (2)

குறிப்புரை :—என்றும் - என்றைக்கும். கங்கை முடிக் கண்ணுதல்-விநாயகருக்கும், தலையில் கங்கையும், நெற்றிக்கண்ணும் உண்டு. கண்ணுதல் - கருதுதல்; நினைத்தல்.

4. கடன்பட்டார் நெஞ்சம் கலங்குதல்போல் மாயைக்
குடன்பட்டே உள்ளம் உடைந்து-மடன்பட்டேன்
என்னையுமின் ருேர்பொருட்டா எண்ணிநங்கைநல்லூரில்
தன்னையுமீங் தாண்டதத்தி தாள். (3)

குறிப்புரை :—கடன்....போல்—"கடன் கொண்டார் நெஞ்சம் போலக் கலங்கினுன் இலங்கை வேந்தன்"—தனிப் பாடல். மாயைக்கு உடன் பட்டு - மாயா மலத்துக்கு உட் பட்டு. மடன் - மடம் ; அறியாமை. மடன் - மடம் – போலி. அத்தி - யானை; கணபதி. அத்தி தாள் ஆண்டது என்க.

5. தாளல்ல செய்யசெழுந் தாமரைக ளாமவைதிண்
தோளல்ல மற்றவைமாத் தூணங்கள்-நீளல்லல்
மாயநங்கை நல்லூரில் மன்னுவர ஸித்திகண
நாயகனும் நால்வாய் தனக்கு. (4)

குறிப்புரை :—மா - பெரிய. தூணம் - தூண். மாய - அழிய. நால் வாய் - யானை.

6. தனக்கொப்பில் லாதமஹா தந்தா வளமென்
றனக்கொப்ப இன்னருள்செய் தைவம்-கனக்கொாப்
[பொன்
றெங்கணுமே வெள்ளவெளே ரென்றொளியை
[வீசவளர்
அங்கணங்கை நல்லூர் அரசு. (5)

*குறிப்புரை :—மஹா – பெரிய. தந்தாவளம் - யானை. ஒப்ப - பொருந்த. தைவம் - தெய்வம். கனக் கொப்பு ஒன்று - பருத்த அல்லது பொற்பூண் இடப்பெற்ற ஒற்றைக் கொம்பு. அம் கண் - அழகிய கண்ணைக் கொண்ட. அரசு – ராஜா.*

7. அரசித்தி அத்திகள்சூழ்ந் தார்நங்கை நல்லூர்
வரஸித்தி வேழத்தை வாழ்த்திப்-பரஸித்தி
எட்டுமே கைவரப்பெற் றின்புறலாம் இஃதுணர்ந்தார்
மட்டுமே மக்கள்பிறர் மா. (6)

*குறிப்புரை :—அரசு - அரசமரம். இத்தி -கல்லாலமரம். அத்தி - அத்திமரம். ஆர் - பொருந்திய. வேழம் - யானை. பரஸித்தி - மேலான ஸித்திகள். எட்டும் - அணிமாதி அஷ்ட ஸித்திகளும். கைவர - வல்லமை பெற. மா - விலங்குகள்.*

8. மாமுகனே! ஞாந வரஸித்தி வாரணமே!
சோமுகனைக் காய்ந்தான் தொழுமருகா!-காமுகனேன்
கண்டதையே காட்சியெனல் கைவிட்டேன் நங்கை
[நலூர்
உண்டதையே காண்பனினி ஓர்ந்து. (7)

*குறிப்புரை :—மா - யானை. வாரணம் - யானை. சோமுகன் - சோமுகாஸுரன்; இவன் நால் வேதங்களையும் திருடிக் கொண்டுபோய்க் கடலில் ஒளித்தவன். காய்ந்தான்-மீந அவ தாரத் திருமால். உண்டு, அதையே எனப் பிரிக்க. ஓர்ந்து - ஆராய்ந்து பார்த்து.*

9. துத்திமிகக் கொண்ட துதிக்கையொன்று தொங்கு
[மெழில்
அத்திமுக ! நங்கைநலூர் ஆளும்வர-ஸித்திமஹா
போதகமே ! யோகபரி பூரணமே ! போகியர்க்குச்
சாதகமே ! யோகியர்க்குந் தான். (8)

குறிப்புரை :—துத்தி - புள்ளி. துதிக்கை – தும்பிக்கை. அத்தி - யானை. போதகம் - யானை. போகியர்க்கும் யோகியர்க்கும் சாதகமே எனக் கூட்டுக. சாதகம் - உதவி ; துணை.

10. தானே எவர்க்கும் தனக்கும் கரியாவான்
தானே தனக்குத் தலைவனும் - தானே
அனைத்துமாம் நங்கைநல்லூர் ஆளும்வர ஸித்திப்
பனைத்துதிக்கை யானெம் பரன். (9)

குறிப்புரை :—கரி - ஸாக்ஷி. அனைத்தும் - எல்லாமும். பனை - பனைமரத்தைப் போன்ற. துதிக்கை - தும்பிக்கை. பரன் – மேலான கடவுள்.

11. பரன்தந்தை பார்வதிதாய் பைரவன் வீரன்
தரன்தந்த செண்டையன் சக்தி-தரன்தம்பி
மார்மாமன் மால்விதிவேள் மைத்துனன்மார் நங்கைநல்
லூர்மாமன் பிள்ளையார்க் கோர். (10)

குறிப்புரை : பரன் - பரமேச்வரன். பைரவன் - கால பைரவர். வீரன் – வீரபத்ரக் கடவுள். தரன் - தரம் (போலி) மேம்பாடு. செண்டு - செண்டாயுதம். ஐயன் - ஐயனார். சக்திதரன் - வேலாயுதக் கடவுள் ; முருகவேள். பைரவர், வீரபத்ரர், ஐயனார், முருகவேள் இவர்கள் விநாயகர்க்கு இளைய ஸஹோதரர்கள். மாமன்-மாமனார். மால்-திருமால். விதி - பிரமன். திருமாலும், அயனும் தத்தம் மகளிரை அளித்திருப்பதால் இருவரும் மாமனார் முறையாகும் விநாயகர்க்கு. வேள் - மன்மதன். ஸோதரியரின் கணவன் கணபதி என்ற முறையில் விதி, வேள் இருவரும் கணபதிக்கு மைத்துனர் முறையாக வேண்டும். விதி என்ற சொல் இப்பாடலில்

இடைநிலைத் தீவகமாக நின்று 'மாமன்—மைத்துனன்' என்ற இரண்டு உறவு முறையின் பாலும் சார்வித்தல் உய்த்துணரற் பாலது. நங்கை நல்லூர் மா மன் – நங்கை நல்லூரில் வாழும் (மா) சிறந்த (மன்) அரசன்; கணபதி. ஓர் - ஆராய்ந்து அறிந்து கொள்வாயாக !

12. ஓரா யிரம்பேர் உடையபிரான் ஓங்கார
பாரா யணர்க்கருளும் பண்பினன்-காரார்
மதம்பொழியும் கன்னங் கபோலமுள வள்ளல்
இதம்பொழிவான் நங்கைநலூ ரில். (11)

குறிப்புரை :—ஆயிரம் பேர் - ஸஹஸ்ரநாமம். ஓங்கார பாராயணர்-ஸதா ப்ரணவஜெபம் பண்ணிக்கொண்டே இருப்பவர்கள்; ஸந்யாஸிகள் எனலுமாம். கார் ஆர் - மேகம் போற் பொருந்திய. மதம்–மதநீர். கன்னம்-காது. கபோலம்-தாடை. இதம் - ஹிதம் ; இன்பம் ஆனவை.

13. ஊரிற் சிறந்தஊர் நங்கைநலூர் ஓதுபல
பேரிற் சிறந்ததெங்கள் பிள்ளையார் – பேரில்
மதிப்பார் வரஸித்தி வாரணமற் றஃது
துதிப்பார்க் கருள்தூய சொல். (12)

குறிப்புரை :—பிள்ளையார் - 'பிள்ளையார்' என்ற பேர் என்பதை இசையெச்சமாக வருவித்துப் பொருள் கொள்க. பேரில் - அந்தப் பிள்ளையாரின் பேர்களுக்குள்ளும். மதிப்பு ஆர் - பெருமதிப்புப் பொருந்திய. வாரணம் - யானை. மற்று - அசை. அஃது - அது. அஞ்செழுத்தாலாகிய 'நமசிவய' என்ற சொல்லை 'அஞ்சுபதம்' எனச் சுந்தரர் சொன்னது போல் ஈண்டு. 'வரஸித்தி வாரணம்' என்ற சொற்றொடரைச் 'சொல்' என ஒருமையில் முரண்படுத்திச் சொல்லியுள்ளது.

14. சொல்லாய்ப் பொருளாய்த் தொடுக்கும் சுவைப்பாவாய்
எல்லாமாய் நின்ற இபமுகனே !—பொல்லாப்
பிள்ளையென்ற பேருநிற்குப் பேசப் படலென் ?
உள்ளையொன்றில் நங்கைநலூ ரோய் ! (13)

குறிப்புரை :—தொடுக்கும் – யாக்கும்; கட்டும். இபம் - யானை. பொல்லாப் பி(ள்)ளை – பொல்லாத கணபதி. பொல்லுதல்—உளியிட்டுச் செதுக்குதல்; பொல்லார்-ஸ்வயம்பு என்பது பொருள். நிற்கு - நினக்கு. என் - என்னவோ ? உளை - உளைதல் ; வருந்துதல். முதனிலைத் தொழிற்பெயர். உளை - சேறு எனலுமாம். நங்கைநலூர் வீதிகள் மழையாற் சேறுபடாவண்ணம் அவ்வளவு தரமாகத் தாரிடப் பெற்றுச் செம்மையாய் அமைந்துள என்ற கருத்தும் தொனிக்கும்.

15. ஓயா துழன்றுழன் றுள்ளநிலை பேறின்றி
மாயா விகார வலைப்பட்டேன் - நாயானேன்
ஏனோ பிறந்தேன் இறந்தொழியேன் நங்கைநலூர்க்
கோனோக் குருமே குலைந்து. (14)

குறிப்புரை :—நிலைபேறு - நிலை பெறுதல். மாயா - மாயை மலம். கோன் - தலைவன். நோக்கு உறுமே - கடைக்கண் பார்வை கிடைக்கப் பெறுமல்.

16. குலைகுலையாத் தெங்கு கொடுக்குநங்கை நல்லூர்
நிலைகுலையா நெஞ்சுள் நிறுத்திப்-புலைகொலைகள்
நீக்கிவழி பாடுசெய்வார் நேத்திரம்போ லேஒளிர்ந்துள்
ளூக்கிவர ஸித்திஉ வா ஊர். (15)

குறிப்புரை ; தெங்கு - தென்னைமரம் ; தேங்காயுமாம். புலை – கசாப்பு. கொலை - வேறும் உயிர்க் கொலைகள். நேத்திரம் - கண். உள் ஊக்கி - உள் இருந்து ஊக்குவிப்பவர். உவா - யானை ; கணபதி.

17. ஊர்வன மக்கள்விலங் கும்பர் நடப்பன
நீர்வாழ் வனபறக்கும் நீர்மையவென்-றார்வகைசேர்
ஏழ்பிறப்பும் வேண்டாம் இனிஎனக்கு நங்கைநலூர்
வாழ்பிறப்பில் வாரணமே மற்று. (16)

குறிப்புரை :—உம்பர் - தேவர். நீர்மைய - தன்மையன. ஆர் – பொருந்திய. ஏழ்பிறப்பு - அண்டஜம், ச்வேதஜம்,

சராயுஜம், உத்பீஜம் என்ற நால் வகைப் பிறப்புக்களின் விரிவான ஊர்வன, பறப்பன, நடப்பன, நீர்வாழ்வன, மக்கள், விலங்கு, தேவர் என்ற எழுவகைப் பிறவிகள். வாழ் - வாழ்கின்ற. பிறப்பில் - பிறப்பு இல்லாத. வாரணம் - யானை. மற்று - அசை.

18. மற்றூர் எனக்குத் துணைஇந்த மாநிலத்தில்
சற்றூலோ சித்தால் தகையாதோ—கற்றூர்தாம்
காமுறுநல் நங்கைநலூர்க் கண்வாழ் கணபதியே!
ஓமுருவோய்! வந்தாள்! உகந்து. (17)

குறிப்புரை :—மற்று ஆர் - வேறு பிறர் எவர்? சற்று ஆலோசித்தால் - கொஞ்சம் ஆராய்ச்சி பண்ணிப் பார்த்தால். தகையாதோ - பொருந்தத் தெரிய வராதோ? காமுறும் - ஆசைப்படும். நலூர்க்கண் - நல்லூரிடத்தில். ஓம் உருவோய்- ப்ரணவ வடிவனே! வந்து ஆள் - வந்து ஆட்கொள்வாயாக!

19. உகந்தெவரும் போற்றும் உபயபத உம்பல்
முகந்தவழும் மோந முதலே!—அகந்தைவரை
உச்சியர்கா ஞுச்செவந்தி உச்சி விநாயகனே!
நச்சினைநீ நங்கைநலூர் நன்கு. (18)

குறிப்புரை:—உபயபத-இரு திருவடிகளையுடைய. உம்பல் முகம் - யானை முகம். மோநம் - மௌநம். முதல் - கடவுள். அகந்தை வரை உச்சியர் - ஆணவமலையுச்சியின் மேல் நிற்பவர்கள். செவந்தி - செவ்வந்தி; திருச்சிராப்பள்ளி. உச்சி விநாயகன் - திருச்சிராப்பள்ளித் தாயுமானுர் கோயில் மலைக் கோட்டையுச்சியில் இருக்கும் உச்சிப்பிள்ளையார். நச்சினை - விரும்பினுய். நன்கு நச்சினை எனக் கூட்டுக.

20. நன்குலத்த ராஞலும் ஞாநம் தெளியாத
புன்குலத்த ராஞலும் புண்ணியரே-என்குலத்தை
உய்யக்கொள் நங்கைநலூர் ஓங்குநடை ஓங்கல்முகன்
பெய்யக்கொள் அன்பைப் பெறின். (19)

*குறிப்புரை :—புன் குலம் - இழிந்த மரபு. உய்யக்கொள்- வாழவைக்கும். நடை ஓங்கல் - நடைமலை ; யானை.*

21. பெறினும் எனையொருவர் பெற்றெடுக்க ; பாசம்
உறினும் உறுக ;தொழு துய்க ;—முறிவளைகள்
உண்ணும் புழைக்கை உவாமுகனை ஓதடியார்
எண்ணுநங்கை நல்லூ ரினில். (20)

*குறிப்புரை :—பெறினும் - மகப்பெற்றாலும். பாசம் உறினும் - அன்பு வைத்தாலும். உய்க - வாழ்வு பெறுக. முறிவளை - வளைமுறி ; முறுக்கு (சொல்மாற்றம் எதுகை நோக்கி). புழைக்கை - தொளையுடைய துதிக்கை. உவா – யானை. எண்ணும் – தியாநிக்கும். நங்கைநல்லூரினில் பெறுக, உறுக, உய்க, எனக்கூட்டிப் பொருள் கொள்க.*

22. நங்கைநல் லூரினில் நால்வாய் முகத்தானைக்
கொங்கைநலங் கொண்டுகொஞ்சும் குஞ்சிரிப்பார் - [மங்கைநலார்
வந்துவந்து நாளும் வழிபடுவார் வாழ்த்தெடுப்பார்
ஐந்துசெங்கை யாயென் றழைத்து. (21)

*குறிப்புரை :—நால்வாய் முகத்தான் - தொங்குகின்ற வாயையுடைய யானைமுக விநாயகர். குஞ்சிரிப்பார் – புன் சிரிப்புப் பொருந்திய.*

23. அழைத்தாற் பிணிபோம் அவன்பேர் அமுதங்
குழைத்தாற்போல் உள்ளங் குளிரத்-தழைத்தென்றும்
'நங்கைநல்லூர் நாயகனே ! ஞாநவர தாயகனே !
எங்கள்வர ஸித்திஎம்மான் !' என்று. (22)

*குறிப்புரை :—பிணி - நோய். போம் - போகும். பேர்...அழைத்தால் எனக்கூட்டுக. வர தாயகனே - வரங் கொடுப்பவனே !*

24. என்று கடிப்பூணும் இந்து முடிப்பூணும்
ஒன்றுநெற்றிக் கண்ணில் உளனங்கி-அன்றுமுதல்
இன்றுவரை ஒன்ருய்ப் பலவாய் இலகுமுவாக்
கன்றுநங்கை நல்லூர்க் கரிக்கு. (23)

குறிப்புரை :—என்று - ஸூர்யன். கடி - இடுப்பு. பூண் - (அரைக்கச்சுக்கு) ஆபரணம். "சகட சக்கரத் தாமரை நாயகன் அகடு அசக்கு அரவின் மணியாவுறை விகடசக்கரன்" கச்சியப்ப சிவாசாரியார். இந்து – சந்த்ரன். முடிப்பூண் - தலைக்கணி; விநாயகர் தலையிலும் பிறை உண்டு. ஒன்று - ஒப்பற்ற ; பொருந்திய ; ஒன்ருகிய. அங்கி - அக்நி. ஒன்ருய்ப் பலவாய் - "ஏகன் அநேகன் இறைவன்" – சிவ புராணம். உவா, கரி - யானை.

25. கரிக்குக் கரியாம் கதிக்குக் கதியாம்
ஸரிக்குச் சரியில் தனியாம் - வரிக்குவரி
யானெழுதும் பாட்டில் இருக்குமாம் நங்கைநல்லூர்க்
கானெழுதும் பிக்கைக் களிறு. (24)

குறிப்புரை :—கரி - ஸாக்ஷி. கரிக்குக்கரி - ஸாக்ஷிக்கு ஸாக்ஷி. ஸரி - ஸமாநம். இல் - இல்லாத. தனி - ஒப்பற்ற முழுமுதற்பொருள். கான் - (மதநீர்) மணம். களிறு - ஆண் யானை.

26. களிருனர் ஈசன் கவுரிபிடி யானுள்
பிளிரு அவதரித்தார் பிள்ளை - ஒளிரானை
ஆனனனுய் எங்கும் அமர்ந்தார் அவர்க்கிடம்பேர்
போனநங்கை நல்லூர்ப் புரம். (25)

குறிப்புரை :—களிரு...பிள்ளை - "பிடியதன் உருவுமை கொளமிகு கரியது வடிகொடு தனதடி வழிபடு மவர்இடர் கடி கண பதிவர அருளினன்...வலிவலம் உறை இறையே"— ஸம்பந்தர். களிறு - ஆண்யானை. பிடி - பெண்யானை. பிளிரு - பிளிறி ; கத்தி. பிள்ளை - பிள்ளையார். ஆனை

ஆனனன் - யானைமுகன். பேர் போன - புகழிற் சிறந்த. புரம் - ஊர்.

27. புரமெரிக்கப் போம்பொழுது புக்கரனூர் தேரச்
சுரமிறச்செய் ஒப்பில் ஒருவன் - பரனருச்சித்
தச்சிறுபாக் கத்தேத்த அன்புசெய்தான் நங்கைநலூர்
மைச்சிறுகட் சித்தி வரன். (26)

குறிப்புரை ;—புரம் - திரிபுரம். தேர் அச்சு உரம் இற - தேர் அச்சின் வலிமை அழிய: "முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம் அச்சது பொடி செய்த அதிதீரா"— திருப்புகழ். பரன் - பரமசிவன். அச்சிறு பாக்கம் - பாடல் பெற்ற ஸ்தலம். மை - கரிய. சிறு கண் - யானையின் கண் சிறியது. சித்தி வரன் - ஸித்தி தேவியின் கணவன்; வரஸித்தி விநாயகன் எனலுமாம்.

28. வரஸித்தி வேழமுகன் வாதாவி யானென்
பிரஸித்தி பெற்ற பெருமான் - ஸௌரஸித்தி
புத்திவல்ல பைக்குப் புருஷன் புகழ்படைத்தான்
சத்திவல்ல நங்கைநல்லூர்ச் சார்ந்து. (27)

குறிப்புரை :—வேழம் - யானை. வாதாவியான் - வாதாபி கணபதி ; திருவாரூரில் கோயில் கொண்டுள்ளவர். பிரஸித்தி- புகழ். ஸௌர...புருஷன்-தெய்வத்தன்மை வாய்ந்த ஸித்தி, புத்தி, வல்லபை ஆகிய தேவிமார்க்குக் கணவன். நங்கை நலூர்ச் சார்ந்து-நங்கைநல்லூரை வந்தடைந்து. சத்தி-நங்கை நல்லூரிலுள்ள, பழைய, திருமாலொடு கூடிய நங்கையாம் இலக்குமி.

29. சார்வார் தமக்குச் சரணு கதிப்பொருளாம்
நீர்வார் புழைக்கை நெடுவேழம் - மார்வார்
எருக்கிதழி மாலையணி எந்தைநங்கை நல்லூர்த்
திருக்கிளர்பூங் கோயிலுளான் தேர்ந்து. (28)

குறிப்புரை :—சார்வார் - வந்தடைவார். சரணாகதி - அடைக்கலம். நீர் வார் - தண்ணீரை உறிஞ்சி உண்ணும். புழை - உட்டுளை. மார்வு ஆர் - திருமார்பிற் பொருந்திய. இதழி-கொன்றை. திருக் கிளர்-செல்வம் அல்லது லக்ஷ்மிகரம் விளங்கும்.

30. தேர்ந்தறிதி நெஞ்சே ! ஜெகத்தில் மகத்துவமீ
தோர்ந்தறிந்து கொண்டால்தான் உய்குவாய்!—[வார்ந்தருவி
ஒப்பக்கண் ணீருகுத்தாழ்ந் துள்ளுருகி நங்கைநலூர்த்
தொப்பைக் கணபதிசீர் சொல்லு. (29)

குறிப்புரை :—ஓர்ந்து - ஆராய்ந்து. வார்ந்த அருவி - வார்ந்தருவி-(புனல்) ஒழுகும் அருவி.தொப்பை - மஹோதரம். 'சொல்லு' என வெண்பா முடியலாமென்பதற்கு உதாரணம்:- "பூமாலை சூடிக் கொடுத்தாளைச் சொல்லு"—ஆண்டாள் துதி.

31. சொல்லின் சுவையே ! சுகிக்கும் பரசுகமே !
செல்லின் மழையே ! செழுங்கடலே !—தொல்லின்ப
மூர்த்தியே ! நங்கைநலூர் மூஷிகமா வாஹந ! நீ
சார்த்தினையின் பிச்சுந் தரிக்கு. (30)

குறிப்புரை:-ஸுகிக்கும்-இன்பம் அநுபவிக்கும். பரஸுகம்- ப்ரம்மாநந்தம். செல் - மேகம். தொல் - பழைய. மூஷிகம்- பெருச்சாளி. நீ இச் சுந்தரிக்கு இன்பு சார்த்தினை என அந்வயிக்க. இப் பாடல் அகப்பொருள் துறையது. இச் சுந்தரிக்கு - அழகியாகிய எனக்கு. இன்பு சார்த்தினை - இன்பம் கொடுத்தாய்.

32. சுந்தரி காந்தை சுமகை சுமத்தியமை
நந்தினி கேசினி நாயகனே !—அந்தமில்சீர்
மாணியே ! நங்கைநல்லூர் வாழும்வர ஸித்திபஞ்ச
பாணியே ! தாராய் பதம். (31)

குறிப்புரை :—சுந்தரி...கேசினி - இவர்கள் திருமால் மகளிர் அறுவர்; இவர்கள் கணபதியை மணந்தவர்கள். மாணி - பிரமசாரி. "ப்ரஹ்மசாரிணே நம:"—விநாயகர் அஷ்டோத்தரசதநாமம். பஞ்சபாணி - ஐங்கரன். பாணி - கை. பதம் - திருவடி; (மோக்ஷ) பதவியுமாம்.

33. பதத்துருகிப் பக்குவமாய்ப் பாடுமடி யாருக்
கிதத்தருளைச் செய்யும் இறையே!—விதத்துருமச்
சோலைகள்சூழ் நங்கைநல்லூர்ச் சுந்தரவி நாயகனே!
மூலையுற வைத்தென்வினை மோது. (32)

குறிப்புரை :—பதத்து - உரிய நிலையில். இதம் - ஹிதம்; ஸுகமானது. விதத் துருமச் சோலை - துரும விதச் சோலை-மர வகைகள் நிறைந்த சோலை. சுந்தரம் - அழகு. என் வினை மூலைஉற வைத்து (அதை) மோது என அந்வயிக்க. மூலையில் ஒரு பொருளைத் தள்ளி ஒதுக்கினுல் மோதுதற்குச் சவுகரிய மாயிருத்தல் அநுபவம்.

34. மோதை மனோரமை மொய்சாரு ஹாஸைபிர
மோதைமங்க லைகா மதைமுதலாம் - கோதைமார்
தங்கணவ னே!பூதி ஸாதகனே! மோதகனே!
நங்கைநலூ ராய்!செய்! நலம். (33)

குறிப்புரை :—மோதை...காமதை - திருமால் மகளிர் அறுவர்; இவர்கள் கணபதியின் மனைவிமார். மொய் - புகழ் அல்லது அழகு நிரம்பிய. கோதைமார் - பெண்கள். பூதி ஸாதகன் - அநுபூதி பெற உதவுபவன்; திருநீறணிந்துதவு வோன் என்றிடலுமாம். மோதகன் - கொழுக்கட்டை ஏந்திய கையன்.

35. நலமுநீ தீங்குநீ நானுநீ தானுங்
குலமுநீ இன்பதுன்பங் கொள்பூ - தலமுநீ
யாவுநீ என்றுணர்ந்தேன் எங்கள்நங்கை நல்லூர்வாழ்
தேவுநீ யேமுதன்மைத் தே. (34)

குறிப்புரை :—தானும் - தானும் நீ; 'நீ'—இசையெச்சம். குலம் - ச்ரேஷ்டம் ; குடி; மரபு ; கோயில். பூதலம் - உலகம். முதன்மைத் தே—(முழு) முதற் கடவுள். தே—தெய்வம்.

36. தேவார ஏட்டைத் தெரிசிக்கச் செய்தருளி
மாவாரத் தோடன்பர் வாயார - நாவாரப்
பாடச்செய் நாரையூர்ப் பொல்லாப் பகடுனைக்கொண்
டாடச்செய் நங்கைநல்லூ ரார்ந்து. (35)

குறிப்புரை :—தேவார...செய் - நாரையூர் நம்பியாண்டார் நம்பிக்குத் தில்லையில் தேவார ஏடுகள் பத்திரப்படுத்தப் பட்டுள்ள இடத்தைக் குறிப்பாலுணர்த்தி, அவர் மூலம் அவற்றை வெளிக்கொணர்ந்து, பின்னர்ப் பிரபலப்படுத்தி யாவரும் இன்று பாடும்படிச் செய்த. மா வாரத்தோடு - பேரன்போடு. வாயார, நாவார-வாக்கும், நாக்கும் தெவிட்ட. பொல்லாப் பகடு-பொல்லாப் பிள்ளையார் ; திருநாரையூர்க் கணபதி. பகடு - யானை. ஆர்ந்து - பொருந்தியிருந்து.

37. ஆர்ந்தபில காரிமேல் ஆங்கே உலாவருகை
கூர்ந்தருள்செய் செல்வக் கொழுமுநியே-சேர்ந்தடியார்
நாடிக்கொண் டாடுநங்கை நல்லூரெம் நாத! நினைப்
பாடிக்கொண் டாடஅருள் பண்ணு. (36)

குறிப்புரை :—ஆர்ந்த - பொருந்திய. பிலகாரி - பெருச்சாளி. உலா - திருவீதி உலா. கூர்ந்து - மிகுதியாக. முநி - யானைக் கன்று. 'பண்ணு'-என முற்றியலுகர வாய்பாட்டிலும் வெண்பாக்கள் முடிவதற்கு உதாரணம், 'மெய்ப்பொருள் காண்ப தறிவு'—திருக்குறள்.

38. பண்ணுமிசைப் பாட்டும் பழமும் பழச்சுவையும்
கண்ணுங் கருத்துமாய்க் காணறிவும் - எண்ணும்
எழுத்தும் அனைத்தும் எழில்நங்கை நல்லூர்
வழுத்தும் கணக்கோன் வடிவு. (37)

குறிப்புரை :—பண் - இசை. கணக்கோன் - கணத் தலைவன் ; கணேசன். 'வடிவு' என வெண்பா முடியலா மென்பதற் காதாரம் முன்பாட்டின் குறிப்புரையில் காண்க.

39. வடிவத்தால் ஆனை மறத்தால் மடங்கல்
பொடிவற்ற நெற்றியாற் போதம் - ஒடிவற்ற
கால்களாற் பூதமிவை காட்டுநங்கை நல்லூர்வாழ்
வேல்களா மேனி இபம். (38)

குறிப்புரை :—மறம் - வலிமை. மடங்கல் - சிங்கம். பொடி - திருநீறு. வற்ற - நீங்காத. போதம் - ஞானம். ஒடிவு - அழிவு. பூதம் - விநாயகரின் கால்கள் பூதக் கால்கள் போல் குட்டையாயிருத்தலின் 'பூதம் காட்டும் கால்க' ளெனப் பட்டது. வாழ்வு ஏல் - வாழ்க்கையை ஏற்ற. களா - களாப் பழம் போற் கறுத்த. மேனி - உடல். இபம் - யானை.

40. இபமுகத்தைப் பெற்றான் எழிற்பொழிற்செங் காட்டில்
இபமுகத்தற் செற்றான் எமக்குச் - சுபமுகத்தால்
நல்லருளைச் செய்துதவும் நங்கைநலூர் வாணன்மஹா
வல்லபங்கொள் புத்தி வரன். (39)

குறிப்புரை :—பொழில் - சோலை. செங்காடு - திருச்செங் காட்டங்குடி. இபமுகத்தற் செற்றான் - கஜமுகாஸுரனைக் கொன்றவன். சுபமுகம் - இனிய முகம் ; ஸுமுகம். வாணன்- வாழ்நன் - வாழ்பவன். மஹாவல்லபம் - பேராற்றல். புத்தி - புத்திதேவி. வரன் - மணமகன்.

41. வரலட் சுமிமருகன் வள்ளிமலை வள்ளல்
ஸுரலட் சுமிதோள்தோய் வாற்கு - நரலட்
சணலட் சுமிகுற லக்ஷ்மி தழுவும்
மணமுடித்தான் நங்கைநலூர் மன். (40)

குறிப்புரை :—வரலக்ஷ்மி ;— திருமகள். மருகன் - மாப் பிள்ளை ; மருமானுமாம். வள்ளிமலை வள்ளல் - முருகவேள். ஸுரலட்சுமி - தெய்வயானையம்மை. நர - மனிதகுலத்தில் அவதரித்த. லட்சண லட்சுமி - அழகிய திருமகள் போல் வாளாம். குறலக்ஷ்மி-வேடப் பைந்திரு. மணம் - கல்யாணம். மன் - மன்னன் ; அரசன்.

42. மன்பதைக்கு நாதன் வரஸித்தி மாதங்கம்
அன்பதைச்செய் வார்பால் அருளுடையான்-
[ஒன்பதைப்போல்
உள்ளேன் எனையும் உகந்தாண்டான் நங்கைநல்லூர்க்
குள்ளே உறையுமொரு வன். (41)

*குறிப்புரை :—மன்பதை - உயிர்கள். மாதங்கம் - யானை. அன்பு அதை - அன்பை. ஒன்பதைப்போல் உள்ளேன் – '9' ஐ எவ்வளவு விரித்துக்கொண்டு போனாலும் அது கடைசியில் '9' என்ற எண்ணிலேயே வந்து முடிதல் போல எவ்வளவு விரியினும் நான் என் அகங்காரத்துக்குள் அடங்குபவன். (உதாரணம். $9 \times 2 = 18$, $1 + 8 = 9$, $9 \times 9 = 81$, $8 + 1 = 9$. $9 \times 6 = 54$, $5 + 4 = 9$.)*

43. ஒருவன் பலராய் ஒரேதருணத் திற்காண்
உருவன் அருவன் உரைக்கில் - உருவருவன்
நங்கைநல்லூர் என்னும் நலதலத்து வாழ்நாலு
வெங்கையுளான் ஐங்கரன்காண் மின். (42)

*குறிப்புரை :—காண் - காணப்படும். உருஅருவன் - ரூபாரூபன். நல - நல்ல. நாலு - தொங்கும். வெம் - விரும்பத் தக்க. கை - துதிக்கை. காண்மின் - பாருங்கள். நாலு வெங் கை ஐங்கரன் என்றது மயக்கங் கொடுப்பதாயினும் பொருளில் மாறுபட்டவை என்றறிக.*

44. மின்னுக் கொடியிடையாள்மேகலைபூண்பைங்கிளியாள்
பொன்னுக் கினிய புகழ்மருமான் - என்னுச்சி
மேல்ான் மனத்திடையான் மேவடியார் நங்கைநல்லூர்த்
தோலா னனங்கொள் துரை. (43)

*குறிப்புரை :—மின்னுக்கொடி – மின்னல் கொடி. மேகலை- மகளிர் இடையணி. பொன் – இலக்குமி. மருமான் – வழித் தோன்றல்; மாப்பிள்ளையுமாம். உச்சி – தலையுச்சி. என்... இடையான்—'மனத்தகத்தான் தலைமேலான்' - அப்பர். அடியார் மேவு என மாற்றுக. தோல் ஆனனம் - யானைமுகம்.*

45. துரைமதுரைச் சொக்கன் ஸுதன்பரி பூர்ணன்
பரைமதுர வாக்கியருள் பாலன் - வரைமதிள்சூழ்
நங்கள்சென்னை ஓர்பாங்கர் நங்கைநல்லூர் நண்ணுவர
துங்கனெங்க ளுக்குத் துணை. (44)

குறிப்புரை :—துரை - பெருமகன். ஸுதன் - பிள்ளை. பரிபூர்ணன் - இருடிப்பட்டி அடிகளார்க்குக் காட்சி தந்து மதுரையில் வீற்றிருக்கும் விநாயகர்; வைகைக் கரையில் வாழ்பவர் இவர். பரை - பராசக்தி. மதுரவாக்கி - இன்சொலி; உமை. வரை மதிள் - மலைபோலுயர்ந்த மதிற்சுவர்கள். நங்கள் - நமது. பாங்கர் - பக்கம். வரதுங்கன் - பரிசுத்தமான வரஸித்தி விநாயகன்.

46. துணைத்தா மரைத்தாள் தொழுவார்க்கு மார்க்கத்
துணைத்தாய் உதவுமெனச் சொல்லி - அணைத்தான்
தடுத்தாண்டான் கூரேக தந்தன்நங்கை நல்லூர்
அடுத்தாண்டான் என்னை அழைத்து. (45)

குறிப்புரை :—துணை - இரண்டு. மார்க்கத் துணைத்து ஆய் - வழித்துணையதாக. கூர் ஏக தந்தன் - கூர்மை பொருந்திய ஒற்றைக் கொம்பன். அடுத்து-வந்து குடியிருந்து.

47. அழைப்புக் கெளியான் அகந்தைக் கரியான்
உழைப்புக்கொத் தூதியங்கள் உய்ப்போன்-பிழைப்பிற்
பிழைத்தாரை மீண்டும் பிழைஇழையா வாறுட்
குழைத்தாளும் நங்கைநல்லூர்க் கோன். (46)

குறிப்புரை :—அழைப்பு - அன்புக் கூப்பாடு. அகந்தை - அகங்காரம். ஊதியம் - சம்பளம். உய்ப்போன் - செலுத்துவோன்; அநுபவிக்க வைப்பவன். பிழைப்பில் - வாழ்வில்; உத்யோகத்தில். பிழைத்தாரை - தவறுசெய்தவரை. பிழை இழையாவாறு - குற்றம் புரியாத வண்ணம். உள் குழைத்து- உள்ளத்தை உருக்கி. கோன் - தலைவன்.

48. கோனாய் எமக்குக் குருபரனாய்த் தெய்வமாய்த்
தானாய தாயாகித் தந்தையாய் - வானாய்
வளியாய் ஒளியாய் வயமாய் நிலமாய்
வெளியானான் நங்கைநல்லூர் வேந்து. (47)

குறிப்புரை :—வளி – காற்று. ஒளி - தீ. வயம் – நீர். வெளி ஆனான் - வெளிப்பட்டான். வேந்து - ராஜா.

49. வேந்தன் விபுதரொடும் வேண்டிவழி பாடுசெயும்
சாந்தன்நங்கை நல்லூர்த்தந் தாவளக்கோ-வேந்தன்
கதிர்கனலி மூன்றுகண்ணைக் காணும்வர ஸித்தி
மதிவதநன் என்கண் மணி. (48)

குறிப்புரை :—வேந்தன் - இந்திரன். விபுதர் - தேவர்கள். சாந்தன் - அமைதி உருவினன். தந்தாவளக் கோ – ஆனைத் தலைவன். வேந்தன் - சந்திரன். கதிர் – ஸூர்யன். கனலி – அக்நி. மதி – யானை. வதநன் – முகத்தவன். மதிவதநன் – சந்த்ரன் போல் முகத்தவன் எனல் கணபதிக்குப் பொருந்தாமை காண்க. மதத்தையுடையது மதி. மதி - யானை. கரத்தையுடையது கரி எனல் போல.

50. மணிமுத்தங் கோத்த மணிமுகப டாஞ்சேர்
அணிமத்த யானை அனையான்-கணியொத்து
வள்ளிமலைக் கண்ணின்ற வாலன் துணைவனெனுந்
தெள்ளிமலை நங்கைநலூர்த் தே. (49)

குறிப்புரை :—மணி – ரத்நம். முத்தம் - (வெண்) முத்துக்கள். மணி - அழகிய. முகபடாம் - யானையின் முகத்தில் போர்த்தும் அழகுச் சீலை. அணி - அழகிய. மத்தயானை - மதங்கொண்ட ஆனை. கணி - வேங்கை மரம். கண் - இடத்தில். வாலன்-பாலன் - குமரன். துணைவன் - ஸஹோதரன். தெள்ளிமலை - யானை மலை ; கணேசகிரி. தே - தெய்வம்.

51. தேவாதி தேவன் திருவிளையாட் டாற்றேன்றி
மூவாது மூத்த முதற்கடவுள்-சாவாதான்

என்றும் பிறவான் நரைதிரைமூப் பில்லாதான்
சென்றுநங்கை நல்லூர்வாழ் தேவு. (50)

*குறிப்புரை :—தேவாதி தேவன் - சிவபிரான். மூவாது - மூப்படையாது. மூத்த - முருகவேட்கு முன் பிறந்து மூத்த. சாவாதான் - இறவாதவன். நரை - வெள்ளை மயிர்த்தோற்ற முண்டாதல். திரை - தோற்சுருக்கம். மூப்பு - கிழத்தனம். 'தேவு' என வெண்பா முடியலா மென்பதற்கு ஆதாரம் பாடல் 36-இன் குறிப்புரையிற் காண்க.*

52. தேவர்க்கும் மூவர்க்கும் யாவர்க்கும் தேரரிய
கோவர்க்கத் தோடெங் குலமுழுதும்-காவக்ர
துண்டன் கபிலன் ஸுமுகன் கஜகர்ணன்
அண்டன்நங்கை நல்லூ ரவன். (51)

*குறிப்புரை :—மூவர் - அயன், அரன், அரி ஆகியோர். தேரரிய - தேர்ந்தறிதற் கருமையான. கோ - தலைவன். வர்க்கத்தோடு - கூட்டத்தோடு. எம் குலம் - எமது மரபு. கா - காக்கின்ற. வக்ரதுண்டன் - விசித்ரமான முகத்தினன் அல்லது விபரீதமான மூக்கினன். கபிலன் - கபில நிறமுடைய வன். ஸுமுகன் - ப்ரஸந்ந வதநம் உடையவன். கஜகர்ணன் - ஆனைபோல முறச்செவி படைத்தவன். அண்டன் - தேவன்.*

53. அவனே எவர்க்கும் அறிவரிய ஜோதி
அவனே முழுமுதல்வ னுவான்-அவனே
சிவனும் அயனும் திருமாலாம் ஞானோற்
பவனுமெம் நங்கைநல்லூர்ப் பந்து. (52)

*குறிப்புரை :—ஞானோற்பவன் - அறிவை உற்பத்தி பண்ணுபவன். பந்து - உறவினன்.*

54. பந்தெடுத்து வீசிப் பலபா லகர்எறிந்து
நந்தவிளை யாடல்செயும் நங்கைநலூர் - இந்தணிந்த

வேணியன்பா சாங்குசமா மென்கனிகோ டொண் [பணியப்
பாணியன்ருன் மேவும் பதி. (53)

*குறிப்புரை :—நந்த - விளங்க; மேம்பட. இந்து - சந்த்ரனை. வேணியன் - ஜடையன். பாசம், அங்குசம், மா மென் கனி (ம்ருதுவான மாம்பழம்), கோடு (ஏக தந்தம்), ஒண் ப(ண்)ணிய - ஒளிமிக்க கொழுக்கட்டைப் பலகாரம் (இவை ஏந்தும்) பாணியன் - திருக்கையன். பதி - ஊர்.*

55. பதியென்ப நங்கைநல்லூர் பாசாங் குசற்குச்
சதியென்ப ஸித்திபுத்தித் தாய்மார்-பதியென்
வரஸித்தி மாதங்க மாமுகனை வாழ்த்திப்
பரசித்தி ளைக்கவம்மின் பார்த்து. (54)

*குறிப்புரை :—பதி - ஊர். பாசாங்குசன் – கணபதி. ஸதி - மனைவியர். என்ப - என்பார்கள். பதி என் - தலைவனெனப்பெறுகின்ற. மாதங்க மா - யானையாகிய விலங்கு. பரசி – பரவி; வழிபட்டு. திளைக்க - இன்பம் அநுபவிக்க. வம்மின் - வாருங்கள்.*

56. பார்த்தவுடன் தீரும் பழவினைகள் பால்தயிர்நெய்
வார்த்தவுடன் வாரா வருவினைகள் - மூர்த்திநங்கை
நல்லூர் வரஸித்தி நாமக் கரிமுகனை (55)
எல்லோரும் ஏத்துமின்சென் றின்று.

*குறிப்புரை :—வார்த்த - அபிஷேகித்த. வருவினை - இனி வர இருக்கும் நல்வினை தீவினைகள். மூர்த்தி - கடவுள். நாமம்-பேருடைய. ஏத்துமின் - வழிபடுங்கள்.*

57. இன்றிருக்கும் தேஹம் இறப்பதுண்மை காயமெய்
என்றிருக்க வேண்டாம் இகத்துளீர்!—மென்றிருக்கை
யாந்துதிக்கை ஆனையின்தாள் ஆதரித்து நங்கைநலூர்
நாந்துதிக்கை நல்கும் நலம். (56)

*குறிப்புரை :—காயம் - உடம்பு. மெய் - உண்மை. இகத்து - இக லோகத்து; இவ் வுலகத்தில். மென் திருக்கை -*

மென்மையான அழகிய கை. துதிக்கை-தும்பிக்கை. ஆதரித்து-அன்புசெய்து. நாம் துதிக்கை - நாம் ஸ்தோத்ரம் செய்தல். நலம் நல்கும் – நன்மை தரும்.

58. நலனுமவன் தீங்குமவன் நானுமவன் தானும்
பலனுமவன் பண்ணுசெயல் பற்றைம்-புலனுமவன்
யாவுமவன் நங்கைநலூர் ஏய்ந்த வரஸித்தித்
தேவுமவன் தேர்மின் தெளிந்து. (57)

குறிப்புரை :—தானும் - தானும் அவன். 'அவன்' என்பது இசையெச்சம். பலன் - பயன். பண்ணு - செய்யும். ஐம்புலன் -ஐம்பொறியறிவு. ஏய்ந்த - பொருந்தி வாழ்ந்திருக்கும். தேவு - கடவுள். தேர்மின் - ஆராய்ந்தறியுங்கள். நலனும் அவன் தீங்கும் அவன்..."குற்றம் நீ குணங்கள் நீ கூடலால வாயிலாய்"—ஸம்பந்தர்.

59. தெளிந்தவர்க்கு நோக்கும் திசையெங்கும் தானே
ஒளிந்திருந்து தற்காட்டும் உள்ளம்—அளிந்தவர்க்கு
நல்லவரம் ஈயுநங்கை நல்லூர் வரஸித்தி
வல்லபவி நாயகன்முன் வந்து. (58)

குறிப்புரை :—தெளிந்தவர் - ஞானத்தால் தெளிவடைந்தவர்கள். நோக்கும் திசை - பார்க்கும் திக்குகள். ஒளிந்து - மறைந்து. தற்காட்டும் - தன்னையே காட்டும். உள்ளம் அளிந்தவர் - மனம் பழுத்து இளகியவர்கள். வல்லபம் - ஆற்றல் ; வல்லபை எனும் சக்தியுமாம். முன் - இடத்தாலும், காலத்தாலும் முன்னர்.

60. வந்துதோ பிக்கரணம் மண்டியிட்டுப் போட்டுமண்டை
முந்துகுட்டிக் கொண்டு முறையிட்டே -ஐந்துகரன்
தோத்திரங்கள்சொல்லித்தொழுவார்க்குநங்கைநல்லூர்ச்
சேத்திரமே முத்திதரும் தேர்ந்து. (59)

குறிப்புரை :—தோபிக்கரணம் - இரண்டு காதுகளையும் இருகைகளால் குறுக்காகக் கத்திரிக்கோல் போலப் பிடித்துக்

கொண்டு முழங்கால் மண்டி போட்டு விநாயகர் முன் செலுத்தும் வழிபாட்டுமுறை. தோபி:=இரண்டு. கரணம்-காது. இதைத் 'தோப்பணம்,' 'தோப்புக் கரணம்' என்றெல்லாம் மருவி வழங்குவர். மண்டை - தலைமேல். முந்து - முன்னரே. சேத்திரம் - க்ஷேத்ரம்; தலம்.

61. தேர்விலியாய் வாணாளை வீணாளாய்த் தேய்த்தொழிந் [தேன்
ஆர்வமின்றி இத்தனைநாள் ஐயகோ!—கார்வரைபோல்
நங்கைநலூர்க் கோயில் நடுவணமர் நாலுதுதி
வெங்கைம்மா வைப்புகழ்தல் விட்டு. (60)

குறிப்புரை:—தேர்வு இலி - ஆராய்ச்சியில்லாதவன். வாழ் நாளை - வாழ்க்கை நாட்களை. ஆர்வம் - (தெய்வத்தின் மேல்) ஆசை. ஐயகோ - ஐயோ! இரக்கக் குறிப்பு. கார் வரை - கருமலை. நடுவண் - இடையில். நாலுதுதி வெம் கைம்மா - தொங்கக்கூடிய, விரும்பத்தக்க துதிக்கையை யுடைய விலங்காம் யானை. விட்டு - விடுத்து.

62. விட்டேறு கைக்குடைய வேள்தம்முன் மூஷிகமேற்
றொட்டேறு தும்பிமுகன் சூர்ப்பகர்ணன்-மட்டேறு
பூங்குழலி வல்லபைகோன் போந்தநங்கை நல்லூர்போற்
றீங்குழல்கை நெஞ்சே இரிந்து. (61)

குறிப்புரை:—விட்டேறு - வேல். வேள் தம்முன் - முருகனுக்கு அண்ணன். மூஷிகம் - பெருச்சாளி. தும்பி - யானை. சூர்ப்பகர்ணன் - முறச்செவியன். மட்டு - தேன்; வாஸனை. ஈங்கு - இங்கு. உழல்கை - ஊடாடுதல். இரிந்து - நீங்கி. நெஞ்சே...போற்று எனமுடிக்க.

63. இரிந்ததுவும் மாயை இடத்தினின் றெங்கும்
விரிந்ததுவும் வேதமெலாம் வேட்கை-புரிந்ததுவும்
சோலைபொழி நங்கைநல்லூர்த் தோன்றும் வரஸித்தி
யானைதிருப் பொற்றா ளிணை. (62)

குறிப்புரை :—இரிந்தது - நீங்கியது. வேட்கை - ஆசை. சோனை - பெருமழை.

64. இணையற்ற கண்கண்ட எங்கள்குல தெய்வம்
துணையற்ற எற்கோர் துணைமற்-றணையற்ற
வெள்ளத் தருட்கடல்செவ் வேள்துணைவன் நங்கை
கள்ளக் கடாக்களிறு காண். [நல்லூர்க் (63)

குறிப்புரை :—இணை - ஒப்பு. எற்கு - எனக்கு. அணை - கரை. கள்ளக் கடாக்களிறு - திருக்கடவூரிற் கள்ள விநாயகர் என்றே ஒருவரிருக்கிறார். கடா - ஆண்.

65. காண்டற் கரியான் கருத்துக்கும் கண்ணுக்கும்
தீண்டற் கரிய திருமேனி-பூண்டற்
குரியதாப் பாம்பணிந்த ஓங்கல்நங்கை நல்லூர்க்
கரியதாக் காண்பான் கணுக்கு. (64)

குறிப்புரை :—காண்டற்கு - பார்த்தற்கு. தீண்டற்கு - தொடுவதற்கு. பூண்டற்கு - பூணுதற்கு. ஓங்கல் - மலை. கரி - யானை. கணுக்கு - கண்ணுக்கு.

66. கணுக்கரும்பு வில்லி கருவேள் உனக்கோர்
அணுக்கனே ! மைத்துனனே ! அன்னன்-துணுக்குற வைத்
தெம்மைப் படுத்தும்பா டேதுமற நங்கைநல்லூர்
அம்மையப்பன் சேயே ! அருள். (65)

குறிப்புரை :—கணு - கண்கள். கருவேள் - மந்மதன். அணுக்கன் - நெருங்கிய உறவினன் ; அணுக்கத் தொண்டனுமாம். மைத்துனன் - திருமால் மகளிரைக் கணபதி மணந்ததால் திருமால் மகனும் மதநன் அவர்க்கு மைத்துனனுதலும் முறையே. துணுக்குற - நடு நடுங்க.

67. அருளே திருவுள்ளம் அன்பே உருவம்
தெருளே திருமுகத்தின் தேசு-மருளேய்ந்த
மாவாங் கயத்தின் வத்நங்கொள் நங்கைநலூர்த்
தேவாங் கணபதிக்குத் தேர். (66)

குறிப்புரை :—தெருள் – தெளிவு. தேசு – தேஜஸ். மருள் (ஏய்ந்த - பொருந்திய) மா - மருண்மா - யானை. கயம் – யானை. வதநம் - முகம். தேவு - தெய்வம். தேர் - தேர்ந்து அறிந்து கொள்.

68. தேரச் சொடித்துச் சிவன்தொழவும் செப்பனிட்ட
வீரச் செயலன் விநாயகனென்-ஆரச்
சிறப்பையெலாம் சிந்தனையுட் டேக்குவார் தீர்வார்
பிறப்பைநங்கை நல்லூர்ப் பிறந்து. (67)

குறிப்புரை :—ஆர - நிரம்ப. தீர்வார் - ஒழிப்பர். பிறப்பைத் தீர்வார் எனக் கூட்டுக.

69. பிறந்திருந்து வாழ்ந்து பிறகிறந்து சோர்தல்
துறந்தறிந்து தானைத் தொழுமின்!—மறந்துவிடா
தானை முகத்தவனை ஆலயங்கொள் நங்கைநல்லூர்ப்
பானை வயிற்றவனைப் பார்த்து. (68)

குறிப்புரை :—துறந்து - விட்டொழித்து. பானை வயிற்றவன் – பெரிய பானைபோற் பருத்த திருவயிறன்.

70. பார்க்கும் சிறுதிருக்கண் பக்தர்கட்குப் பேரருளை
ஆர்க்கும் பெறலரிதை ஆக்குவிக்கும்-போர்க்குஞ்
சரமுகனைத் தொண்டைத் தலநங்கை நல்லூர்க்
கரமுகனைக் கண்டுதொழக் கை. (69)

குறிப்புரை :—ஆர்க்கும் – யாருக்கும். போர்க் குஞ்சரம்-பொருகளிறு. தொண்டை – தொண்டை நாடு. கர முகன்–தும்பிக்கையை முகத்திற் கொண்டவன். கை தொழ என்பது தொழக்கை எனப் பாட்டில் வந்தது.

71. கைக்குங் கரும்புங் கனிவகையும் கட்டியும்
துய்க்கும் திருவருளைத் துய்த்தார்க்கு-வைக்கும்
நிதியனைய நங்கைநல்லூர் நேசிக்கும் நீள்கைத்
துதியனையே கண்டு தொழுது. (70)

குறிப்புரை :—கைக்கும் – கசக்கும். கட்டி - வெல்லக் கட்டி. துய்க்கும் - அநுபவிக்கும். கைத்துதியன் - துதிக்கையன்.

72. தொழுநோய் முதலான தோய்மெய்யிற் றோய்ந்தே
அழுநோய் அகலப்பெற் றன்பாற்-கெழுநோன்றாள்
போற்றிநங்கை நல்லூர்ப் புகர்முகனைப் பூஜித்துச்
சாற்றினுல் உய்யலாந் தான். (71)

குறிப்புரை :—தொழுநோய் - பெருவியாதி. தோய் மெய் – பொருந்தும் தேஹம். அழும் நோய் - அழுகின்ற வியாதி. கெழு நோன்தாள் - ஒளி பொருந்திய, வலிய அல்லது பெருமை நிறைந்த திருவடி. புகர் முகன் – புள்ளிகளைக் கொண்ட (யானை) முகத்தவன். தான் - அசை.

73. தானு னெனுமிரண்டும் தாண்டிக் கடந்தநிலை
ஆனு னறிவார்க் கருள்பொழியும்-கானுறும்
மாத்துதிக்கை யான்நங்கை நல்லூர் மறமலியை
நாத்துதிக்கை இன்பம் நமக்கு. (72)

குறிப்புரை :—தான், நான்—"யான்தான் எனும் சொல் இரண்டும் கெட்டாலன்றி"—கந்தரலங்காரம். கான் நாறும்-நறுமணம் கமழும். மா - பெரிய. மறமலி - யானை. நா – நாவு. துதிக்கை - தோத்திரம் செய்தல்.

74. நமக்கரிக்க வேண்டுநங்கை நல்லூரை நண்ணி
யமக்கரிக்கா ளாகாமே என்றும்-சுமக்கரிய
பாவச் சுமையைப் பலிகொடுத்துப் பண்ணியமுண்
தேவக் கரியைச்சிந் தித்து. (73)

குறிப்புரை :—நமக்கரிக்க – நமஸ்காரம் செய்ய; வணங்க. யமக் கரி - ஆனை போன்ற எமன்; எமனுடைய ஸாக்ஷி எனலுமாம். பண்ணியம் - பணியாரம். உண் - உண்ணும். தேவக் கரி - தெய்விகமான யானை; கணபதி.

75. சிந்திப்போம் நங்கைநல்லூர்த் தெய்வக் களிற்றையுடன்
சிந்திப்போம் தீவினைகள் சேராமே-ஸந்திப்போம்
வந்திப்போம் ஞான வரஸித்தி வண்கயத்தைப்
பந்திப்போம் உள்ளப் பளத்து. (74)

*குறிப்புரை :—சிந்திப்போம் - தியானிப்போம். (உடன் தீவினைகள் சேராமே) சிந்திப் போம்-அழிந்துபோகும். கயம் - யானை. பந்திப்போம் - கட்டுவோம். உள்ளப் ப(ள்)ளத்து - (நம்) உள்ளமாகிய படுகுழியில் தள்ளி (எங்கும் ஓடாமற் படிக்) கட்டிவைப்போம் என்றபடி.*

76. பளபளத்த வண்ணப் பகட்டுமுகன் மேனி
தளதளத்த ஜோதியுருத் தன்னைக்-கொளகொளத்த
என்னெஞ்சுங் கூடக்கண் டின்புறுமால் நங்கைநலூர்க்
கின்னஞ்செல் என்றுங் கிழுத்து. (75)

*குறிப்புரை ;—பகடு-யானை. கொளகொளத்த - தளர்ந்த. இன்னம் - இன்னமும்.*

77. இழுத்தவழிக் கேகும் இளநெஞ்சே ! இன்பம்
பழுத்தபழம் நங்கைநலூர்ப் பாழி-முழுத்தவத்தார்
உண்ணக் கிடைப்பான் உளதே கணபதியென்
றெண்ணக் குறைகளுனக் கென் ? (76)

*குறிப்புரை :—பாழி - கோயில். கிடைப்பான் - கிடைத் தற் பொருட்டு. என் – என்ன? 'கணபதி' என்று இன்பம் பழுத்த பழம் நங்கைநலூர்ப் பாழி...உளதே என அந்வயிக்க.*

78. என்னாலே தான்தன்னை இன்னிசைபா டிக்கொண்டு
தன்னாலே தன்னைத் தமிழ்ப்படுத்தும்-பொன்னால
வாயான் பரிபூர்ண மாநாமன் நங்கைநலூர்
வாயான் வரஸித்தி மா. (77)

*குறிப்புரை :—பொன் – அழகிய. ஆலவாயான் - மதுரை யான். பரிபூர்ண நாமன் - இருடியர்பட்டி ஸ்வாமி*

களுக்குக் காட்சி தந்த மதுரைப் பரிபூர்ண விநாயகர். மா – சிறந்த. வாயான் - இடத்தவன். மா - யானே.

79. வரஸித்தி மாக்களபம் வாரா ணஸிமா
துரஸித்தி கூட்டாத தோல்ஸுப்-பிரஸித்தி
புத்திபங்கன் பொற்கருணை பூத்திடர்காய் போதபல
சத்திநங்கை நல்லூர்த் தவன். (78)

குறிப்புரை :—களபம் - யானே. வாராணஸி மா - காசி டுண்டி விக்நேச்வரராம் யானே. துர் - கெட்ட. அஸித்தி – ஸித்திக்கக் கூடாதவை. தோல் – யானே. ஸுப்பிர - வெளுத்த அல்லது தூய்மையான. ஸித்திபுத்தி பங்கன் - ஸித்தி, புத்தி இருவரையும் பக்கத்திற் கொண்டவன். இடர் காய் - துன்பத் தைக் கோபிக்கும். போத பல – ஞாநப் பழம். தவன் - தவசி.

80. தவக்கன்றே ! சக்திக்கும் சம்புவுக்கும் ; சைவச்
சிவக்குன்றே ! தேவாதி தேவே ! —உவக்கின்றேன்
உன்னைப் புகழடியா ருண்ணடுவே வீற்றிருந்துற்
கென்னைநங்கை நல்லூரில் ஈந்து. (79)

குறிப்புரை :—உற்கு-உனக்கு. என்னை...ஈந்து-என்னையே உனக்கு அர்ப்பணித்து.

81. ஈந்தறியேன் யார்க்கும் எதுவும்நின் கோயில்வலம்
போந்தறியேன் பொய்யொழுக்கப் பூரையேன்-மாந்தறி
தெய்வச் சிவஞாநத் தேனமுதை நங்கைநலூர்ச் [யேன்
சைவக் கரீ!ஆள் தடுத்து. (80)

குறிப்புரை:—பூரை-அற்பம். ‘அமரர் இதுபூரை அதிசயம் என’—திருப்புகழ். மாந்த அறியேன்-உண்ணத் தெரியாதவன். கரீ-யானையே! ஆள் தடுத்து-தடுத் தாட்கொள்வாயாக!

82. தடுத்தாள்வார் நின்னையன்றித் தாமெனற்கா ருள்ளார்?
எடுத்தாள்வ துன்கடனே இன்பம் - கொடுத்தாள்வாய்!

நாளுநங்கை நல்லூர் நலகம்ப மாமுகனே !
ஆளுநனுள் ஈதென் றறிந்து. (81)

*குறிப்புரை:—எற்கு-எனக்கு. ஆர்-யார். கம்ப மா-யானை.*

83. அறிந்துசெய்த சில்பிழையும் அன்றிஅறி யாமற்
செறிந்துசெய்த பல்பிழையும் சித்தத் - தறிந்துமறி
யாதவரைப் போல்நின் றவைபொறுத்தாற் றுனுய்வேன்
வேதவரை நங்கைநல்லூர் வேந்து. (82)

*குறிப்புரை:—சில்-சில. செறிந்து-நிறைய. பல்-பல. வேத வரை-வேதமலை. வேந்து-அரசு; கணபதி.*

84. வேந்தாகி ஆட்சிசெயும் வேளையெற்கு வந்துறினும்
ஆந்தாகம் நெஞ்சுலர்த்த ஆங்காங்கே - போந்தாகம்
உண்பசிக்குப் பிச்சைக் குழலுறினும் நங்கைநல்லூர்க்
கண்பசுத்த தோல்மறவேன் கண்டு. 83)

*குறிப்புரை:—ஆம் தாகம் - ஆன நீர்வேட்கை. போந்து - போய். ஆகம்-உடம்புக்கு. கண் பசுத்த-பசிய கண்களையுடைய; பைங்கண் கொண்ட. தோல்—யானை; கணபதியை.*

85. கண்டுமொழி பேசும் கருங்குயிலாள் கற்புடைய
வண்டுவிழி மங்கையொரு வல்லபையாப் - பண்டுவர
ஈசனே யொத்தவளை ஏற்றநங்கை நல்லூரில்
வாசனே ! முத்தி வழங்கு. (84)

*குறிப்புரை:—கண்டு – கற்கண்டு. கருங்குயில்-பார்வதி. வண்டு விழி-வண்டு போலத் திருக்கண். பண்டு—முன்பு. ஈசன்-பரமசிவன்.*

86. வழங்குவரத் தும்பிக்கை வான்கரியே ! வேதம்
முழங்குவள நங்கைநல்லூர் மூர்த்தீ ! - கிழங்குவகை
பச்சரிசி பிட்டு பயறவலெள் பாகுபழம்
துய்ச்சருசி மிக்காய் தொகுத்து. (85)

குறிப்புரை:—வான் கரி-பெரிய யானை. துய்ச்ச-துய்த்த; உண்ட. ருசி-உருசி. தொகுத்து—தொகுப்பாக; வகை வகை யான உணவுகளைத் தொகுத்துண்ணலால்.

87. தொகுத்தவனே ! எல்லாத் துறைமறையும் யாவும்
வகுத்தவனே ! ஸித்தி வரதா ! - மிகுத்தவனே
எவ்வெவர்க்கும் யாண்டுமென்றும் எங்கணங்கை
[நல்லூரில்
தெவ்வெவர்க்கும் இல்லாமை செய். (86)

குறிப்புரை:—மறை-வேதம். ஸித்தி வரதன்-ஸித்திகளைத் தருபவன். யாண்டும்-எவ்விடத்திலும். தெவ்வு-பகைவர்.

88. செய்யாய் ! கரியாய் ! திருவுருவம் வெள்ளியாய் !
மெய்யாரு நீலனே ! மின்னுபொன்போன்ம்-ஐயாவே!
அஞ்சுவண ! நங்கைநலூர் அஞ்சுமுக ! அஞ்சுகர !
அஞ்சுவண மின்றிளனை யாள். (87)

குறிப்புரை:—செய்யாய்–சிவந்தவ! கரியாய்-கறுத்தவ ! வெள்ளியாய்-வெளுத்தவ! மெய்-உடல். ஆரும்-பொருந்திய. பொன்போன்ம் - பொன்போலும். அஞ்சுவ(ண்)ண - பஞ்ச வர்ணனே! அம் சுமுக-அழகிய - ஸுமுகனே! அஞ்சு-ஐந்து. கர-கைய! அஞ்சுவ(ண்)ணம்-பயப்படும் தன்மை.

89. ஆளப் பிறந்தாய் அகிலாண்ட கோடியெலாம்
மாளப் பிறந்து மரிப்பதனின் - மீளப்
பணித்தென்னை நங்கைநலூர்ப் பாசாங் குசத்தாய் !
மணித்தென்னை வண்கைய!ஆள் வந்து. (88)

குறிப்புரை:—மாள - இறக்க. மரிப்பதனின் - இறப்பதினின்று. மணித் தென்னை-மணிபோன்ற தேங்காயைத் தரும் தென்னைமரம் போல நீண்ட. வண் கைய-வள்ளன்மை பொருந்திய துதிக்கையனே!

90. வந்துளத்தில் வாழும் வரஸித்தி வாரணமே !
நைந்துளத்தில் நித்தம் நலிவெய்தி - நொந்துழைத்துக்

காலமெலாம் வீணே கடத்திவிட்டேன் நங்கைநலூர்த்
தாலகர ! ஆளென்னைத் தான். (89)

குறிப்புரை:—நலிவு-துன்பம். தால கர-பனைக்கையனே!

91. தானுங் கரியாம் தகப்பன் கரியுரியான்
காலுண்வாய் மாமன் கரியாண்டான் - மானும்பல்
காந்தனெனும் தம்பின் கரிவென்ருன் நங்கைநலூர்
வேந்தன் கரிஉறவன் மிக்கு. (90)

குறிப்புரை:—தானும் கரி-தான் யானை. கரிஉரி-ஆனைத் தோல். கான்உண்-நறுமணம் வீசும். மாமன்-திருமால். கரி ஆண்டான்-கஜேந்த்ரவரதன். மான்-வள்ளிமான். உம்பல்-தெய்வயானை. தம்பின்-முருகன். கரி–தாரகாஸுரனை; தாரகன் யானைமுகன். கரி உறவன்-யானையுடன் தொடர்பு பூண்டவன்.

92. மிக்காரும் ஒப்பாரும் வேருரும் இல்லாத
தக்காருள் எல்லாம் தலையாய - அக்காரம்
ஆமைகிடிக் கோடணிந்த அப்பனங்கை நல்லூர்வாழ்
மாமைவர ஸித்தி வளல். (91)

குறிப்புரை:—அக்கு ஆரம்-எலும்பு மாலை. கிடிக் கோடு - பன்றிக் கொம்பு. மாமை-அழகு. வளல்-வள்ளல்.

93. வளப்பலவன் தாங்கல் வளர்நங்கை நல்லூ
ருளப்பவழ மேனி ஒருவன் - அளப்பவழ
காகவுல கெல்லாம் அமுதுபடி கொண்டுபசி
போகவுயும் மெத்தப் பொலிந்து. (92)

குறிப்புரை:—பலவன்தாங்கல்- நங்கைநல்லூரை அடுத்த பகுதிக்கு வழங்கும்பெயர். நல்லூருள் அப் பவ்ழ மேனி எனப் பிரிக்க. அளப்ப-படிஅளக்க. அழகாக-அழகுபட. அமுதுபடி-உணவு. உ(ய்)யும்-வாழும்.

94. பொலிவார் புகர்முகனை நங்கைநலூர்ப் போந்து
வலிவார் வரஸித்தி மாவென் - ஞெலிவார்

கடலளவ தாயடியார் கூட்டத்தின் கண்ணே
லிடலளவில் இன்புதரு மே. (93)

*குறிப்புரை:—புகர்-புள்ளி. வலிவு-வலிமை. வார் கடல்-நீண்ட கடல். ஓல்இடல்-ஓலமிடல்.*

95. ஏகாட் சரத்துளுறை ஈசன் இபாநநனைச்
சாகாப் பிறவாத் தனிமுதலை - நீகாட்சி
காணலாம் நெஞ்சமே கண்டுநங்கை நல்லூரிற்
பேணலாம் ஓதிப் பெரிது. (94)

*குறிப்புரை:—ஏகாட்சரம்-ஒரெழுத்து; ப்ரணவம். இப ஆநநன்-யானைமுகன். பேணலாம்-விரும்பி வழிபடலாம்.*

96. பெரிதும் சிறிதும் பிறவும் உறவும்
அரிதும் அலாததுவும் ஆனன் - அரிதுயிலும்
பாலாழி போலருளைப் பாலிக்கும் நங்கைநலூர்க்
காலாழி பூண்ட களிறு. (95)

*குறிப்புரை:—அரி-திருமால். பால் ஆழி-பாற்கடல். கால் ஆழி-ஒருவகைக் காலணி.*

97. களிறென் நனவிற் கனவிற் களித்துப்
பிளிறுதல்கேட் டின்பமிகப் பெற்றேன்-வெளிறுபொடி
நெற்றிக் கணிந்து நிகழ்நங்கை நல்லூரிற்
பெற்றித் தளியிற் பிணிந்து. (96)

*குறிப்புரை:—பிளிறுதல்-யானையின் கத்தொலி. வெளிறு பொடி–வெண் திருநீறு. பெற்றி-(நல்ல)தன்மைமிக்க. தளியிற் பிணிந்து-கோயிலிற் கட்டுண்டிருந்து.*

98. பிணிபோம் பவம்போம் பெருந்துயரெல் லாம்போம்
குணிபோம் வினைமலம்போம் கோள்போம்—
மணிபோலும்
நங்கைநலூர் நால்வாய் வரஸித்தி நாயகனை
அங்கைகூப் பித்தொழுத அன்று. (97)

*குறிப்புரை:—பவம்-பாவம்; பிறப்பு. குணி-ஊமைத் தன்மை. கோள்-க்ரஹதோஷங்கள். மணிபோலும்...நால்*

வாய் எனக் கூட்டுக. நால்வாய்-யானை. அம் கை-அழகிய கைகள்.

99. அன்றும் அவனுக் கடிமைப்பட் டேயிருந்தேன்
இன்றுமவ் வாறே இருக்கின்றேன்—என்றுமே
ஆண்டாற் கடிமையுற ஆசையுற்றேன் நங்கைநலூர்க்
காண்டாற்குச் சித்திக் கரிக்கு. (98)

குறிப்புரை:—ஆண்டாற்கு - ஆண்டவனுக்கு. காண்டாற்கு-காணப்படுபவனுக்கு. சித்திக் கரி-ஸித்தி யானை.

100. கரிக்குலத்துக் கோவைக் கயமுகத்துத்தேவை
நரிக்குலத்துக் கொப்பான நாயேன்-வரிக்குலத்தைப்
பூனைபார்த் துச்சூடு போட்டாற்போல் நங்கைநலூ
ரானைபார்த் தேனடிய னுய். (99)

குறிப்புரை:—கயம்-யானை. நரிக்குலம்-நரியின் மரபு. வரிக்குலம்-புலிக் கூட்டம். ஆனை பார்த்தேன்-கணபதியைக் கண்டேன்.

101. அடியரொடுங் கூட்டி அடியேனை ஆண்டு
நெடியநங்கை நல்லூர் நிலவும்-பொடியணிந்த
மாண்பன்வர ஸித்தி மஹோதரன்தாள் வாழ்த்துவார்
காண்பர்வெகு நன்மங் கலம். (100)

குறிப்புரை:—பொடி-திருநீறு. மஹோதரன் – கணபதி. மங்கலம்-மங்களகரமான செயல்களை.

## நூற்பயன்

102. நந்தாத நங்கைநலூர் நண்ணுவர ஸித்திஎம்மான்
அந்தாதி வெண்பாநூ றுதரிப்போர்-சிந்தாத
பேறுபதி னாறும் பெறுவர்; பிறவாதே
தேறுமுத்தி சேர்வர் தெளிந்து.

குறிப்புரை:—நந்தாத-அழியாத. சிந்தாத – அழியாத. தேறும்-தேற்றமுறும்; தெளிவாகும்.

(வரஸித்தி விநாயகர் வெண்பா அந்தாதி குறிப்புரையுடன் முற்றும்)

நங்கைநல்லூர் ஸ்ரீ வரஸித்தி விநாயகர்

# இரட்டைமணி மாலை

(நேரிசை வெண்பா)

103. மாக்கொணங்கை நல்லூர் வரஸித்தி யானையின்மேல்
வாக்கின் இரட்டைமணி மாலைசொலப்-பூக்கும்
மலரடியைக் காட்டி மகிழ்ந்தருளை ஊட்டி
வலமருளும் எற்கதே மா.

*குறிப்புரை:-மா-மாமரம்; வண்டு; லக்ஷ்மிகரம்;பெருமை; சிறப்பு. மாவுமாம். வாக்கின்-வாக்கினால். வலம்-பலம். எற்கு-எனக்கு. அதே மா-அந்த வரஸித்தி யானையே.*

## நூல்

(நேரிசை வெண்பா)

104. பேராம் வரஸித்திப் பிள்ளையார் என்பதுவே
தாராம் எருக்கறுகுத் தாளிதும்பை-ஊராம்
திருநங்கை நல்லூர்த் திகழ்ஞானத் தொப்பை
பருநங்கள் பஞ்சபா ணிக்கு. (1)

*குறிப்புரை:—பேர்-பெயர். தார்-மாலை. அறுகுத் தாளி-தாளி அறுகம்புல். தொப்பை பரு-வயிறு பெருத்த. நங்கள்-நமது. பஞ்சபாணி-ஐங்கரன்; விநாயகர்.*

(கட்டளைக்கலித்துறை)

105. பஞ்சபா ணிப்பேர்ப் பகட்டு முகத்தெம்பா சாங்குசனே!
பஞ்சபா ணிக்கொரு மைத்துன னே!கழைப்
[பற்றுவிற்கைப்
பஞ்சபா ணிக்கு முதற்பா லகனே! படைத்தபிர
பஞ்சபா ணிக்குற் றருள்நங்கை நல்லூர்ப்
[பரம்பொருளே ! (2)

*குறிப்புரை:—1. பஞ்சபாணி-ஐந்து கையன். பகடு-யானை. 2. பஞ்சபாணி-ஐந்து(மலர்) அம்பினன்; மன்மதன். கழை-கரும்பு. 3. பஞ்சபாணி-பஞ்ச புஷ்பபாண மேந்தும் பார்வதி. 4. பிரபஞ்சம் படைத்த பாணி-உலகை உண்டாக்கிய கைய ஞன பிரமன்.*

நேரிசை வெண்பா

106. பொருளல்லா என்னைப் பொருட்படுத்தி உள்ளத்
திருளெல்லாம் ஓட்டி எனக்கு—மருளில்லா
மாவாழ்வு தந்த வரஸித்தி மாமுகியைப்
பூவாழ்வார் போற்றுவர்தூஉய்ப் போது. (3)

*குறிப்புரை:— பொருள் அல்லா-ஒன்றுக்கும் பற்ருத. மருள்-மயக்கம். மா-சிறந்த. முகி-யானைக்கன்று. பூ-பூமி; தாமரைப் பூ எனலுமாம். தூஉய்-தூவி. போது-மலர். போது தூவிப் போற்றுவர் எனக் கூட்டுக.*

*கட்டளைக் கலித்துறை*

107. [1]போதும் பிறவிப் புயல்மயல் நெஞ்சே! புகழ்ந்தினிஎப்
[2]போதும் பிறவாப் பொருள்நங்கை நல்லூர்ப் புரவலனைப்
[3]போதும் புனலும் புகையுங்கொ டேத்திமெய்ப்
பூஜனைசெய்!
[4]போதும் பிறப்பும் இறப்புமின் றிப்போம்
புரிந்துகொள்ளே. (4)

*குறிப்புரை:—1. போதும்–இனி வேண்டாம். புயல்மயல்-புயற் காற்றுப் போன்ற மயக்கம். 2. எப்போதும்-எப்பொழு தும். புரவலன்-அரசன். 3. போது–மலர். புனல்-நீர். புகை-தூபம். 4. போதும்-வரும்; தொடர்ந்து உண்டாக்கிக் கொண்டேயிருக்கும். போம்-போகும்.*

நேரிசை வெண்பா

108. [1]கொள்முதலா ஒன்பதெனக் கூறுகின்ற கூலமுமுட்
[2]கொள்முதலே!எங்கள்குடிவழிக்கோர்-[3]கொள்முதலே!
வீறுவர ஸித்தி விநாயகனே! நின்தொழும்பாம்
பேறுவர என்றுபெறு வேன்?

குறிப்புரை:—1. கொள்-கொள்ளு. முதலா-முதலானதாக. ஒன்பது கூலம்-நவதாந்யம். 2. உட்கொள்-உண்ணும். முதலே–(முழு)முதற்பொருளே! 3. கொள்முதல்—லாபம்; (எங்கள் குலத்தின்) மூல தனமே! வீறு-பெருமை மிக்க. தொழும்பு-தொண்டு. பேறு-(திருப்பணிச்) செல்வம்.

கட்டளைக் கலித்துறை

109. பெறுவார் பெறுக! எனை நங்கை நல்லூர்ப் பெருந்தலத்தே
இறுவா யுறநான் இறந்தொழிந் தேஇனி மேற்பிறந்தால்
உறுவார் உறுக! தவங்களெல் லாமவ் வுயர்பதிக்கண்
மறுவார் உரன்மரு மான்வர ஸித்தி மகோதரர்க்கே. (6)

குறிப்புரை:—பெறுவார்–(என்னை இனிச் சேயாகப்)பெறப் போகிறவர்கள். இறுவாய்-மரணம்; முடிவு காலம். உறுவார்-தவம் செய்பவர். மறு-மச்சம்; 'ஸ்ரீவத்ஸம்' என்னும் அடையாளம். உரன்-திருமார்பினன்; திருமால். மருமான்-வழித்தோன்றல்; மாப்பிள்ளையுமாம். மஹாஉதரன்-பெருவயிறன்.

நேரிசை வெண்பா

110. மகோதரனே! ஸித்தி வரோதயனே! செவ்வேள்
ஸகோதரனே! தீன தயாளா!—ம்ருகோதரம்வாய்
வள்ளிக்கும் மைத்துன![1]மான் [2]மான்மகளென்
தெள்ளிக்கும் மைத்துன!ஆள் செய். [வான்மகளாம்(7)

குறிப்புரை:—ஸித்திவர-வரஸித்தி. தீனதயாளன்–ஏழைக்கிரங்கும் பெருமாள். ம்ருக உதரம் வாய்-(லக்ஷ்மியாம்) மானின் வயிற்றில் (வாய்த்த) வந்து தோன்றிய. 1. மால்-திருமால். 2. மால்-இந்திரன். என்-எனப்படும். வான்மகள்-தேவலோகப் பெண். தெள்ளி-யானை; தெய்வயானை.

கட்டளைக் கலித்துறை

111. செய்தவழ் நங்கைநல் லூர்வர ஸித்திச் சிவமுநியே!
நெய்தவழ் அங்குசம் பாசம் கொளுங்கை நிராமயனே!
பொய்தவழ் நெஞ்சினர் சித்தம் புகாது புனைந்துரையா
மெய்தவழ்நெஞ்சினர்உள்ளம்புகுமெம் விநாயகனே! (8)

குறிப்புரை:—செய்-வயல். முநி-ஆனைக்கன்று. நெய்தவழ் அங்குசம்-யானைத்தோட்டியில் கூர்மை பாழ்படாதிருக்க நெய் பூசப்பெற்றிருக்குமென்க. நிராமயன்–நோயற்றவன்; கடவுள். புனைந்துரையா–பொய் சொல்லாத. மெய்-உண்மை. பொய் ...விநாயகனே: "மெய்வந்த நெஞ்சினல்லால் ஒருகாலும் விரகர் தங்கள் பொய்வந்த நெஞ்சிற் புக அறியா மடப்பூங் குயிலே"-அபிராமி அந்தாதி.

நேரிசை வெண்பா

112. விநாயகனே மெய்ப்பொருளாம் வீறுவர ஸித்தி
விநாயகனே போத விளக்காம்—விநாயகனே
எல்லாப் பொருட்கும் இறைவனும் இத்தனைக்கும்
அல்லாப் பொருளும் அவன். (9)

குறிப்புரை:—போதவிளக்கு-ஞானதீபம். இத்தனைக்கும்-எல்லாப் பொருள்கட்கும். அல்லாப் பொருள்-தானல்லாப் பரம்பொருள். அவன்-அவ் விநாயகனேயாம்.

கட்டளைக் கலித்துறை

113. அவனியிற் கண்கண்ட அற்புதத் தெய்வம்
அடியவர்க்காப்
பவனியிற் சென்று திருக்காட்சி நல்கும் பரம்பொருளிப்
புவனியிற் சென்னைப் புறநங்கை நல்லூர்ப் புரத்தமர்ந்து
துவனியிற் றேல்போற் பிளிறுங் களிற்றைத்
தொழுதுய்ம்மினே. (10)

குறிப்புரை:—அவனி-பூமி. பவனி-திருவுலா. புவனி-உலகம். சென்னைப் புறம்-சென்னைப் பக்கம். புரம்-ஊர். துவனி-(கத்தும்) ஒலி. தோல்-யானை. பிளிறுதல்-யானை செய்யும் ஒலி. களிறு-ஆண் யானை. உய்ம்மின்-வாழ்ந்து போங்கள்.

நேரிசை வெண்பா

114. மின்னொக்கும் மேனி விடையொக்கும் வீறுநடை
தன்னொக்கும் தானே தராதலத்தின்—மன்னொக்கும்
ஆதிவர ஸித்தி அடற்களிறும் நங்கைநல்லூர்ச்
சோதிமுரு கேசன் துணைக்கு. (11)

*குறிப்புரை:—மின்—மின்னல்; ஒளி. விடை-இடபம். தன் ஒக்கும் தானே-தனக்குத் தானே ஒப்பாவான். தராதலம்-உலகம். மன்-அரசன். முருகேசன் துணை-முருகவேள் சோதரன்.*

*கட்டளைக் கலித்துறை*

115. துணையா எனக்கு வழிகாட்ட வல்ல தொளைக்கையனைப்
புணையாய் இணைத்தாள் பொருந்தக் கொடுத்துப்
புரப்பவனை
இணையாரு மில்லா இபமா முகனை இவன்தரிசித்
தணையா வியந்தது நங்கைநல்லூராம் அருந்தலத்தே.(12)

*குறிப்புரை:—தொளைக் கை-தும்பிக்கை. புணையா-தெப்பமாக. இணை-இரண்டு. புரப்பவன்-காப்பாற்றுபவன். இணை-ஸமாநம். இபம்-யானை. இவன்-நான். அணையா-அணைத்துக் கொண்டு.*

நேரிசை வெண்பா

116. தலங்களெலாம் சென்று தரிசிக்க வேண்டும்
நலங்களெலாம் கொள்வீர்! நமது-குலங்களெலாம்
உய்யவர ஸித்தி உவாஉளதே! நங்கைநல்லூர்
பையநிதஞ் சேர்மின் பணிந்து. (13)

*குறிப்புரை:—உவா-யானை. உளதே-உள்ளதே. பைய-மெல்ல.*

*கட்டளைக் கலித்துறை*

117. பணிந்தேன் திருமுடி மண்மிசைவீழ்ந்து படிய,நெற்றிக்
கணிந்தேன் அவன்றன் அடிப்பொடி,மெய்வினை
ஆறெதிர்க்கத்
துணிந்தேன் இனியெற் கெனகுறை யுண்டிவண்
துக்கமெல்லாம்
தணிந்தேன் வரஸித்தி மாநங்கை நல்லூர்த்
தலத்திலின்றே. (14)

*குறிப்புரை:—அடிப்பொடி-திருவடித் துகள்; பாத தூளி. மொய்-மொய்த்துவரும். வினைஆறு-நல்வினை, தீவினையெனும் காட்டாறு. எதிர்க்க-எதிர்நீச்சலிட. எற்கு-எனக்கு. என-*

என்ன? தணிந்தேன்–ஒயப்பெற்றேன். மா-யானை. இன்றே-இன்றைக்கே.

நேரிசை வெண்பா

118. இன்றாகி நாளையாய் நேற்றாகி எல்லாமாய்
நின்றான் வரஸித்தி நீள்யானைக்—கன்றானான்
கானவள்ளி வெற்பிற் கணேசகிரி யாஞ்சிலையாய்
ஆனதெள்ளி ஆனனத் தான். (15)

குறிப்புரை:—இன்றாகி... நின்றான்-'நெருநலையாய் இன்றாகி நாளையாகி நிமிர்புன் சடையடிகள் நின்றவாறே''-அப்பர். கான-காடு சூழ்ந்த. கணேசகிரி-வள்ளிமலையில் விநாயகர் யானையாய் வந்து வள்ளியை வெருட்டியதைக் குறிக்கும் சிறு குன்று. சிலை-பாறை. தெள்ளி-யானை. ஆனனம்-முகம்.

கட்டளைக் கலித்துறை

119. ஆனேறி செல்வா! அறுமா முகனுக் கருந்துணைவா !
தேனேறு சோலை திகழ்நங்கை நல்லூர்ச் சிவைகுமரா!
மானேறு கண்ணி வலைபைகொண் கா!வள்ளி மைத்துனனே!
ஊனேறு காயமே கோயிலாக் கொண்டுள் ளேறும்பொருளே. (16)

குறிப்புரை:—ஆனேறி-இடப வாகனச் சிவன். சிவை-பார்வதி. மான் ஏறு-மான் போன்ற. வலைபை-வல்லபை. கொண்கன்-கணவன். ஊன்-மாமிசம். காயம்-உடல். பொருள்-கடவுள்.

நேரிசை வெண்பா

120. பொருளே! பரசிவற்குப் போகமே! பொன்னே!
பொருளே! மணியே! புகழ்வேற்—கருளே
வழங்குநங்கை நல்லூர் வரஸித்தி யானாய்!
முழங்குகுடி லைப்பொருள்சொல் முந்து. (17)

குறிப்புரை:—பரசிவற்குப் பொருளே-சிவனுக்குப் பிள்ளையே. பொருள்-மகன். "பொரும்பலம துடையசுரன் தாருகனைப் பொருத பொருளினைமுன் படைத்துகந்த புநிதன்''-

சுந்தரர். போகம்-அநுபவம். பொருள்-செல்வம். போகம்-பொன், பொருள், மணி-"பொன்னானாய் மணியானாய் போக மானாய் பூமிமேல் புகழ்தக்க பொருளே"-அப்பர். புகழ்வேற்கு-புகழ்ந்துபாடும் எனக்கு. யானாய்-யானையே! முழங்கு குடிலை-சப்திக்கின்ற ப்ரணவம். முந்து-முன்னதாக.

கட்டளைக் கலித்துறை

121. முந்திக் கனியைப் பெறுவான் கயிலை முகட்டிருந்த
அந்திப் படிவத் தரனை உமையைஅங் கன்றுவலம்
வந்திப்பொழுதேபழந்தருகென் றுமுன் வாங்கியுண்ணும்
தொந்திக் கணபதி நங்கைநல் லூரிற் சுமுகனன்றே. (18)

குறிப்புரை:—முந்தி-(முருகவேட்கும்)முன். பெறுவான், பெறும் பொருட்டு. முகடு-மலையுச்சி. அந்திப் படிவம்-மாலைச் செவ்வான் நிறம். அங்கு-கயிலையில். அன்று-முன்னொருகால். இப்பொழுதே பழம் தருக என்று-'உலகை வலம் வந்தாயிற்று இப்போதே கனியைத் தா' எனக் கேட்டு. முன்-முருகனுக்கு முன்னதாக. தொந்தி-தொப்பை; வயிறு. சுமுகன்-விநாயகர்.

நேரிசை வெண்பா

122. சுமுகன் கஜகன்னன் தும்பி கபிலன்
ப்ரமுகன் ப்ரஸந்ந வதநன்—கமுகன்ன
மென்கழுத்துச் சித்திபுத்தி வேந்தன்வரலித்திஎம்மான்
என்கழுத்தில் மாலையிடல் என்று? (19)

குறிப்புரை:—கஜ கன்னன் - ஆனை போன்ற காதினன். தும்பி–யானை. கபிலன்-கருமையும் செம்மையும் கலந்த கபில வர்ண முடையவன். ப்ரமுகன்-பெரியோன். ப்ரஸந்நம்-யானை. ப்ரஸந்ந வதநன்-விரிந்து பரந்த ப்ரகாசமான முகத்தினன் எனலுமாம். "ப்ரஸந்ந வதநம் த்யாயேத் ஸர்வ விக்நோப சாந்தயே"-"சுக்லாம்பரதரம்"ச்லோகம். கமுகு-பாக்குமரம். அன்ன - போன்ற. வேந்தன்-தலைவன். மாலை - மணமாலை. என்று-என்றைக்கோ? இஃது அகப்பொருள்.

*கட்டளைக் கலித்துறை*

**123.** என்றுஞ் ஜெபிப்பார் இடைஞ்சலெல் லாம்செற்
றினிதருள்பெற்
றென்றுங் குறைவின்றி ஓங்குவ ராலெங்கள்
ஒற்றைக்கொம்பன்
நன்றுண் பெருந்தொப்பை யானங்கை நல்லூர்
நடுவினிற்றம்
பின்றுன்னு மாம னொடும்வாழ் வரஸித்திப்
பேரனையே. (20)

*குறிப்புரை:—இடைஞ்சல் - துன்பம். செற்று-ஒழித்து. ஓங்குவர்-மேம்பாடடைவர். ஆல்-அசை. ஒற்றைக் கொம்பன்-ஏகதந்தன். நன்று-நன்றாக.' உண்-வயிற்றுக்குச்சாப்பிடும். தம்பின்-தம்பியாம் முருகவேள். துன்னு-நெருங்கிப் பொருந்திய (உறவினனும்). மாமன்-திருமால்; இராமன். வரஸித்தி விநாயகர் தற்போது தம்பி முருகனொடும், மாமன் இராமனொடும் ஆலயத்தில் வீற்றிருத்தலை இப் பாடல் குறிப்பிடுகின்றது, பேரன்-பேரினையுடையவன். பேரனையே என்றும் ஜெபிப்பார் எனக் கூட்டுக.*

*நூற்பயன் (நேரிசை வெண்பா)*

**124.** நங்கைநல்லூர் நண்ணும் வரஸித்தி நால்வாய்மேல்
மங்கா இரட்டைமணி மாலைசொன்னேன்-இங்கார்வம்
கொண்டிதனை ஓதுகொள்கைகோணார் குறைவடையார்
விண்டிதனைக் கொள்வர்முத்தி வீடு.

*குறிப்புரை;—நால்வாய்-யானை. மங்கா-ஒளியிற், புகழில் மங்காத. ஆர்வம்-அன்பு. கோணார்—தவறாதார். இதனை விண்டு-இதை ஓதி.*

*(வரஸித்தி விநாயகர் வெண்பா அந்தாதி
குறிப்புரையுடன் முற்றும்)*

# நங்கைநல்லூர்ச் சரவண குமாரன்
# அருட்புகழ்

பூர்வகல்யாணி]  125. அன்பு கூரப் பெற  [ஆதி

தத்தன தானன தந்தன தானன
தத்தன தானன தந்தன தானன
தத்தன தானன தந்தன தானன  தந்ததான

விச்சையி லாதவன் வெம்புபொ லாதவன்
இச்சையொ டீசர்தொ ழும்புசெ யாதவன்
விப்பிரர் தாள்வந ஜம்பணி யாதவன்
விந்தையான-
விட்டிலை நேரென இந்த்ரிய தாபவி
ளக்கிடை வீழ்வினை யன்பவ வாரிதி
விட்டிலன் வீணன் இடம்பன் அஸூயையில்
வெந்துபோவேன்;

பிச்சையெ னுவரு கின்ற பலோர்கையில்
இத்தனை யேனுமி டுங்குண மேயிலி
பித்துறு பேயன் அகந்தைகொள் பேதைபி
றந்துவாழ்விற்-
பிற்பட மேவி இறந்திடும் ஓர்செயல்
கைக்கொளி ஆசை எனுங்கட லாடுமொர்
பெற்றிய தேதொழில் என்றுடை யேன்எனை
அன்புகூர்வாய்.

பச்சைமென் மேனியள் பண்டரி நாதர்ப
டைத்த ஸூதாமணி பங்கஜ லோசநி
பச்சிலை பீலி புனைந்த வியாதர்ப  சும்பொனுவாள்-
பக்குவ மான பெருந்தந பாரம
லைத்த மெனூலிடை வஞ்சி மநோஹர !
பக்த கணேசநன் மண்டலி யார்புரி தொண்டின்மோஹா;

செச்சை குராதள வந்துள வார்மது
மத்தம் விளாவிலு வஞ்ஜடை சூடுவி
சிட்ட புராதநர் தென்தமிழ் நாடுடை சம்புசேயே-

சிற்பர ஞாந ஸுகந்தரும் ஊர்சென்னை
மிக்கரு கூர்திரு நங்கை நலூர்வர
ஸித்தி விநாயகர் தம்பினெ னுவரு தம்பிரானே. (1)

விச்சை - வித்தை. வெம்பு-மனம் புழுங்கும். தொழும்பு-தொண்டு. விப்பிரர்-அந்தணர். விட்டில்-விளக்குப்பூச்சி; ஈசல். இந்த்ரிய தாபம்-ஐம்பொறி நுகர்ச்சிக்காகத் தவித்தல். பவ வாரிதி-பிறவிக் கடல். இடம்பன்-டம்பம் மிக்கவன். அஸூயை-பொறாமை. பலோர்-பலபேர். பித்து-பைத்தியம். அகந்தை-ஆணவம். பிற்பட-பின்னுக்கே போக. கைக்கொளி-கைக்கொண்டவன். கடல் ஆடும்-கடலில் நீராடும் அல்லது ஊடாடும். பெற்றி-தன்மை. மெல்மேனி-மெல்லிய திருவுடம்பு. பண்டரி நாதர்-விஷ்ணு. ஸுதாமணி-பெண்மணி; திருமகள். பச்சிலைபீலி புனைந்த-'பீலியும் இலையும் உடுத்திட்டு'-திருப்புகழ். பச்சிலை-பச்சை இலைதழைகள். பீலி-மயில்தோகை. வியாதர்-வேடர் பசும்பொன்-பைம்பொன் போன்றவள். தனபாரம்-முலைச் சுமை. அலைத்த-வருத்திய. இடைவஞ்சி-வஞ்சிக் கொடிபோன்ற இடுப்பினள்; வள்ளியம்மை. மநோஹர-மனத்துக்குப் பிடித்த கணவனே! பக்த கணேச நல் மண்டலியார்-நல்ல பக்தர்களால் ஏற்படுத்தப்பட்ட 'கணேச மண்டலி' என்ற குழுவைச் சேர்ந்தவர்கள்; இது நங்கைநல்லூர்க் 'கணேஷ மண்டலி'யாரையே ப்ரத்யேகமாகக் குறிக்கும். மோஹா-விருப்பனே! செச்சை-வெட்சி. குரா-குரவு. தளவம்-மல்லிகை. துளவு-துளசி. ஆர்-ஆத்தி. மதுமத்தம்-தேனொழுகும் ஊமத்தை; அல்லது மயக்கத்தை யுண்டுபண்ணும் ஊமத்தம் பூ. விளா-கருவிளா. விலுவம்-வில்வம்; கூவிளம். விசிட்ட புராதநர்-விசேஷமுடையவர்; பழையவர். தென்தமிழ் நாடுடை சம்பு-"தென்னாடுடைய சிவனே போற்றி" திருவாசகம். சென்னை என்பதன் இடைக்குறை சென்னை. மிக்கு-மிகவும். அருகு ஊர்-அருகாமையில் உள்ள திருவூர். தம்பின்-தம்பி.

ஸிந்துபைரவி] 126. கண்ணுற் கடாக்ஷிக்க [ஆதி

தான தந்தன தாஞன தானன
தான தந்தன தாஞன தானன
தான தந்தன தாஞன தானன தந்ததான

நீல கண்டர்ஸு போதா! நமோநம
மூல குண்டலி பேதா! நமோநம
நீல மஞ்ஜரி நாதா! நமோநம அண்டவாஞேர்-
நேடு குஞ்ஜரி மோஹா! நமோநம
ஆடு குண்டலி வாஹா! நமோநம
நீல கண்ட மருகா! நமோநம நெஞ்சுள்மேவும்;

கால கண்டி குமாரா! நமோநம
மால யன்பணி வீரா! நமோநம
காமி யந்தரு பேரா! நமோநம கங்கையாறு-
காண வந்ததொர் பாலா! நமோநம
பூண ணிந்த வைவேலா! நமோநம
காவி இந்திர நீலா! நமோநம கண்கள்பாராய்;

பால சந்திரர் ஆகீசர் ஸோதர!
வேலே அம்பிடை சூர்மாவில் வேலெறி
பாணி தண்ட விசாகா! பதாயுத! பந்தஞகிப்-
பார்தி ருந்தவொர் தேவாரம் ஓதிய
கோணி யந்தண! கூதாள மாலேய!
பால ருந்துசெ வாயால் எலாமுய இன்சொல்பேசீ;

ஞாலம் உண்ட பிராஞர் கிரீடியை
ஆளும் நம்பி இராமாவ தாரர்வி
நாய கன்ஸுர லோகாதி நாயகன் நன்குவாழ-
நாடி அன் றருள் தாமோத ராதிபர்
கேடில் விண்டிரு டிகேசர் மால்கொள
நாளும் நங்கை நலூர்மேவு தேவர்கள் தம்பிரானே. (2)

நீலகண்டர் - சிவபிரான். மூலகுண்டலி - மூலாதாரத்திலுள்ள குண்டலிநி. பேதா-பேதிக்கிறவனே; தட்டிக் கிளப்பிவிடுகிறவனே! நீல மஞ்ஜரி-நீல நிறமுடைய, பூங்கொத்துப் போல்வாளாம் வள்ளியம்மை. நேடு-விரும்பும். குஞ்ஜரி-தெய்வயானையம்மை. ஆடு—செம்மறியாட்டுக்கடா. குண்டலி-மயில். ஆடு குண்டலி-ஆடுமயில் எனலுமாம். வாஹரா-வாஹனமாக உடையவனே! நீலகண்ட மருகா-நீலநிறக் கழுத்தையுடைய மயிலைக் கொடியாக உடையவனே! காலகண்டி-விடத்தைத் தரித்த கழுத்தினள். காமியம்-ஆசைகள். பேரா-இஷ்டகாமியங்களைப் பூர்த்தி பண்ணி வைப்பதிற் பேர் போனவனே! பூண்-ஆபரணங்கள். வை-கூர்மை. காவி இந்திர நீலா-'காவி' எனப் பேருடைய இந்த்ரநீல மலரைத் தரித்த செங்கல்வராய ஸ்வாமியே! பாலசந்திரர்-பிறைபோல் வளைந்த அல்லது பிறையணிந்த நெற்றியர். ஆகீசர்-பெருச்சாளி வாஹனரானகணபதி. வேலை அம்பு—கடல்நீர். சூர்மா-சூரனாகிய மாமரம். பாணி தண்ட-தண்ட பாணீ! பதாயுத-காலையே ஆயுதமாகக் கொண்ட கோழிக்கொடியனே? பந்தன்-ஞானசம்பந்தர். பார்-உலகு. தேவாரம்-' திருநெறியதமிழ் '. கோணி-கௌணி; கௌண்டின்ய கோத்திரத்தவன்' கௌதமர், கோதமராதல் போலும், கௌசிகர் கோசிகர் ஆதல் போலும்'கௌணி'என்ற சொல் 'கோணி' என வந்ததென்க. கூதாளம்-முருகவேளுக்குப் ப்ரியமான ஒரு மலர். 'கூதாள கிராத குலிக் கிறைவா'-கந்தரநுபூதி. பால்-உமை திருமுலைப்பால். செ(வ்)வாய்-சிவந்த திருவாய். எலாம்-எல்லோரும். உய—உய்ய; வாழ. பேசீ-பேசினவனே! ஞாலம் உண்ட பிரானார்-உலகை வாயில் உண்டு காட்டிய கண்ணபிரான். கிரீடி-அர்ச்சுநன். நம்பி-க்ருஷ்ணன். விநாயகன் - தேவேந்த்ரன். ஸுரலோகாதி நாயகன்-தேவலோகம் ஆதியவற்றுக்குத் தலைவனும் அவனே. அருள்-(இந்திரனுக்குப் பன்முறையும் உதவி புரிந்து) அருளிய. தாமோதர-கயிற்றிற் பொருந்து திருவயிற்றினன். விண்டு-விஷ்ணு. இருடீகேசர்-ரிஷீகேசர். மால்-ஆசை; மருமகன் என்ற பரிவு. நாளும்-என்றென்றும்.

காம்போதி] 127. உபதேசப் பொருள் கூற [ஆதி

தானந் தாத்தன தந்தன தானன
தானந் தாத்தன தந்தன தானன
தானந் தாத்தன தந்தன தானன தனதான

கூடங் காட்டிமுன் அன்பு நிவேதந
தீபங் காட்டி நறும்புகை மீகமழ்
தூபங் காட்டி அரும்புறு தூமலர் பலதூவித்-
தூலஞ் சூக்குமம் என்கிற பாவனை
யாலிந்த் ரார்ச்சனை தொண்டென வேசெய்து
தோழந் தோத்திரம் விண்டுயர் பூசனை புரிவோர்கள்;

பாடம் பாட்டில் மகிழ்ந்த பராபரர்
ஆலங் காட்டில் நடஞ்செயும் ஈசுரர்
பாதந் தூக்கி இடம்பொது வூடருள் நடமாடி-
பாலங் காட்டி அநங்கனை மாளவை
வேலங் காட்டில் விளங்கொளி யானவர்
பாவங் கேட்க மொழிந்ததென் நீள்செவி பகர்வாயோ;

கோடம் பாக்கமெ னும்பழ னுபுரி
கேளம் பாக்கம ணைந்தரு காயருள்
கூடும் போர்ப்பதி யென்சம ராபுரி குடிமேவும்-
கோவென் றூர்த்தல்செய் கின்றபல் நேயரை
ஆவென் றுட்கொளும் அன்புறு வேலவ!
கோலங் காட்டி அணைந்திடஏகியொர் குறமோய்பால்;

வேடன் போற்கணி என்றொரு வேசிய
ரூபன் போற்கிழ வன்பொர வேடுவர்
மேவுங் காட்டில் நடந்ததி லீலைகள் புரிவோனே-
மீனம் பாக்கம் இருந்துசெல் காயவி
மானம் போக்கில் வருந்தொனி நாடொறு
மேலுங் கேட்கிற நங்கை நலூர்அமர் பெருமாளே. (3)

சூடம்-கற்பூரம். நிவேதநம்-உணவு படைத்தல். மீ-மேல். தூபம்-ஊதுவத்தி, ஸாம்பிராணிப் புகை. தூலம்-பருமை. சூக்குமம்-நுண்மை. இந்த்ர அர்ச்சனை-மேலான மலர் வழிபாடு அல்லது நீலோற்பல மலரால் அர்ச்சித்தல். இந்த்ரம்-நீலோற்பலம்; கடம்பு. தோழம்-பேரெண்; மிகப்பல. விண்டு-சொல்லி. சூடம்...புரிவோர்கள்-பாட்டின் வசதிக்கேற்ப வழிபாட்டு முறை தலைகீழாக மாற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. முறையே வழிபாடுசெய்தலே முறை. பாடு+அம் பாட்டில்—பாடுகின்ற அழகிய பாடல்களில். ஆலங்காடு-காரைக்காலம்மையார் முத்தியடைந்த திருவாலங்காடு. பாதம் தூக்கி இடம்-இடம் பாதம் தூக்கி-இடக்காலைத் தூக்கி, அல்லது(இடம்) பாதத்தைத் தூக்கி; இடம்-இடமாக. பொதுவூடு-(பொன்) மன்றில். பாலம்-நெற்றி(க்கண்). அநங்கன்-மன்மதன். மாள-அழிய. வை-வைத்த. வேலங்காடு-மூர்க்க நாயனார் திருவவதார ஸ்தலமான திருவேற்காடு. பாவம்-பிரணவத்தின் அர்த்தப் பாங்கை. மொழிந்தது-(சிவபிரான் காதில்) நீ சொன்ன வேத ரகஸ்யத்தை. கோடம்பாக்கம்-வடபழநி. கேளம்பாக்கம் - திருப்போரூருக் கருகிலுள்ள ஓரூர். போர்ப்பதி என்(என்கின்ற) சமராபுரி-திருப்போரூர். கோ-தலைவனே! ஆர்த்தல்-ஆர்ப்பரித்து ஆரவாரஞ் செய்தல். பல்-பல. ஆ-ஆச்சரியச்சொல். கோலம்-பலஉருவம். குறமோய்-குறத் தாய்; வள்ளியம்மை. மோய்-தாயார். கணி-வேங்கைமரம். வேசிய ரூபன்-வைசிய வடிவன்; வளைச்செட்டியானவன். பொர-போல. அதி லீலைகள்-பலப்பல மேம்பட்ட திருவிளையாடல்கள். மீனம்பாக்கம்-நங்கைநல்லூர்க் கருகிலுள்ளது; சென்னை ஆகாயவிமாந நிலையம் இதுவே. காய விமாநம் - ஆகாய விமாநம்; விண்ணூர்தி (முதற்குறை). தொனி-ஒலி. இன்றைக்கும் நங்கைநல்லூரில் மீனம்பாக்கம் ஆகாயவிமாந நிலையத்திலிருந்து விமாநங்கள் புறப்பட்டு வெளியூர் செல்லும்போதும், வந்துசேரும்போதும் உண்டாகும் ஒலி காதைத் தொளைத்தல் கண்கூடே.

ஸிம்மேந்த்ரமத்யமம்] 128. திருவடி பெற [ஆதி

தந்தன தானன தனனந் தாந்தன
தந்தன தானன தனனந் தாந்தன
தந்தன தானன தனனந் தாந்தன தனதான

செம்பியர் சேரலர் சுறவம் தாங்கிய
பஞ்சவர் மாமல புரம்வந் தோங்கிய
சிங்க மனுரிவர் பலருஞ் சேர்ந்துசெய் துளகோயில்-
தென்தமிழ் நாடுசெய் தவமும் தேங்குறு
மன்பதை பேணுபு ணியமும் போந்தருள்
சிந்திய வாக உளவைஅங் காங்குறை திருவாளா;

தும்பிய ஞன்முக துரகம் தாங்கியொர்
சிங்கமு காஸுரன் எனஅங் காந்துயிர்
துன்ப்ரமம் ஆணவ கருமம் தாம்பட விடுவேலா-
தும்புரு நாரதர் வருணன் தூங்கெரி
சந்திர ஸூரியர் சமிரன் தாந்தொழு
ஸுந்தர மேனிய! சுவணம் போன்றொளிர் கழல்சேராய்;

தம்பியர் ஆயிர சதமுஞ் சேர்ந்துள
ஒன்பது பேர்களும் ஒருவன் தான்தனி
சண்டைசெய் நீயுமெய் ஸமமென் றோர்ந்திட
அஸுராரைத்-
தந்தன தானன தனனந் தாந்தன
என்றுறு பேரிகை முழவம் சூழ்ந்தொலி
தந்திட வேஎதிர் சமர்கண் டாங்கழி திறல்வீரா;

நம்பியி ராஜனின் மனைஅந்த் ராங்கனை
நங்கைநல் மோஹினி மகளிந்த் ராங்கனை
நம்பிய காதல! *பலவன் தாங்கலின் அருகான-
நங்கை நலூர்வரம் அருள்கொம் பேந்திய
ஐங்கர நாயக ஸுமுகன் பாம்பணி
நங்கள் விநாயக ஞெடுபின் தோன்றிய பெருமாளே.(4)

---

* *பலவன்-பல்லவன். 'பல்லவன் தாங்கல்' என்பது நாளடைவில் 'பழவந்தாங்கல்' என்றும், 'பவழந்தாங்கல்' என்றும் மருவி வழங்குகின்றது போலும். இஃது ஆராய்தற் குரியது.*

செம்பியர்-சோழர். சேரலர்-சேரர். சுறவம்-சுறுமீன்; சுண்டு மீனக் கொடியைக் குறித்து நின்றது. பஞ்சவர்-பாண்டியர். மாமலபுரம்–மாமல்லபுரம்-மஹாபலிபுரம். சிங்கம் அ(ன்)னர்-சிங்கம் போன்ற வீரமுடைய பல்லவர்கள். செய்துள-செய்துள்ள. தேங்குறு-செறிந்துள்ள. மன்பதை-உயிர்கள். பேணு-விரும்பிச் செய்த. புணியம்-புண்ணியம். அருள் சிந்திய ஆக–திருவருளைப் பொழிகின்றனவாக. உளவை-உள்ளவை. தும்பிஅ(ன்)னன்-ஆனைபோன்ற முகமுடைய தாரகாசுரன். முக துரகம் தாங்கி-துரக முகம் தாங்கி-குதிரை முகத்தைக் கொண்டுள்ள சூரபத்மன். ஓர்-ஒரு. என-போல. அங்காந்து-கொட்டாவி விட்டுச் சோர்ந்து. உயிர் துன்-ஜீவனை நெருங்கி வருத்துகின்ற. ப்ரமம்-மயக்கம்; மாயை (தாரகாசுரன்). ஆணவம்-அகங்காரம் (சூரன்). கருமம்-கன்மம் (சிங்கமுகாசுரன்). தூங்கு எரி-ஓங்கி எரியும் நெருப்பு; அக்கினி தேவன். சமிரன்-காற்று; வாயுபகவான். சுவணம்-ஸுவர்ணம்; பொன். ஆயிர சதம்-1000 × 100 = 1,00,000 ஒரு லட்சம். ஒன்பது பேர்கள் - நவவீரர்கள். ஒருவன் - ஒரே ஆள்; ஒப்பற்றவன் எனினுமாம். தனி-தனித்திருந்து. மெய்-உண்மையாக. ஸமம்-ஒப்பு. முருகவேளின் தம்பியர் இலக்கத்தொன்பதின்மரும் முருகவேள் ஒருவரின் ஆற்றலுக்கு ஈடாகார் என்பது கருத்து. முழவம்-முழவு; குடமுழா முதலியவை. சமர்-போர். நம்பி இராசன்-நம்பிராஜன்: வேட்டுவர் அரசன். அந்த்ர அங்கனை-வேடப்பெண். அந்த்ரர்-வேடர். நல் நங்கை மோஹினி-நல்ல நங்கை மோஹினி; நம்பிராஜன் மனைவி மகள்-வள்ளி. இந்த்ர அங்கனை-இந்திரன் பெண்: தெய்வயானை. நம்பிய-விரும்பிய. பலவன்தாங்கல்-நங்கைநல்லூரை அடுத்துள்ள கிராமப் பகுதியாம் பழவந்தாங்கல். வரமருள் ஐங்கர நாயக ஸுமுகன்-வரஸித்திவிநாயகன்; நங்கை நல்லூர் விநாயகர் திருநாமம். ஸுமுகன்-கணபதியின் ஷோடச நாமங்களுள் முதல் திருநாமம். பாம்பு அணி-பாம்பை இடுப்பில் அரைக்கச்சாக அணிந்துள்ள. நங்கள்-நமது. பின்-தம்பியாக.

வராளி] 129. நன்றி பாராட்ட [மிச்ரசாபு

தந்த தய்யாத் தனதான

குன்றி செவ்வாய்க் கிணையானே—
கொஞ்சு செவ்வாய்க் கிளிகோவே;
தன்றி செவ்வாய்க் கினியோனே—
தந்தி பொல்லார்க் கிளையானே;
பன்றி புல்வாய்க் கருள்வார்ஸம்—
பந்தர் சொல்வாக் குடையார்சேய்;
நன்றி கொல்லாச் செயல்தாராய்—
நங்கை நல்லூர்ப் பெருமாளே. (5)

குன்றி - செங்குன்றிமணி. செவ்வாய்-அங்காரக க்ரஹம். செவ்–சிவந்த. வாய்-திருவாயையுடைய. கிளி-பசுங்கிளி போல்வாளாம் வள்ளிநாயகி. தன்றி-தந்தை; சிவபிரான். (திசைச்சொல்). செவ்-செம்மையான. ஆய்-தாய்; பார்வதி. தந்தி-யானைமுகக் கடவுள். பொல்லார்-பொல்லாக்கணபதி; ஸ்வயம்பு விநாயகர். பன்றிக்கு அருள்வார்-பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கிய திருவிளையாடல் செய்தவர். புல்வாய்-மான்; மான்குட்டிக்குப் புலிமுலையருத்தித் திருவிளையாடல் புரிந்தவர். ஸம்பந்தர் சொல் வாக்கு-திருஞாந சம்பந்தர் பாடிய 'திரு நெறித் தமிழ்' என்னும் தேவாரம். சேய்-சேயே; பிள்ளையே! நன்றி கொல்லா-நன்றி மறவாத. "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு"—திருக்குறள்.

மாண்டு] 130. குண்டலி எழுச்சிபெற [ஆதி

தந்தன தாத்ததனத் தனதான

சங்கிரி யாக்கடல்சுற் றலைவாயா—
சந்திரன் ஏய்த்தமுகத் தழகாளா;
கொங்கிரி யாக்குழல்மைக் குயில்கோவே—
குண்டலி மீச்செலவெற் கருள்கூர்வாய்;

அங்கிரி மாப்படைகுக் குடகேதா-
அன்றுவி ணூட்டவருக் கரசீவோய்;
நங்கிரி பார்த்திப!நற் றமிழ்வேதா-
நங்கைந லூர்க்குமரப் பெருமாளே. (6)

இரியா-நீங்காத. அலைவாய் - திருச்செந்தூர். ஏய்த்த-போன்ற. கொங்கு-வாஸனை; தேன். இரியா-நீங்காத. குழல்-கூந்தல். மைக்குயில்-கறுத்த நிறமுடைய குயில்போல்வாளாம் வள்ளிநாயகி. குண்டலி-குண்டலிநி. மீச்செல-மேல் எழும்பிச் செல்ல. எற்கு-எனக்கு. அங்கிரி-கால். மாப்படை-சிறந்த ஆயுதம். அங்கிரி மாப்படை-காலாயுதம்; கோழி. குக்குடம்-சேவல். கேதா-கொடியை யுடையவனே! விண் நாட்டவர் - தேவ லோகத்தவர். அரசு-ராஜ்யம். நம்-நமது. கிரி பார்த்திப - கிரிராஜ! 'குன்றுதோறாடல்' மலைகட்கு அரசனே! பார்த்திபன்-அரசன். தமிழ்வேதா-தமிழ்மறை பாடிய திருஞாநஸம்பந்த மூர்த்தியே!

(II-1 நங்கைநல்லூர்ச் சரவண குமாரன் அருட்புகழ் முற்றும்.)

---

# II-2. நங்கைநல்லூர்ச் சரவண குமாரன் பதிகம்

(பதினான்குசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

கல்யாணி] 131 [சுத்தாங்கம்

உன்னுடைய திருவடியில் ஒருநாளும் மறவாத
உள்ளன்பு வேண்டும் உனையே
ஓதிவரும் அன்பருக் கடிமைசெய வேண்டும்உனை
ஓதாத மாக்கள் தம்மை
என்னுடைய இருகண்ணும் நோக்காமை வேண்டும்இனி
எந்நாளும் உன்பக் தியை
எளியேன் பரப்பிவர வேண்டும்அப் பக்திமுனர்
என்பால் இருக்க வேண்டும்
நின்னுடைய புகழன்றி வேறெதுவும் என்செவியில்
நிகழா திருக்க வேண்டும்
நிகரற்ற அருள்வேண்டும் மருளொழிய வேண்டும்உனை
நித்தம் ஜெபிக்க வேண்டும்
தன்னுடைய சேய்பெருமை ஜகமறிய வேண்டிஅச்
சம்புகேட் கத்தமிழி லே
சங்கையறு பொருள்சொல்லி நங்கைநல் லூரில்வளர்
சரவண குமார குருவே. (1

*மருள்-மயக்கம். சம்பு-சிவபிரான். சம்பு கேட்கத் தமிழிலே சங்கையறு பொருள் சொல்லி: சிவபிரானுக்குப் ப்ரணவப் பொருளை முருகவேள் தமிழிற் கூறினர் என்பர் அருணகிரியார். "கொன்றைச் சடையற் கொன்றைத் தெரியக் கொஞ்சித் தமிழைப் பகர்வோனே"—திருப்புகழ்-19. சங்கை-சந்தேகம். அறு-இல்லாத.*

கானடா] 132 [சுத்தாங்கம்

தலையுனை வணங்குக,என் நெற்றி வெண் ணீறிடுக,
ஸதத(ம்)நிற் காண்க என்கண்,
தண்கடம் பிணைமுகர்க என்னாசி, நின்கதைகள்
தாழ்ந்துகேட் டுயர்க செவிகள்,
விலையொரு மதிப்பறுநின் நாமம்வாய் ஓதுக,நின்
வேதஞ் சுமக்க தோள்கள்,
வீழ்ந்துவீழ்ந் தடிபணிக மார்பகம் இரண்டுகையும்
மேற்கூம்பி அஞ்ச லிக்க,
தொலைவிலுள தலமலை தொறுஞ்சென்று வலம்வருக
சுற்றியுனை மருவும்இரு கால்,
சுத்தமனம் மெத்தஉனை நித்தலும் நினைத்துணர்க,
தோய்கென்அறி வுன்ஜோ தியில் ;
தலைமையுறு சிவகணத் தேவகண முதலிசிவ
தாணுகேட் கத்தமிழி லே
சங்கையறு பொருள்சொல்லி நங்கைநல் லூரில்வளர்
சரவண குமார குருவே. (2)

ஸததம்-எப்பொழுதும். நாசி - மூக்கு. சிவதாணு - சிவ பெருமான்.

தந்யாசி] 133 [சுத்தாங்கம்

எப்போதும் உன்னேவல் செய்யவேண் டும்பிறரை
ஏவா திருக்க வேண்டும்
யாவர்க்கும் ஏதும்ஈய வேண்டும்ஏது வும்பிறரை
இரவா திருக்க வேண்டும்
முப்போதும் முத்தமிழ் முழக்கும் திருப்புகழை
முறையோடு பாட வேண்டும்
மோஹிக்க வைக்கும் திரைப்படப் பாக்கள்தமை
முற்றிலும் மறக்க வேண்டும்

கைப்போது கொண்டுகழல் அர்ச்சிக்க வேண்டும்நெறி
கைக்கொள்ள வேண்டும் அன்றிக்
கையாற் பிறர்க்குரிய பொருளெதும் களவாடல்
கல்லா திருக்க வேண்டும்
தப்போது பிரமனைச் சிறையிட்ட தென்னென்று
சாமிகேட் கத்தமிழி லே
சங்கையறு பொருள்சொல்லி நங்கைநல் லூரில்வளர்
சரவண குமார குருவே. (3)

இரவாது-யாசிக்காமல். கைப் போது கொண்டு-கையில் பூக்களைக் கொண்டு. சாமி-சிவபிரான்.

ஷண்முகப்ரியா] 134 [சுத்தாங்கம்

'முருக!குரு பர!குமர! அறுமுகவ! குக!பனிரு
மொய்ம்பார்ந்த சரவண பவா!
முதல்வர்கண பதிமகிழும் இளைய!குழ கொழுகழக!
மூலமந் திரமொழி பவா!
வருகவரு கெ'ன்றுனது ஸந்நிதியில் முறையிட்டு
வாயார வாழ்த்தும் அடியார்
வாழ்வாங்கு வாழ்வர்நன் னிதிபெறுவர் கதிபெறுவர்
மதிபெறுவர் துதிபெறுவர்பின்
பெருகவர முறுவர்பிறர் நோய்தீர்ப்பர் பேய்தீர்ப்பர்
பில்லிசூ னியம றுப்பர்
பிறவாத முக்திநெறி மறவாத பக்திநெறி
பெறுவர்என யான்கேட் டுளேன்
தருகளற் கும்பாடல் ஓதுபணி யே;கங்கை
தாங்கிகேட் கத்தமிழி லே
சங்கையறு பொருள்சொல்லி நங்கைநல் லூரில்வளர்
சரவண குமார குருவே. (4)

மொய்ம்பு-தோள்கள். ஆர்ந்த-பொருந்திய. குழகு-இளமைச் செவ்வி. மூலமந்திரம்-பிரணவம். மதி-அறிவு. துதி - பிறர் புகழ்ந்து சொல்லும் சொற்கள். கங்கை தாங்கி - சிவ பெருமான்.

மோஹநம்] 135 [சுத்தாங்கம்

வேதம் படிக்கலாம் கீதம் கிளத்தலாம்
வேதாந்த மிக்கோத லாம்
விண்ணிடை உலாவலாம் சந்திரனை எட்டலாம்
வெள்ளிசெவ் வாய்க்கோள் களில்
நாதம் பரப்பலாம் பூதங்கள் ஐந்தினையும்
நம்வசம தாய்ஆக் கலாம்
ஞாநம் பெறற்கரிது மனமடக் கற்கரிது
நாமுமுயல் வோம்நன்கு போய்ப்
போதம் பெறத்தவசு பண்ணுவோம் என்றுபயில்
புண்ணியர்கள் இன்மை யாலே
போகியர்க ளேபெருக யோகியர்கள் அருகஇப்
போதுமழை எங்கு மில்லை
சாதம் பெறற்குமழை பெய்விக்க வேண்டும்;நீர்ச்
சடையர்கேட் கத்தமிழி லே
சங்கையறு பொருள்சொல்லி நங்கைநல் லூரில்வளர்
சரவண குமார குருவே. (5)

கிளத்தலாம்—எழுப்பலாம். போகியர்-உலக போகத்திலேயே நாட்டமுள்ளவர்கள். அருக—குறைய. சாதம்—சோறு.

பிலஹரி] 136 [சுத்தாங்கம்

நக்கீரர் அருணகிரி நாதர்பக ழிக்கூத்தர்
நற்குமர குருபர முநி
ஞாநமூ தாட்டிஎனும் ஔவையார் சேந்தனார்
'நகரேஷு காஞ்சி' என்னும்

அக்கீர மொழியள்கா மக்கண் ணி யூர்க்கச்சி
யப்பசை வாசா ரியார்
அருட்கச்சி யப்பமுநி வரர்சிதம் பரஸ்வாமி
அரியவட லூர்வள்ள லார்
மிக்கீர மேவுநெஞ் சினர்அகத் தியமுநிவர்
வென்றிமா லேக்கவிஞ ஞர்
விரவுதே னூர்ச்சொக்க லிங்கவர கவிஞர்கவி
வேட்டதொத் தென்சொலுங் கேள்!
'தக்கீர காரமறை உரைஅறைக' என்னவார்ச்
சடிலர்கேட் கத்தமிழி லே
சங்கையறு பொருள்சொல்லி நங்கைநல் லூரில்வளர்
சரவண குமார குருவே. (6)

*கீர மொழி*-பால் போன்ற இனியபேச்சு. *சைவாசாரியார்*-சிவாசார்யர். *சொக்கலிங்க வர கவிஞர்*-3333 பாடல்களில் 78 முருகனடியார்களின் வரலாறுகளைச் 'சேய்த்தொண்டர் புராணம்' என்ற பெயரில் பாடியுள்ள தேனூர் வரகவி சொக்கலிங்கனார் அவர்கள். *வேட்டது*-விரும்பி ஏற்றுக் கொண்டமை. *தக்கீர்* - தகுதியுடையவரே. *அகார மறை* - அகாரத்தோடு கூடிய உகர மகரங்களாம் ப்ரணவமான வேத வார்த்தை. *அறைக*-சொல்லுக. *வார்*-நீண்ட. *சடிலர்*-ஜடையர்.

கேதாரகௌளம்] 137 [சுத்தாங்கம்

கந்தரநு பூதியும் கந்தரந் தாதியும்
கந்தர்தம் அலங்கா ரமும்
கவினும்எழு கூற்றிருக் கையுமயிலொ டயில்சேவல்
கட்கிசை விருத்தங் களும்
சந்தமறை உபநிடத ஸாரம்நவ ரஸகவிதை
தாளநூல் என்ற புகழ்சேர்
சந்தத் திருப்புகழும் ஒண்திரு வகுப்புஞ்சொல்
தாலருண கிரிநாதர் முன்

அந்தப்ர புடதேவன் அரசவையில் மயில்மீதில்
ஆரோ ஹணித்து வந்தன்(று)
அரியகாட் சியையளித் தனைஎனக் கேட்டமுதல்
ஆசையுற் றேன்கான நான்
தந்தருள்க அக்காட்சி எற்குமின் றரனெனும்
தலைவர்கேட் கத்தமிழி லே
சங்கையறு பொருள்சொல்லி நங்கைநல் லூரில்வளர்
சரவண குமார குருவே. (7)

*கவினும் - அழகுள்ள. தால் - நாவினையுடைய. கேட்ட முதல்-கேட்டது முதற்கொண்டு.*

நாதநாமக்ரியை] 138 [சுத்தாங்கம்

சரியைஅறி யேன்கிரியை யோகமறி யேன்ஞான
தத்துவம தொன்றும் அறியேன்
ஸத்புத்ர தாஸஸஹ ஸங்மார்க்கம் நான்கனுட்
சார்ந்துமறி யேன்ஒன் றையும்
புரியஅறி யேன்கரும பக்திஞா னங்களொடு
புகல்ராஜ யோகம் எதுவும்
புத்திசெயும் ஆராய்ச்சி அறுமூட பக்தியே
போதுமென் றமைவுறு கிலேன்
தெரியஉனை ஏத்தும் திருத்தொண்டர் கட்குத்
திருத்தொண்டு செய்தும் அறியேன்
ஜீவிதம் எலாம்வறிது காலங் கடத்தினேன்
சேர்கதியும் ஏதுசெப் பாய்!
தரியறுகு கொக்கிறகு பிறையரவு தாழ்முடித்
தாதைகேட் கத்தமிழி லே
சங்கையறு பொருள்சொல்லி நங்கைநல் லூரில்வளர்
சரவண குமார குருவே. (8)

*ஜீவிதம்-வாணுள். வறிது-வீணுக. தரி-பூண்டுகொண் டுள்ள.*

பைரவி] 139 [சுத்தாங்கம்

பேணுமுல கத்திலே ஆச்சிரமம் நான்கென்பர்
ப்ரம்மசரி யங்க்ரு ஹஸ்தம்
பேசுவா நப்ரஸ்தம் ஓதுஸந் யாஸமிப்
பெற்றிநெறி நான்கி னையுமே
காணுமுல கத்தீர் கடைப்பிடித் தொழுகியாம்
காட்டுவேம் என்றிளைஞ னுய்க்
கண்டமுத வல்லிஸுந் தரவல்லி இருவரைக்
காதலித் தேம ணந்து
ஆணுருவுள் அழகநீ வனமலை எலாமுழன்
றுண்டியாய்ப் பழநி மலைமேல்
அன்போடு வீற்றிருந் தேகாட்டி விட்டனை
அதைத்தெரிந் துணர வலமோ!
தாணுமா லயனுச் சுசீந்திரம் தன்னிலமர்
தந்தைகேட் கத்தமிழி லே
சங்கையறு பொருள்சொல்லி நங்கைநல் லூரில்வளர்
சரவண குமார குருவே. (9)

வனம்-காடு. சுசீந்திரத்தில் உள்ள சிவபெருமான் திரு நாமம் தாணு மால் அயப் பெருமான் என்பது. பிரமன், நாரணன், சிவபெருமான் மூவரும் ஒன்றான மூர்த்தி அம் மூர்த்தி.

ஹம்ஸாநந்தி] 140 [சுத்தாங்கம்

'அயிலுமயி லுந்துணை' எனச்சொற் றெழுந்துநிதம்
ஆறெழுத் தைச்செ பித்துள்
ளன்புபெரு கத்தணிவில் இன்புமரு வப்புருவம்
அவையிரண் டுக்கும் இடையே
பயிலுமிடை கலைசுழுனை பிங்கலைமு நாடியும்
பாயுமுக் கூடல் மூழ்கிப்
பகருமா தாரமா றைத்தொடுங் குண்டலிப்
பாம்பமுத கலையை முட்டித்

தயிலதா ரைக்கிணை எனச்சொலவும் ஊறமுத
 தாரையொழு கிப்பெருக வும்
ஸஹஸ்ரார நற்கமல குருபீட மிற்றுக
 சாந்திசெய் தின்புறல் எநாள்?
சயிலநா ரிக்கினிய கயிலையா ளிப்பரமர்
 தாழ்ந்துகேட் கத்தமிழி லே
சங்கையறு பொருள்சொல்லி நங்கைநல் லூரில்வளர்
 சரவண குமார குருவே. (10)

*அயிலு மயிலுந்துணை* - வேலுமயிலுந்துணை. *ஆறெழுத்து*- *சடட்சரம். தணிவு இல்*-*தணிந்து அடங்காத*. *இன்பு*- *இன்பம். மருவ*-*பொருந்த. புருவமவை.............இன்புறலெநாள்: இவை ராஜயோகத்தின் அனுபவங்கள். முக்கூடல்* - *இது புருவநடுவிடம். இங்கு இடைகலை, பிங்கலை, சுழுமுனை ஆகிய மூன்று நாடிகளும் ஒன்று கூடுகின்றன. குண்டலி சக்தியைப் பாம்பெனக் கூறுவது மரபு. குண்டலினி சுழுமுனை வழியே, மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்னும் ஆறு ஆதாரங்களின் மேலே சென்று சந்திரகலையை எட்டி முட்டி, சந்திர கலாமிர்தம் உடலெங்கும் பாயச் செய்யும். தயிலதாரை*- *எண்ணெய் ஒழுக்கு. ஸஹஸ்ராரம்*-*ஆயிர இதழ்த் தாமரையுள்ள குருகமல பீடம். சயில நாரி* - *மலைமகள், பார்வதி.*

*(II-2 நங்கைநல்லூர்ச் சரவண குமாரன் அருட்புகழ் (பதிகம்) முற்றும்.)*

———

# III. நங்கைநல்லூர் இராமபிரான் துதி
## ( பொது )

கரஹரப்ரியா] 141 [சுத்தாங்கம்

(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)

கோசலைக்கும் தசரதற்கும் குமார ஞகக்
குவலயத்தே அவதரித்துக் கொழிவி தேகத்
தேசமயில் ஸீதையைமுன் மணந்து, தந்தை
திருவாக்கைச் சிரந்தாங்கி ஈரேழ் ஆண்டு
வாசம்வனத் திடைச்செய்தே இலங்கைக் கோனை
வதம்புரிந்து, பட்டாபி ஷேகம் கொண்ட
தாசரதி யைத்தாரம் தம்பின் ஞேடும்
தங்குநங்கை நல்லூரில் தரிசித் தேனே.

ஈரேழ் (2 × 7)=பதினன்கு. வாசம் வனத்திடை - வன வாஸம். மதிள் - மதில். தாசரதி-தசரத குமாரனும் ராமன். தாரம்-மனைவியாம் ஸீதை. தம்பின் - இலக்குவன். நங்கை நல்லூர் வரஸித்தி விநாயகர் கோயிலில் ராமர், ஸீதை இலக்குவன் இம் மூவர் திருவுருவங்களே தற்போதுள்ளன.

## *காயத்ரீ ராமாயணம்

ஆநந்தபைரவி] 142 [சுத்தாங்கம்

(எண்சீரடி ஆசிரிய விருத்தம்)

தத்துவங்கள் தொண்ணூற்று றையுங்க டந்து
சடாதாரம் கோசமைந்தும் தாண்டிச் சென்று
ஸத்துவரா ஜதகுணதா மதத்துக் கப்பால்
சந்த்ரகலை ஸூர்யகலை தழல்முக் கூடற்

---

* தத், ஸ, வி, துர், வ, ரே, நி(ணி), யம், பர், கோ, தே, வ, ஸ்ய, தீ, ம, ஹி, தி, யோ, யோ, ந, ப்ர, சோ, த, யாத் என்ற இருபத்து நான்கு எழுத்துக்களில் 24 பாடல்களும் தொடங்குகின்றன.

கொத்துமுடி மேல்நின்ற ஸஹஸ்ரா ரத்துக்
குருகமல பீடத்திற் குரைக ழல்வைத்(து)
அத்துவிதத் தேவியரோ டமர்வை குண்டத்
தப்பன்நங்கை நல்லூரெம் இராம னன்றே. (1).

*சடாதாரம்-ஆறுதாரங்கள். கோசம் ஐந்து - அன்ன, ப்ராண, மநோ, விஞ்ஞான, ஆநந்த மயமெனும் பஞ்சகோசங்கள். தழல்-அக்நி. முக்கூடல்-த்ரிவேணி ஸங்கமம். கொத்து-க்ரந்தி; முடிச்சு. ஸஹஸ்ராரம் - ஆயிர இதழ்த் தாமரையிருப்பிடம்; குருகமலம் என்பதும் இதுவே. அத் துவிதத் தேவியர்-அந்த இரண்டு தேவிமார்; ஸ்ரீ தேவி, பூதேவி இருவர். இப்பாடல் ஸ்ரீ வைகுண்டவாஸனையே யோகாபிராமனுகச் சித்திரிக்கின்றது.*

ஆரபி] **143** [சுத்தாங்கம்

ஸரயுநதிக் கரையிலுள அயோத்தி தன்னைத்
தலைநகராக் கொண்டரசாள் தசர தன்ருன்
திரயமனே வியர்பாலும் சேய்ப்பே றின்மை
சிந்தித்துப் புத்திரகா மேஷ்டி செய்போ
தரயனுக்கங் கக்கிநிகுண் டத்தெ ழுந்த
அரும்புருஷன் பாயஸபாத் திரத்தைக் கொண்டு
தரயுவதி கோசலையாள் ஒருபங் குண்ண
ஜனித்தவன் எம் நங்கைநல்லூர் இராம னன்றே. (2).

*திரய மனைவியர் - மூன்று தேவிமார். அரயன் - அரசன். ஜனித்தவன் - தோன்றியவன்.*

பியாகடை] **144** [சுத்தாங்கம்

விலையிலமு தொருபங்குண் கைகே யிக்கு
மீளிபர தன்பிறக்க இருபங் குண்ட
இலையெனிடைச் சுமித்திரைக்குச் சத்ருக் நன்முன்
இலக்குமணன் என்றிருவர் தோன்ற மூன்று

தலையாய தம்பியரும் தானு மாகச்
சத்ரியர்க்குண் டாங்கலைகள் கைவ ரப்பெற்
றெலையறுசீர் வசிஷ்டரையே ஆசா ணுக்கொண்
டிருந்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே. (3)

(விலைஇல்-விலைமதிப்பற்ற. மீளி-வீரன். இலை என் இடை-இல்லையென்றே சொல்லத்தக்க அளவு வெளித்தெரியாத இடுப்பு. தலையாய-சிறந்த. சத்ரியர் - க்ஷத்ரியர்; அரசர். எலை - எல்லை.)

தர்பார்] 145 [சுத்தாங்கம்

துர்வாஸர் போற்சினங்கொள் விச்வா மித்ரர்
'ஸுபுத்திரருட் கருவேளை எழிலால் வென்ற
ஸர்வேச னும்முதன்மைந் தனைத்தா' என்னத்
தசரதனும் வேள்விக்காத் தந்தோம் என்ன
நிர்வாண ஸுகந்தெரிக்கும் குருவின் பின்னே
நிழல்போலத் தொடர்சீடர் போல்அன் னோர்பின்
கர்வாதி தீக்குணங்கள் களைந்து முன்போய்க்
காட்டினன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே. (4)

கருவேள்-மன்மதன். நிர்வாண ஸுகம்-மோக்ஷ இன்பம். தெரிக்கும்-உபதேசித் தறிவிக்கும். கர்வாதி-கர்வம் முதலிய. முன்-முன்னொருகால்.

மலையமாருதம்] 146 [சுத்தாங்கம்

வழியொழுகாத் தாடகையை வதைத்து மாய
மாரீசன் தனைவிரட்டிக் குசிகர் வேள்வி
ஒழிவறமேல் நிகழமகங் காத்து நின்றன்(று)
உத்தமியாம் அஹலிகையை உத்த ரித்துப்
பழியில்முநி புங்கவர்கோ தமர்பூ ஜைக்குப்
பரிவுற்றுப் பற்பல்முநி வரர்பூ ஜிக்க
விழியழகும் தோளழகும் விளங்கக் காட்டி
மேயவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே. (5)

*வழி - நல்வழியில். குசிகர் - கௌசிகர்; விச்வாமித்ரர். வேள்வி-யாகம். ஒழிவற-இடையறுது; தடையற. மகம் - யாகம். உத்தரித்து - உத்தாரணம் செய்து; வாழ்வருளி. கோதமர்-கௌதம முநிவர்.*

காம்போதி] 147 [சுத்தாங்கம்

ரேசகபூ ரககும்ப கங்கொள் யோக
ரீதிஎலாம் தெளிராஜ ரிஷியாம் பாச
நாசகமெய்ச் சநகன்நகர் மிதிலைக் கேகி
ஞாலமகள் ஸீதையைக்கண் நாடிக் காதல்
வாசகங்கள் கண்பேசும் வாய்ப்புப் பெற்றவ்
வைதேஹி மகிழஅரன் வில்லை வொத்து
மாசறுநன் மணத்தொடையை அவட்குச் சூட்டி
மகிழ்ந்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே. (6)

*ரேசக...கும்பகம்-ப்ராணுயாம அங்கங்கள். ரீதி-நெறி முறை. தெளி-தெளிந்தறிந்திருந்த. பாசநாசக-பற்றற்ற. ஞாலமகள்-பூமியின் பெண். கண் நாடி-கண்ணுல் பார்த்து. வைதேஹி-ஸீதை. அரன் வில்லை - சிவதநுஸை. மணத் தொடை - மணமாலை. அவட்கு-ஸீதைக்கு.*

ஹிந்தோளம்] 148 [சுத்தாங்கம்

நிறைவலிமை பெறுபரசு ராமன் தர்ப்பம்
நிலைகுலைத்து ஜாநகியோ டயோத்தி மீண்டு
பொறையினிற்பேர் போம்பூமி மகளோ டின்பிற்
பூரித்துப் பட்டாபி ஷேகம் பூணும்
துறையில்ஒரு கூனிசொலால் மனமாற் றங்கொள்
தூயவளாம் கைகேயி சொற்குட் பட்ட
மறைமொழியான் தந்தைசொற்கா வனம்ஏ கச்சம்
மதித்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே. (7)

*தர்ப்பம்-அகந்தை; கர்வம். ஜாநகி-சீதை. பொறை - பொறுமை. பூமிமகள்-சீதை. துறையில்-ஏற்பாட்டுவகையில். மறைமொழியான்-ஸத்யவாசகன். தந்தை-தசரதர்.*

முகாரி] 149 [சுத்தாங்கம்

'யம்'மெனவண் டிசைபொழில்சூழ் அயோத்தி நாட்டின்
எல்லைஇலக் குவனோடும் தாரத் தோடும்
'உம்'மெனவூ ராரழவும் நகைமு கத்தோ
டுடன்கடந்து, குகவேடன் நேசம் பூண்டு,
தம்மனை தம் பின்னோடுங் கங்கை தாண்டித்
தவர்பரத்து வாஜர்தமாச் சிரமம் நண்ணிச்
செம்மனத்தார் சேர்சித்ர கூடஞ் சேர்ந்து
திகழ்ந்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே.(8)

*'யம்'—ஒலிக்குறிப்பு. தாரம் - மனைவி. 'உம்' - அழுகை ஒலிக் குறிப்பு. நகை-புன்சிரிப்பு. தம் மனை - தன் மனைவி. தவர் - தபஸ்வி.*

குறிஞ்சி] 150 [சுத்தாங்கம்

பர்த்தாவைப் பறிகொடுத்த தாய்மார் மூவர்
பரதனொடும் காடடைந்து பார்த்துச் சொன்ன
விர்த்தாந்தம் கேட்டவுடன் விசன மிக்கு
விரைந்தீமக் கடன்தந்தைக் காற்றி விட்டுக்
'கர்த்தாநீ; நான்அடிமை; நாட்டுக் கேவா
காட்டைவிட்'டென் றிறைஞ்சிக்கேள் பரதற் காக
அர்த்தாதி அனைத்துமென்பா துகையை மட்டும்
அளித்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே. (9)

*பர்த்தா - கணவன்; தசரதன். வ்ருத்தாந்தம்-வரலாறுகள். விசனம்-வருத்தம். ஈமக்கடன்-அந்திமக்ரியை. கர்த்தா-தலைவன். கேள்-கேட்டுக் கொண்ட. அர்த்தாதி - அர்த்தம் முதலிய; தர்மார்த்த காம மோக்ஷங்களெல்லாம் ஆய. என்-எனப்படுகின்ற. பாதுகை-மரத்தாலான பாதரக்ஷை.*

ஹம்ஸத்வநி] 151 [சுத்தாங்கம்

கோஷதண்ட காரணிய வாணர்க் கன்பின்
குதூகலத்தைக் கொடுத்துவிரா தனைப்பின்
கொன்று
பூஷசர பங்கர்தமாச் சிரமம் போகிப்
பொதியமுநி தண்ணருளைப் புரியப் பெற்றுத்.
தோஷமிலாச் சம்பாதி ஜடாயு என்பார்
துவிஜர்திர மறிந்துபஞ்ச வடிதீ ரத்தில்
ஈஷணைகள் அகற்றிமர வுரியோ டேயே
இருந்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே. (10)

கோஷ-ஒலிமிக்க. வாணர் - வாழ்பவர். பூஷ-பூஷிக்கத் தக்க; போற்றத்தக்க; ஆபரணம் போன்ற எனினுமாம். போகி-போய். தோஷம்-குற்றம். துவிஜர்-பறவைகளானவர் கள். த்விஜம்-பறவை. ஈஷணைகள்-ஆசைகள்.

சாருகேசி] 152 [சுத்தாங்கம்

தேகமிகப் பெருத்தவள்சூர்ப் பநகை யாமத்
தெசமுகன்தங் கையின்மூக்கைத் தம்பின்கொய்ய
ஸாகஸங்கள் செய்தகர தூஷ ணர்க்கு
ஸம்மார கிருத்தியஞ்செய் தரிய மான்மேல்
மோகமுறு மோஹிநிக்கா மான்பின் னோடி
முடித்தஅள விற்குரல்மா ரீசன் காட்ட
வேகமில்மைத் துனனைச்செல் வித்த வட்கூழ்
விதித்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே.(11)

தெசமுகன்-இராவணன். ஸாகஸங்கள்-யுக்தியான நடிப்பு. ஸம்மார கிருத்தியம்-கொலை; நயம்பட உரைத்தது. மோஹிநி- ஸீதை. முடித்த - (அம் மானின் வாழ்வை) முடிவாக்கிய. குரல்-இராமரைப் போன்ற குரலில் 'ஸீதா', 'லக்ஷ்மணா' என்ற ஒலி. வேகமில்-கோப வேகத்தில். மைத்துனன்-லக்ஷ் மணன். செல்வித்தவள் - போம்படிச் செய்த ஸீதை. ஊழ் விதித்தவன்-தலைவிதியின் படித் தண்டனையளித்தவன்.

ஸஹானா] 153 [சுத்தாங்கம்

வனப்பர்ண சாலையினிற் றனித்தி ருந்த
மண்மகளை மாறுவே டத்தில் வந்த
சினப்பகைஞன் இராவணனும் திருடிச் செல்கால்
செலற்றடுத்த ஜடாயுவினைச் சிறக ரிந்த
தனத்தையெலாம் அவர்சொல்லக் கேட்டு முத்தி
தந்தவர்க்குச் சுகிபிரி வாற்பின் னேடும்
மனத்துக்கம் தாங்காமே வனமெங் கெங்கும்
வளைந்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே(12)

வனப் பர்ணசாலை-அழகிய அல்லது காட்டிலிருந்த இலை களாலான வீடு. மண்மகள்-பூமியின் மகளாம் ஸீதை. சினப் பகைஞன்-கோபம் மிக்க எதிரி. செலல்-செல்லுதலை. தனத்தை-தன்மையை; செய்தியை. பின் - தம்பி. வளைந்தவன் - நடந் தலைந்தவன்.

சாமா] 154 [சுத்தாங்கம்

ஸ்யந்திநிகள் நிறைந்தவனத் தெலாம லைந்து
திரியுங்காற் சபரிதந்த கனிகள் உண்டு
நைந்திறவெங் கவந்தனின்கை நன்கு வெட்டி
நரபூர்வர் கிட்கிந்தை நாட டைந்து
முந்தியநு மனைஅடிமை கொடுஸுக் ரீவன்
முக்யவிருப் பினைப்பூர்த்தி செய்வித் தாங்குப்
பந்திகொளேழ் மராமரம்வா லியின்மேற் பாணம்
படுத்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே. (13)

ஸ்யந்திநி - நதி. நைந்து - நலிந்து. இற - இற்று விழ. வெம்-கொடிய; விரும்பத்தக்க எனினுமாம். நரபூர்வர்-(டார்வின் கொள்கைப்படி) மனிதப் பிறவிக்கு முன்னை குரங்குகள். பந்தி-வரிசை. பாணம் படுத்தவன்-அம்பு செலுத்தியவன்.

ஸ்ரீ ராகம்] **155** [சுத்தாங்கம்

தீரமுனோன் தாரமெனும் தாரை யோடும்
சேர்ந்துபனுள் இன்புற்றுச் செயல்ம றந்து
வாரமில்ஸுக் ரீவற்கு நன்றி கொன்ற
வழக்குணர நினைவூட்டி வருவித் துள்ள
மாரமந்த்ரா லோசனைசெய் தநுமன் தன்னை
அரக்கனிலங் காபுரிக்குத் தூத னுப்பி
வீரமுடன் கண்டுவரு கென்று சொல்லி
விடுத்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே.(14)

முனோன்-அண்ணன். தாரம்-மனைவி. வாரம் இல்-அன்பில்லாத. ஆர-மிக.

ஹரிகாம்போதி] **156** [சுத்தாங்கம்

மகாவிச்வ ரூபமெடுத் 'திராம' நாமம்
வாயாரச் செபித்தவணம் வாரி தாண்டிச்
சகாயமெதும் இன்றிஇலங் கிணியைக் கொன்று
தலையொருப திருபதுகை கொண்டான் ஊர்க்குட்
புகாஅலைந்து புவிமகளின் இருப்பி டங்காண்
பொருட்டெங்கெங் கெல்லாமோ போகிப் பின்னர்ச்
சிகாமணியை அசோகவநத் தநுமன் காணச்
செய்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே.(15)

விச்வரூபம்-பேருரு. வாரி-கடல். சகாயம்-துணை. ஊர்-இலங்கை. புகா-புக்கு; புகுந்து. புவிமகள்-சீதை. போகி-போய். சிகாமணி-சீதை.

காபி] **157** [சுத்தாங்கம்

ஹிதமொழியாற் சீதைமனம் இளகு மோஎன்(று)
இராவணனும் முயலுங்கால் சென்று சேர்ந்த
பதமுடைச்சொல் லின்செல்வன் அவன்போம் பின்னர்ப்
பக்குவமாய்ச் சமயமறிந் திராம நாமம்

விதவிதமாய் மெல்லமெல்லச் சொல்லிச் சொல்லி
மெள்ளஅவ ளுயிர்க்குயிரை ஊட்டித் தான்போந்
ததன்கதைமற் றந்தரங்கங் களையும் சொல்கைக்
கமைத்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே.(16)

ஹிதம்-ஆறுதலான; இனிய. பதம்-பரிபக்குவம். சொல்லின் செல்வன் - ஆஞ்ஜநேயர். போம்-போன. போந்ததன் - வந்ததன். அந்தரங்கங்களை-இரகசியமான செய்திகளை.

சாரங்கா] 158 [சுத்தாங்கம்

திடஅநுமான் கொணர்ந்தகணை யாழி தன்னைத்
தேவியிடம் சேர்ப்பித்துச் சீதை தந்த
சுடரணிசூ ளாமணியைப் பெற்றுக் கொண்டு
தூதனென்ற முறையிலிரா வணனைச் சந்தித்(து)
'அடலுடையெம் தலைவனொடும் பகைவேண் டாம்எம்
அன்னையைவிட் டிடுக'என எடுத்துச் சொல்லிக்
கடலுடைபூண் இலங்கையில்வா லாற்றீ வைக்கக்
கணித்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே.(17)

கொணர்ந்த-தான் கொண்டுவந்த. கணையாழி-மோதிரம். தேவி-சீதை. சுடர்-ஒளி. சூளாமணி–சூடாமணி; திருமுடியணி. அடல்-வலிமை. அன்னை-தாய் போன்ற சீதை. வாலால் - வாலினால். தீ-நெருப்பு. கணித்தவன்-கடைக்கணருள் செய்தவன்.

சங்கராபரணம்] 159 [சுத்தாங்கம்

யோசனைகள் பலகடந்து மீண்டு தான்மே
வுறைவிடஞ்சேர்ந் துடன்தன்பால் ஆஞ்ஜ நேயன்
'ஈசனே! கண்டுவந்தேன் கண்ணுற் கற்புக்
கிலகணியை'எனச்சூடா மணியை ஈந்து

மாசறியா நிலமகளின் நிலைமை சொல்ல
மனமுருகிக் கேட்டிலங்கை மன்னன் போருக்
கேசயபே ரிகைகொட்டும் பெற்றி கேட்டங்
கெழுந்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே.(18)

*யோஜனை-9 கல் தொலைவு. ஈசனே-எஜமானனே! கண்டு... அணியை: 'கண்டனன் கற்பினுக் கணியைக் கண்களால்'— கம்பர். நிலமகள்-ஸீதை. சயபேரிகை-வெற்றிமுரசு. பெற்றி-தன்மை. எழுந்தவன்-(வீரத்துடன் போர்செய்யத் தயாராக) எழுந்திருந்தவன்.*

ரஞ்ஜநி] **160** [சுத்தாங்கம்

யோசனைசெய் துடன்கவியின் ஸேனை கூட்டி
ஒத்தஎழு பதுவெள்ளம் வாந ரத்துக்
காசறுநீ லனைச்சேனைக் கதிப னுக்கொண்(டு)
அமர்க்கெழுங்கால் வீடணன்வந் 'தடைக்க லந்தா!
தாசரதீ!' என்னஅவன் தன்னோ டேழு
ஸஹோதரர்கள் தாமான தகைமை செப்பிப்
பூசலற அன்னவற்குப் புகல்தந் தாண்ட
புண்ணியன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே.(19)

*யோசனை-ஆலோசனை. கவியின் ஸேனை-வாநர ஸேனை. எழுபது வெள்ளம் வாநரம்—70 வெள்ளம் (பேரெண்) குரங்குகள். ஆசு-குற்றம். அமர்-போர். வீடணன்-விபீஷணன், தாசரதீ - தசரதபுத்ரனும் ராமா! ஏழு ஸஹோதரர்கள். இராமர், பரதர், இலக்குமணர், சத்ருக்நர், குஹன், ஸுக்ரீவன், விபீஷணன் ஆக ஏழு பேர். பூசல்—சண்டை. அன்னவன்-விபீஷணன். புகல்-சரணாகதி.]*

ரீதிகௌளம்] **161** [சுத்தாங்கம்

நளன்நீலன் அங்கதன்மா ருதிஸுக் ரீவன்
நாமமினும் பற்பலவா நரரைக் கொண்டே
வளர்குன்ற மலைபுரட்டு வித்து வாரி
வழியடைக்கச் சேதுகட்டி அனைத்துப் பேரும்

கிளர்உவரி தாண்டிப்போர்க் களமே சேர்ந்து
கெஜதுரக ரதகடகஞ் சூழ வேங்கின்
றுளஇந்த்ர ஜித்தைஇலக் குவனூற் கொல்வித்
துயர்ந்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே.
(20)

நாமம்-பேர்கள். வாரி-கடல். சேது-அணை. உவரி-கடல். கெஜம்-யானை. துரகம்-குதிரை. ரதம்-தேர். கடகம்-காலாட் படைச்சேனை.

நாககாந்தாரி] 162 [சுத்தாங்கம்

ப்ரதமஸஹோ தரனிலங்கேச்-வரனுக் குப்பின்
பெயர்க்கும்ப கரணனையும் சிரத்தைச் சேதித்
ததமர்களாம் அரக்கர்கள்கூட் டத்தை முற்றும்
அழித்தருளி ஒரேஅம்பால் அமர்பு ரிந்தே
சதமகனும் பிரமாவும் அஞ்ச வாழ்ந்த
தசமுகனை 'இன்றுபோய் நாளை வா'என்
றதருமனி ராயுதபா ணியனும் அப்போ
தறைந்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே.
(21)

ப்ரதம ஸஹோதரன் - முதல் ஸோதரன். பின்-தம்பின். அதமர் - கீழ்ப்பட்டவர். சதமகன் - இந்திரன். தசமுகன் - இராவணன். அதருமன் - தருமநெறி தவறிய இராவணன். நிராயுதபாணி - படைக்கல மற்ற கையன். அறைந்தவன் - சொன்னவன்.

தோடி] 163 [சுத்தாங்கம்

சோரனிரா வணனையொரம் பெய்து பத்துச்
சுழித்தலையும் இற்றுவிழக் கீழே தள்ளிப்
போரதனிற் பெருவாகை பூண்டு கொண்டு
பூமனுருத் திரன்புருகூ தனும்பு கழ்ந்து

'சூர! அதி தீர! மஹா வீர! ஆதி
ஸூர்யகுலோத் தாரண!' என் றிசைத்துப் போற்றி
ஆரமலர் மாரிபெய்ய அமர்க்க ளத்தில்
ஆர்ந்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே.(22)

சோரன்-பெண்திருடி. சுழி-தலைச்சுழி. இற்று-நொந்து. பூமன்-பிரமன். புருகூதன்-இந்த்ரன். உத்தாரண-வாழ்வித்தவ. ஆர-நிரம்ப. அமர்க்களம்-போர்க்களம். ஆர்ந்தவன்-நிறைந்து பொருந்தி நின்றவன்.

ப்யாக்] 164 [சுத்தாங்கம்

தசரதனைக் காணுமுனர்த் தரணி தந்த
தநயைதனைத் தழல்முழுகு வித்தாட் கொண்டு
தசமுகன்றன் இலங்கையினை விபீஷ ணற்குத்
தந்துமுடி கவித்தருளிப் புட்ப கத்தில்
விசநமறத் தேவியொடும் ஏறி வீற்று
விரைந்துபரத் வாஜர்தமாச் சிரமம் சார்ந்தே
அசநமறுத் தெரியிடைவீழ் பரதன் முன்சென்
றணைந்தவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே.
(23)

*தசரதனை-பித்ருலோகத்திலிருந்த (தன்) தந்தையை. தரணிதந்த தநயை-ஸீதை. தழல்முழுகுவித்து-அக்நிப்ரவேசம் செய்வித்து. தசமுகன்-இராவணன். முடிகவித்து-முடிசூட்டி. புட்பகத்தில் - புஷ்பக விமாநத்தில். விசநம்-துக்கம். தேவி-ஸீதை. வீற்று-வீற்றிருந்து. விரைந்து - வேகமாக. அசநம் மறுத்து-உணவின்றி. அசநம் அறுத்து எனலுமாம். எரியிடை-தீ வளர்த்து அதில். வீழ்-(வீழப்போன)வீழத் தயாராயிருந்த.*

மத்யமாவதி] 165 [சுத்தாங்கம்

யாத்திரைசேர் வநவாஸம் பதினான் காண்டும்
இனிதுமுடித் தயோத்திஎய்தி மணிப்பீ டத்து
வேத்திருக்கை வீற்றிருந்து பரதன் கொற்ற
வெண்குடையைக் கவித்திடலக்ஷ் மணசத் ருக்நர்

பூத்திருக்கை யாற்கவரி வீசத் தன்பாற்
பூமிமகள் பொலியஅநு மான்தாள் தாங்கக்
காத்திருந்து வசிஷ்டர்முடி கவிக்க இன்பம்
கண்டவன்எம் நங்கைநல்லூர் இராம னன்றே. (24)

*யாத்திரை-தலவலம். மணிப்பீடம்-ரத்ந ஸிம்மாஸநம். வேத்திருக்கை-வேந்திருக்கை - ராஜபீடம். பால்-பக்கத்தில். பூமிமகள்-ஸீதா தேவி. முடி-கிரீடம்.*

(*காயத்ரீ ராமாயணம் முற்றும்)

---

* இவ் விருபத்து நான்கு பாக்களையும் நித்தமும் தவறுமல் ஓதுவார் வடமொழியில் உள்ள 'காயத்ரீ ராமாயண' பாரா யணம் செய்த பலனை இராம னருளாற் பெறுவரென்பது திண்ணம்.

---

# IV. நங்கைநல்லூர் ஆஞ்ஜநேயர் *போற்றிப் பஞ்சகம்

(அறுசீரடியாசிரிய விருத்தம்)

வாசஸ்பதி] 166 [ஆதி

அஞ்சனை மைந்தா! போற்றி! அநிலபுத் திரனே! போற்றி!
கஞ்சநேர் கழலி ராமன் காகுத்தற் கடிமை! போற்றி!
வஞ்சனை இலாதாய்! போற்றி! மஞ்சனே! போற்றி! நோய்க்கு
நஞ்சன நங்கை நல்லூர் நகராஞ்ஜ நேயா! போற்றி! (1)

*அநிலம் - காற்று; வாயு பகவான். கஞ்சம் – தாமரை. காகுத்தன்-இராமன்; ககுஸ்த வம்சத் துதித்தவன். மஞ்சனே- அழகனே. நோய்க்கு நஞ்சு அன....ஆஞ்ஜநேயா: விடம் உயிரைப் போக்கும். அதுபோல் மக்களின் நோய்களை (விடம் போல் இருந்து) நீக்க வல்ல அநுமான் என்றபடி. பாம்பின் விஷம் மருந்தாகவும் தற்காலத்தில் பயன்படுத்தப் பெறுவது கண்கூடு.*

ஆகிரி] 167 [ஆதி

புந்தியிற் பெரியாய்! போற்றி! பூஜனைக் குரியாய்! போற்றி!
நந்தியின் அமிசங் கொண்ட நவவியா கரணு! போற்றி!
செந்திரு மகளாம் ஸீதை திருக்கையில் ஆழி சேர்த்த
நந்திரு மகனே! போற்றி! நங்கைநல் லூராய்! போற்றி! (2)

*புந்தி - புத்தி. நந்தி - திருநந்தி தேவர்; சிவபிரான் எனினுமாம்: "ருத்ரற் சிறந்த அநுமன் என்றும்"-திருப். "கருவடைந்து." ஆழி - கணையாழி. நந் திருமகனே – நமது சீமானே!*

---

* 27 போற்றிகள் வரும் இந்த ஐந்து பாடல்களையும் 4 முறைகள் ஓதினுல் 108 போற்றிகள் கூறியதாக (அஷ்டோத்தர சத நாமார்ச்சனையாக) ஆகும்.

ஆபோகி] 168 [ஆதி

இலங்கையை எரித்தாய்! போற்றி! இராமனற் றூதா!
போற்றி !
வலங்கையிற் கதையாய்! போற்றி! இடக்கைம்மா மலையாய்!
போற்றி !
இலங்கைமன் இராவ ணற்கோர் எதிரியாய் இருந்தாய் !
போற்றி !
நலங்கைக்கொள் நங்கை நல்லூர் நகரநு மானே போற்றி!(3)

வலங் கை - வலது கை. வலக் கை என்பது எதுகை நயம் கருதி வலங்கை என வந்தது. மலை - ஸஞ்ஜீவி மலை. வலக் கையில் கதையையும் இடக்கையில் ஸஞ்ஜீவி மலையையும் ஏந்தி யுள்ள தோற்றத்தை இரண்டாவது வரி குறிக்கின்றது. மன்-மன்னன். நலம் கைக்கொள்....அநுமான் - நன்மையையே கைக்கொண்ட அநுமன்; நலத்தை ஊருக்கும் ஆக்கலாம்.

பீம்ப்ளாஸ்] 169 [ஆதி

இன்னிசை வலவா! போற்றி! இராகவற் கினியாய்! போற்றி!
துன்னிய மாணித் தன்மை தொகுசொல்லின் செல்வா !
போற்றி !
தன்னிக ரிலாத பக்திச் சாம்ராஜ்ய ராஜ! போற்றி !
நன்னிய மத்தாய்! போற்றி! நங்கைநல் லூராய்! போற்றி! (4)

வலவா - வல்லவனே ! துன்னிய - நெருங்கிய; நிறைந்த' மாணித்தன்மை - ப்ரம்மசர்யம். தொகு - தொகுதியாக அமையப் பெற்ற. 'சொல்லின் செல்வன்'- இது கம்பர் தம் இராமாயணத்தில் அநுமனுக்குச் சூட்டியுள்ள பட்டப்பெயர். தன் நிகர் - தனக்கிணை. பக்திச் சாம்ராஜ்ய ராஜ - பக்திப் பேரரசுக்கு அரசனே!(அதாவது) பக்தியில் அவ்வளவு உயர்ந்த வனே! நல் நியமத்தாய் - நல்ல ஒழுக்கமுடையவனே!

வஸந்தா] 170 [ஆதி

சொல்லிரா மாய ணத்திற் சுந்தர காண்டந் தன்னில்
நல்லிரா கவன்க தைக்கு நாயகா! போற்றி! போற்றி!
எல்லிரா, நங்கை நல்லூர் இடமக லாதாய்! போற்றி !
வில்லிரா மனைப்பேண் பக்த விஜயமா ருதியே ! போற்றி! (5)

சொல் - சொல்லப்படுகின்ற. சுந்தர காண்டத்திற் கதா நாயகன் ஆஞ்ஜநேயரே என்பது மரபு. எல் - பகல். இரா —

இரவு. வில்லி+ராமன் அல்லது வில்+இராமன் என எப்படியும் பிரிக்கலாம். பேண்-விரும்பி வழிபடும். பக்த மாருதி, விஜயமாருதி என்க. நங்கைநல்லூரில் வீற்றிருக்கும் அநுமன் அஞ்ஜலி பத்த ஹநுமானைப் பக்த மாருதியாகத்தான் காட்சியளிக்கிறார். விஜயமாருதி - எங்குப்போனாலும் பெரும் வெற்றி கண்டே மீளும் திறம் படைத்தவர் அநுமார் ஆதலின் 'விஜயமாருதி' எனப்பட்டார்.

(ஆஞ்ஜநேயர் போற்றிப் பஞ்சகம் முற்றும்)

---

## தருவதும் 16! — பெறுவதும் 16!!

"பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க" என்ற வாழ்த்துரை தமிழ் நாட்டில் மிகத் தொன்மையானது. "பதினாறும் பெற்று" என்பது பதினாறு வகைப் பேறுகளைக் குறிக்கிறது. மார்க்கண்டேயன் வயது என்றும் பதினாறுதான். பதினாறின் விசேஷங்கள் இவை.

ஸ்ரீ கணேஷ் மண்டலி தன்னுடைய பராமரிப்புக்கு உட்பட்ட ஸ்ரீ வரஸித்தி விநாயகர் ஆலயத்தின் தினசரி பூஜா கைங்கர்யத் திட்டம் ஒன்றை அமுலாக்கியுள்ளது.

### 16 கால் மண்டபத்தில்

எழுந்தருளியுள்ள ஸ்ரீ விநாயகர், ஸ்ரீ கோதண்டராமர், ஸ்ரீ பக்த ஆஞ்ஜநேயர், ஸ்ரீ பாலஸுப்ரம்மண்ய ஸ்வாமி, நவக்ரஹங்கள் ஆகிய எல்லாச் சந்நிதிகளுக்கும் தினந்தோறும் நடக்கும் அபிஷேக, அலங்கார, ஆராதன, அர்ச்சனைகளுக்கும் நைவேத்யத்துக்கும் ரூ. 16 செலவாகிறது.

இந்த ரூ. 16 ஐச் செலுத்தி அன்பர்கள் 365 நாட்களில் தங்களுடைய ஜந்ம நக்ஷத்திர தினமோ அல்லது எந்த நாள் விருப்பமோ அதைக் குறித்து எழுதினால் அவர்களுடைய பெயரில் எல்லாச் சந்நிதிகளிலும் அவர்களின் உபயமாகப் பூஜா கைங்கர்யம் நிறைவேற்றி வைக்கப்பட்டுப் பிரஸாதங்கள் (உள்ளூராயின் நேரிலும், வெளியூர்களாயின் தபால் மூலமும்) வழங்கப்படும்.

விவரங்கள், பூர்த்தி செய்வதற்கான தாள் ஆகியவை அடங்கிய பிரசுரத்துக்கு எழுதுக:

**ஸ்ரீ கணேஷ் மண்டலி,** *(பதிவானது)*
ஆலயப் பராமரிப்புக் குழுவினர்,
2 ஆவது பெருஞ்சாலை, நங்கைநல்லூர் காலனி, சென்னை-61.

# V. நங்கைநல்லூர் நவக்ரஹ ஸ்தோத்ரம்

கலி விருத்தம்)

ஸௌராஷ்ட்ரம்] **171. ஞாயிறு** [ஆதி

ஸூர்ய பகவான் துதி

ஞாயிற் றைத்திரு நங்கைநல் லூரினிற்
போயிற் றுச்சூழ் புறவிருள் பொங்கொளி
ஆயிற் றுப்பகல் ஆதவ ஞலென்று
வாயிட் டுப்பறை கொட்டி வணங்குவாம். (1)

*குறிப்புரை :— ஞாயிறு - ஸூர்யன். பகல், ஆதவன் – ஸூர்யன்; ஒருபொருளிருசொல். வாயிட்டு - வாயினுல்; வாய் விட்டு எனலுமாம். 'பகல் ஆதவனுல் சூழ் புறஇருள் போயிற்று, பொங்கொளி ஆயிற்று என்று திரு நங்கை நல்லூரினில் ஞாயிற்றை வாயிட்டுப் பறை கொட்டி வணங்குவாம்' என அந்வயிக்க.*

சாவேரி] **172. திங்கள்** [ஆதி

சந்த்ர பகவான் துதி

திங்க ளைச்சிவ ஞர்முடிச் செல்வனை
எங்க ளைப்பிர மிக்கச்செய் இன்பனை
நங்க ளைத்திரு நங்கைநல் லூர்மக்கள்
தங்க ளைப்புரக் கத்தலை தாழ்த்துவாம். (2)

*திங்கள் - சந்த்ரன். சிவஞர்முடிச் செல்வன் என்றது மூன்றும் பிறைச் சந்த்ரனை. இன்பன் - இன்பமுடையவன்; இன்பமூட்டுபவன். நங்களை - நம்மை. புரக்க – காப்பாற்ற.*

திங்களைத் தலை தாழ்த்துவாம் என்றது திங்களுக்கு எனப் பொருள் தந்து உருபு மயக்கமாக நின்றது.

சுருட்டி] **173. செவ்வாய்** [ஆதி

அங்காரக பகவான் துதி

செவ்வாய்ப் பைங்கிளி ஸ்ரீதரன் தேவியாள்
செவ்வாய் மண்மகள் சேயனைச் சேயனை
நவ்வாய் நீர்ச்செனை நங்கைநல் லூரினிற்
செவ்வா யைத்தினம் ஸேவித் திறைஞ்சுவாம். (3)

செவ் வாய் - சிவந்த திருவாயை உடைய. பைங்கிளி - பசுங்கிளி. செவ்வாய்ப் பைங்கிளி-முரண்தொடை. ஸ்ரீதரன்- திருமால். தேவி - திருமால் மனையாட்டியாம் பூதேவி. செவ் ஆய்-செம்மைக்குணம் படைத்த தாயார். மண்மகள்- பூமிதேவி. சேயன் - மகன். சேயன் - சிவந்தவன். நவ் - நௌ - படகு. வாய்-வாய்த்த. நீர் - கடல். செனை-'சென்னை' என்பதன் இடைக்குறை. செவ்வாய் - அங்காரகன்.

நாட்டைக்குறிஞ்சி] **174. புதன்** [ஆதி

புத பகவான் துதி

புதனைப் பொன்னின் அரியனைப் பொன்மதி
ஸுதனைத் தாரை ஸுகித்தனை மைந்தனை
நதமு நீர்ச்செனை நங்கைநல் லூரினில்
நிதமும் ஏத்தி நினைந்தருச் சிப்பமால். (4)

பொன்னின் அரியன் - பொன்னைவிடக் கிடைத்தற்கருமை யானவன்; "பொன் அகப்பட்டாலும் புதன் அகப்படாது" என்பது பழமொழி. பொன் - அழகிய அல்லது பொன் னிறம் காட்டுகின்ற. மதி - சந்த்ரன். ஸுதன் - புதன்; சந்த்ர னுக்குத் தாரையிடத்துப் பிறந்த மகன். தாரை - குருவின் மனைவி. நதம் - நதி; மேற்குநோக்கி ஓடும் ஆறுமாம். மு(ந்) நீர் - கடல்; ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் ஆக மூவகை நீர் கலந்தது கடல். நிதமும் - தினமும். ஆல் - அசை.

அடாணா] **175. வியாழன்** [ஆதி

குரு பகவான் துதி

வியாழ னைப்பொன்னை வெங்குரு வைச்சுரர்
கியாதி பேசிக் கிளத்தும் குருவினைத்
தியாகம் செய்துநம் நங்கைநல் லூர்ச்சென்று
நியாய மாய்க்கழல் நித்தலும் ஏத்துவாம். (5)

*வியாழன், பொன், குரு இவை ப்ரஹஸ்பதி பகவானைக் குறிக்கும் பெயர்கள். வெம் - விரும்பத்தக்க. கியாதி - பெருமை. கிளத்தும் - சொல்லும். சுரர்-தேவர். சுரர்... குரு - தேவகுரு; வியாழ பகவான். நித்தலும்-தினந்தோறும்.*

கௌளை] **176. வெள்ளி** [ஆதி

சுக்ர பகவான் துதி

வெள்ளி யைச்சுக்கி ரப்பெயர் மேவிய
தெள்ளி யோனைச் சினஸுரர் தேசிக
வள்ளி யோனைஎம் பார்க்கவ வள்ளலை
நள்ளி நங்கைநல் லூரில் நவிலுவாம். (6)

*தெள்ளியோன் - தெளிந்த அறிவினன். சின அஸுரர் - கோபமுடைய அஸுரர்கள். தேசிக - குருவான. பார்க்கவ வள்ளல் - சுக்ராசாரியாரான வள்ளல். நள்ளி - விரும்பி; நட்புக் கொண்டு. நவிலுவாம் – புகழ்ந்து சொல்லுவாம்.*

யதுகுல காம்போதி] **177. சனி** [ஆதி

சநீச்வர பகவான் துதி

சனியெ னும்பெயர் தாங்குநற் கோளினைத்
தனிய னுய்க்காக் கைபிலிவர் சால்பனை
நனித மைந்தொளிர் நங்கைநல் லூரினில்
மனிதர் நன்முறை வாழ வணங்குவாம். (7)

*கோள் - க்ரஹம். தனியனாய் - ஒப்பற்றவனாய்; தான் மட்டுமாய். காக்கை - காகம். சால்பனை - தன்மையனை. நனி - நன்றாக. தழைந்து - நிறைந்து.*

யமுனா கல்யாணி] 178. ராகு [ஆதி

ராகு பகவான் துதி

இராகு வைப்பணி யின்னுட லேந்தியைச்
சுராச நத்துச் சுளகா ஸநன் றனை
நராதி பர்தொழும் நங்கைநல் லூர்தனில்
தராத லம்முயத் தாள்பணிந் தோதுவாம். (8)

*பணியின் உடல் - பாம்பின் சரீரம். ராகுவுக்கு மனிதத் தலை, பாம்பின் உடல். சுரா அசநத்து - அமிர்தத்தை உண வாக உட்கொள்ளும். சுளகு ஆஸநன் - முறத்தை யனைய இருப்பிடத்தோன். நராதிபர் - கல்வியாலும், செல்வத் தாலும் உயர்ந்த மக்கள். தராதலம் - உலகம். உய - உய்வு பெற.*

கேதாரம்] 179. கேது [ஆதி

கேது பகவான் துதி

கேது வைஐந்து கேடில் அகித்தலை
மீது கொள்கொடி யாஸந மேவியை
ஞாது ருத்துவ நங்கைநல் லூர்தனிற்
போது தூஉய்மலர்ப் பூஜனை செய்குவாம். (9)

கேடு இல் - கெடுதலில்லாத. அகி - பாம்பு. ஐந்து கேடில் அகித்தலை மீது கொள்: "அகி உரு ஐந்தலை யாளனே"- ஸூரியனார் கோயிற் கேது பகவான் அருட்புகழ். கொடி ஆஸநம் – உருவத்திற் கொடிபோல் அமைந்த ஆஸநம். ஞாதுருத்துவ - அறிவாளிகள் வாழும். போது - புஷ்பம்.

மத்யமாவதி] 180. நவக்ரஹ ஸ்துதி (பொது) [ஆதி

ஸூரி யன்கதிர்ச் சோமன்செவ் வாய்புதன்
ஆரி யன்குரு சுக்கிர னும்வெள்ளி
காரி ராகுகே துக்களைக் கைதொழீஇப்
பாரில் நங்கைநல் லூரிற் பரவுவாம். (10)

*கதிர் - (குளிர்ந்த) ஒளியையுடைய. சோமன்-சந்த்ரன். ஆரியன் - ச்ரேஷ்டன். காரி - சனி. கை தொழீஇ - கை தொழுது. கைதொழீஇப்...பரவுவாம் எனக் கூட்டுக.*

*(நவக்ரஹ ஸ்தோத்ரம் முற்றும்)*

*[நங்கைநல்லூர் அருட்புகழ்–2 முற்றும்]*

---

**"நைமிசாரண்ய மஹா மண்டபம்"**

*"நைமிசாரண்யம்" என்னும் புண்ய ஸ்தலம் பாரத வர்ஷத்தில் தக்ஷிண பீடபூமியில் ஆர்யாவர்த்தத்துக்கும் பிரம்மாவர்த்தத்துக்கும் மத்தியில் கங்கைக் கரையில் உள்ளது. மஹா பவித்ரமான இடம். கலியுகத்தின் சித்த வ்ருத்தி நுழையாத இடமாக வரம் பெற்றது.*

*ஸ்ரீ வைஷ்ணவர்கள் கொண்டாடும் நூற்றெட்டுத் திவ்யதேசங்களில் நைமிசாரண்யம் நூறுவதாகப் போற்றப் படுகிறது.*

*இவ்வளவு சிறப்பான திருநாமத்தை நங்கைநல்லூர்க் காலனி ஸ்ரீ வரஸித்தி விநாயகர் ஆலய மண்டபத்துக்குப் " புதுப் பெரியவாள் " சூட்டியிருப்பது பெரும் பாக்கியம்.*

---

உ
ஸ்ரீ வைஷ்ணவி துணை

# III-1. நங்கைநல்லூர் அர்த்த நாரீச்சரத்து அருட்புகழ்

ஸ்ரீ அர்த்த நாரீச்வரர் திருப்பதிகம்–1
(24.10.1971–இல் அருளிச் செயப் பெற்றது)

ராகம் : தோடி) (அறுசீரடி ஆசிரிய விருத்தம்) ( தாளம் : ஆதி

1. கங்கையாம் காரி கைக்குக் கணவனே ! கற்பின் மிக்க
மங்கையாம் பார்வ திக்கு மகிணனே ! வாணி மாதைத்
தங்கையாப் பேணும் ஸாம்ப ஸதாசிவ சம்புவே ! எம்
நங்கைநல் லூரில் அர்த்த நாரீசா ! நலஞ்செய் வாயே ! 1

*காரிகை–பெண்; மகிணன்–மகிழ்நன், கணவன்; வாணி–கலைமகள்; தங்கை–சிவபிரானின் ஸஹோதரி.*

2. பங்கையோர் பாவைக் கீந்தாய் ! பன்னிக்குச் சடையைத் தந்தாய்
செங்கையோர் சூலம் ஏந்தித் திரிந்திரந் துண்ணும் செய்கை
இங்கையோ ! என்ம நத்தை ஏதேதோ செய்யு மாலோ !
நங்கைநல் லூரில் அர்த்த நாரீசா ! நலஞ்செய் வாயே ! 2

*பன்னி–பத்நி–மனைவி; இரந்து–பிச்சை எடுத்து; ஆல்–அசைச்சொல்.*

3. அங்கையால் அலர்கள் தூவி அர்ச்சித்த மார்க்கண் டேயர்
வெங்கையார் பாசக் காள மேதியான் மறலி தன்னைச்
சங்கையே இன்றி வென்று சதம்பெற அருளிச் செய்தாய் !
நங்கைநல் லூரில் அர்த்த நாரீசா ! நலஞ்செய் வாயே ! 3

*அலர்–பூ; வெம்–கொடிய; காள மேதியான் மறலி–கரிய எருமை வாஹந எமன்; சங்கை–ஸந்தேஹம்; சதம்–நிலையான வாழ்நாள்.*

4. கொங்கையோ ரிரண்டும் பூவாக் குசேசய மொட்டோ என்ன
அங்கையாற் றறம் வளர்த்த அம்மைமார் பகத்தைப் பற்றி
லிங்கையா ! லீலைக் காக லேக! நீ காதல் செய்வாய் !
நங்கைநல் லூரில் அர்த்த நாரீசா ! நலஞ்செய் வாயே ! 4

*குசேசயம்—தாமரை, அங்கு ஐயாற்று எனப் பிரிக்க; ஐயாற்று—திருவையாற்றில்; அம்மை—தேவி பெயர், அறம் வளர்த்த நாயகி (தர்ம ஸம்வர்த்தநி); லிங்கையா—லிங்க உருவனே; லேகன்—கடவுள்.*

5. தங்கையே தமக்கெந் நாளும் தாழாத உதவி யென்பர்
தெங்கைநேர் நகில் உமைக்கோர் திருக்கையும் இடமும் தந்து
சங்கைஊ தரிக்கும் அற்றே தந்தநீ பிழைப்ப தெங்ஙன் ?
நங்கைநல் லூரில் அர்த்த நாரீசா ! நலஞ்செய் வாயே ! 5

*தெங்கு—தேங்காய்; நகில்—கொங்கை, சங்கை ஊது அரிக்கும் எனப் பிரிக்க; அரி—திருமால்; அற்றே—அவ்வாறே.*

6. லங்கையை ஆண்டான் தன்னை லாசகா ! முடியும் தோளும்
தொங்கையில் ஊச லாடத் தொட்டொரு விரலால் ஊன்றி
உங்கையோ ஐயோ என்றே உளறிவாய் அலறச் செய்தாய் !
நங்கைநல் லூரில் அர்த்த நாரீசா ! நலஞ்செய் வாயே ! 6

*லாசகா—சிவனே; தொங்கையில்—தொங்கும் போது; உங்கு—உன்னிடத்தில்.*

7. கங்கையோ கரையை யோதாம் கண்டிராக் கருணை வாரி !
எங்கையால் நன்னீர் வார்த்தே இறைநினக் கிழைப்போம் பூஜை
விங்கையாள் தாலி எம்தாய் விழைந்தபூ சனைபோற் கொள்ளாய் !
நங்கைநல் லூரில் அர்த்த நாரீசா ! நலஞ்செய் வாயே ! 7

*கங்கு—எல்லை; வாரி—கடல்; இறை—கடவுள்; லிங்கை ஆள் தாலி—இலிங்கத்தின் உருவம் பொறிக்கப் பெற்ற திருமாங்கல்யம்.*

8. பொங்கையா நநந்தெம் போதா ! புராரியே ! பூத நாதா !
கொங்கைா ழத்தைச் சேர சோழபாண் டியத்தைக் கோதில்
நங்கைநேர் துளுவைத் தொண்டை நடுவட நாட்டை ஆள்வாய் !
நங்கைநல் லூரில் அர்த்த நாரீசா ! நலஞ்செய் வாயே ! 8

*பொங்கு–அருள் பொங்கும்; ஐ ஆநநம்–ஐந்து முகங்கள்; போதன்–பேரறிவன், போதிப்பவன்; புராரி–சிவன்; பூதநாதன்–சிவ பூத கணங்களின் தலைவன்; கொங்கு–கொங்கு நாடு; ஈழம்–இலங்கை; கோதில்–குற்றமற்ற; 9 நாடுகளின் பெயர்கள் கூறப்பட்டுள்ளன இங்கு; துளு–துளுவ நாடு.*

9. கொங்கையார் கோல வேணிக் குருபர சிவனே ! மூன்று
நுங்கையார் பனந்துண் டம்போல் நுதற்கண்சேர் முக்கண் ணானே !
கங்கையேந் தியகா பாலீ ! ககநஊர் திகள்சூழ் சென்னை
நங்கைநல் லூரில் அர்த்த நாரீசா ! நலஞ்செய் வாயே ! 9

*கொங்கை–தனம்; கோலம்–உருவம்; வேணி–சடை; ககந ஊர்தி–ஆகாய விமாநம்.*

10. சிங்கைகாங் கேயம் செல்வச் சிராப்பள்ளி திருச்செங் கோடு
செங்கைசெங் கழுநீர்ப் பேட்டை திருவண்ணா மலையுள் ளானே !
பங்கையா ஸநன்மால் காணாப் பல்லவன் தாங்கல் பக்கல்
நங்கைநல் லூரில் அர்த்த நாரீசா ! நலஞ்செய் வாயே ! 10

*செங்கை–செங்கல்பட்டு; பங்கயம்–தாமரை, பங்கயாஸநன் என்பது எதுகை நயம் நோக்கிப் பங்கையாஸநன் ஆயிற்று; பங்கையாஸநன்–பிரமன்; பக்கல்–அருகில்.*

11. நங்கைபா கா ! நின் 'அர்த்த நாரி'யென் பிளைப்பேர் பெற்ற
சொங்கைகூப் பிடுசேய்த் தொண்டர் ஸச்சிதா நந்தத் தோன்றல்
தங்கையால் தாபித் தேத்தும் வைஷ்ணவி தாதன் எற்கும்
நங்கைநல் லூரில் அர்த்த நாரீசா ! நலஞ்செய் வாயே ! 11

*பிளை–பிள்ளை; பிளைப்பேர்–இயற்பெயர்; சொம் கை–தன்னுடைய கைகளை; நின்....வைஷ்ணவி–வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகளின் இளமைக் காலப் பெயர் அர்த்தநாரி என்பதாகும். வட திருமுல்லைவாயில் வைஷ்ணவியைத் தம் கைகளால் ஸ்பரிசித்து ஆவாஹநம் செய்து ஸ்தாபித்தவர் ஸச்சிதாநந்த ஸ்வாமிகள்; ஏத்தும்–வழிபடும்; வைஷ்ணவி தாதன்–வைஷ்ணவியின் தாஸன்; எற்கும்–எனக்கும்.*

(ஸ்ரீ அர்த்தத நாரீச்வரர் பதிகம்–1 முற்றும்)

# III-2. அர்த்த நாரீச்வரர் அருட்புகழ்க் கீர்த்தனைகள்

கரஹரப்ரியா) **12.** (ஆதி

**எடுப்பு**

அர்த்த நாரீச்வரா ! ஆதரித் தருள்வாய் !
ஆலயம் நங்கைநல் லூர்க்குளக் கரையிற்கொள் (அர்த்த)

**தொடுப்பு**

கர்த்தனே ! கண்ணுதற் கடவுளே ! காமனைமுன்
மர்த்தநம் செய்தசிவ மஹாதேவ மூர்த்தியே ! (அர்த்த)

**முடிப்பு**

வர்த்தமா நம்பவிஷ்யம் பூதமென வழங்கும்
வரும்நிகழ் இறந்த முக் காலமும் வகுத்தவா !
அர்த்தகா மம்தருமம் மோக்ஷம்நான் கவற்றையும்
அர்ச்சிக்கும் அடியவர்க் கப்பொழு தேஅருளும் (அர்த்த) 1

*மர்த்தநம்—அழித்தல்; அர்த்தம்—செல்வம்; மோக்ஷம்—ஜீவன் முக்தி.*

சங்கராபரணம்) **13.** (ஆதி

**பல்லவி**

நங்கை நல்லூர்அர்த்த நாரீச்வரா ! சிவ
நாயக னே ! வர தாயக னே ! திரு (நங்கை)

**அநுபல்லவி**

மங்கைபங் கா ! அரி மாயன்பங் கா ! முடியிற்
கங்கைபங் காகக்கொண்ட காளகண் டா ! சென்னை (நங்கை)

**சரணம்**

சங்கர னே ! பரம தாண்டவத் தாண்டவனே !
ஐங்கர னும்இளைய ஆறு முகனும்இரு
கிங்கரர் போலஉன்றன் திருமுன் கிளர்ந்துநிற்க
அங்கர ஹரவொலி அன்பர்செய் யப்பொலியும் (நங்கை) 2

*தாயகன்—கொடுப்பவன்; மாயன் பங்கா—சங்கர நாராயணா; காள கண்டன்—விஷமுண்ட சிவன்; கிங்கரர்—கைங்கர்யம் (பணிவிடை) செய்பவர்.*

புந்நாகவராளி) **14.** (ஆதி

**எடுப்பு**

பல்லவன் தாங்கல் செய்த பாக்கியமே ! உமை
பாகம் பிரியாப் போக போக்கியமே! (பல்லவன்)

**தொடுப்பு**

'வல்லவ னுக்குப்புல்லும் ஆயுதம்' எனும்வழக்கைச்
சொல்லவல் லார்நினைக்கச் சுட்டனை முப்புரம்நீ (பல்லவன்)

**முடிப்பு**

கொடிமாடச் செங்குன்றூர்ச் செங் கோட்டினிலே –திருக்
கோலம்அர்த்த நாரியாக் கொண்டனையே –தொழும்
அடியார்தம் நங்கைநல்லூர்க் குளக்கரையில் –யாரும்
அதிசயிக்க ஆலயம் கண்டனையே ! –சென்னைப் (பல்லவன்) 3

*போகம்–இன்பம் அநுபவித்தல்; போக்கியம்–இன்ப அநுபவத்தைத் தரும் பொருள்; முப்புரம்–திரிபுரம்; திருச்செங்கோட்டுக்குக் கொடி மாடச் செங்குன்றூர் என்பது தேவாரப் பெயர். அர்த்த நாரீச்வரர் திருவுருவம் இங்கு மட்டும் தான் பாஷாணக் கலவையில் உள்ளது.*

அடாணா) **15.** (ஆதி

**பல்லவி**

பாகம் பெண்ணுரு ஆனவனே ! சிவை
பார்வதி இடங்கொண்ட வானவனே ! ஒரு (பாகம்)

**அநுபல்லவி**

யோகம் என்பதே யுகளத்து வத்துதிக்கும்
போகம் எனும்பரி பூரணத் தைஉணர்த்தப் (பாகம்)

**சரணம்**

லிங்க வடிவில்இங்கே நங்கைநல் லூர்எனும்
லிபிப்பெயர் படைத்துள்ள பல்லவன் தாங்கலில்
தங்க இடமின்றியே மழைக்கும் தழல்வெயிற்கும்
தரிசநம் தந்தஅந்தக் காலம்செல்லத் தளிகொள்ளப் (பாகம்) 4

*யோகம்–இரு பொருள்கள் ஒன்று சேர்வது; யுகளத்துவம்–இரண்டாய் இருப்பது; லிபி–எழுத்து; தழல்–நெருப்பு; தளி–கோயில்.*

(நங்கைநல்லூர் அர்த்த நாரீச்வரர் அருட்புகழ்க் கீர்த்தனை முற்றும்)

# III-3. ஸ்ரீ அர்த்த நாரீச்வரர் 108 போற்றிக் குறுந்தாண்டகம் பதிகம்–2

(20.8.1984–இல் அருளியது)

## (அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

16. பூரணா! புநிதா! போற்றி! புயகனே! புலவா! போற்றி!
காரணா! கபாலீ! போற்றி! கண்ணுதற் கடவுள்! போற்றி!
வாரணா! போற்றி! போற்றி! வள்ளலே! போற்றி! போற்றி!
ஆரணா! நங்கை நல்லூர் அர்த்தநா ரீசா! போற்றி! 1

*புயகன்–பாம்பணிந்தோன்; வாரணா–கடலே, யானையே; ஆரணா–வேதம் சொன்னவனே, வேதங்களாற் சொல்லப் பெற்றவனே.*

17. காமனைக் காய்ந்தாய்! போற்றி! கயிலைமா மலையாய்! போற்றி
பூமனைக் கறுவீ! போற்றி! பூதநா தா! தாள் போற்றி!
ஸோமனைச் சூடீ! போற்றி! தோள்போற்றி! போற்றி! போற்றி!
ஆமனூர் நங்கை நல்லூர் அர்த்தநா ரீசா! போற்றி! 2

*காமன்–மன்மதன்; பூமன்–பிரமன்; பூதநாதன்–சிவ பூதகணங்களின் தலைவன்; ஆ–பசுக்கள்; மன்–மிகுதியா உள்ள.*

18. பூதிபூ சீசா! போற்றி! புரவலன் ஆவாய்! போற்றி!
ஜோதியே! சுடரே! போற்றி! சூழ்ஒளி விளக்கே! போற்றி!
வேதியா! போற்றி! போற்றி! வீரனே! போற்றி! போற்றி!
ஆதியே! நங்கை நல்லூர் அர்த்தநா ரீசா! போற்றி! 3

*பூதி–விபூதி; புரவலன்–காப்பவன்; வேதியன்–அந்தணன்.*

19. பாடுவாய் ஸாமம்; போற்றி! பரமனே! பரனே! போற்றி!
வீடுவாய்! பாவம்; போற்றி! வேள்பகை! விமலா! போற்றி!
நாடுவாய்! அன்பே போற்றி! நலம்போற்றி! போற்றி! போற்றி!
ஆடுவாய்! நங்கை நல்லூர் அர்த்தநா ரீசா! போற்றி! 4

*ஸாமம்–ஸாமவேதம்; வீடுவாய்–நீக்குவாய்; வேள் பகை–மன்மதனுக்குப் பகைவன்.*

**20.** நாகமார் பூணா! போற்றி! நல்லார்க்கு நல்லாய் போற்றி!
சோகநா சநனே! போற்றி! ஸோமஸுந் தரனே! போற்றி!
போகனே! போற்றி! போற்றி! யோகனே! போற்றி! போற்றி!
ஆகமா! நங்கை நல்லூர் அர்த்தநா ரீசா! போற்றி! 5

*ஸோம–சந்திரனைத் தரித்த; போகன்–இன்பமானவன்; யோகன்–யோகவடிவன், யோகம் செய்பவன்; ஆகமா–சிவாகமங்களிற் சொல்லப் பெற்றவனே.*

**21.** நீலமார் கண்டா ! போற்றி ! நீறணி நிமலா ! போற்றி !
பாலமார்க் கண்டற் காத்த பதம்போற்றி ! பனவா ! போற்றி !
சீலனே ! போற்றி ! போற்றி ! சிவசிவ ! போற்றி ! போற்றி !
ஆலனே ! நங்கை நல்லூர் அர்த்தநா ரீசா ! போற்றி ! 6

*பனவன்–அந்தணன்; ஆலன்–நீரானவன்; ஆலம்–நீர்; கல் ஆலின் கீழுள்ள தட்சிணாமூர்த்தி.*

**22.** செய்யனே ! சிவனே ! போற்றி ! ஜீவநா யகனே ! போற்றி !
மெய்யனே ! போற்றி ! பொய்யர் பொய்யனே ! மேலோய் ! போற்றி !
கையனார் தாதை ! போற்றி ! கவின்போற்றி ! போற்றி ! போற்றி !
ஐயனே ! நங்கை நல்லூர் அர்த்தநா ரீசா ! போற்றி ! 7

*செய்யன்–சிவந்தவன்; கையனார்–கையில் உதித்த சாஸ்தா; கவின்–அழகு; தாதை–தந்தை.*

**23.** முத்தனே ! முநிவா ! போற்றி ! முக்கண்மா மூர்த்தீ ! போற்றி !
பித்தனே ! பெருமான் ! போற்றி ! பேயுடன் ஆடீ ! போற்றி !
கத்தனே ! போற்றி ! போற்றி ! கவிஞனே ! போற்றி ! போற்றி !
அத்தனே ! நங்கை நல்லூர் அர்த்தநா ரீசா ! போற்றி ! 8

*முத்தன்–கட்டுப்பாடுகள் அற்றவன்; கத்தன்–கர்த்தன்–கடவுள்; கத்து–ஒளி, ஒலி; அத்தன்–தலைவன்.*

**24.** இன்பனே ! இறைவா ! போற்றி ! ஏழிசைக் கினியாய் ! போற்றி !
நன்பொனே ! போற்றி ! போற்றி ! நாரணற் கரியாய் ! போற்றி !

என்பொலா வினைதீர் ! போற்றி ! இணைத்தாள்கள்
போற்றி ! போற்றி !
அன்பனே ! நங்கை நல்லூர் அர்த்தநா ரீசா ! போற்றி ! 9

*பொலா—பொல்லா, கொடிய.*

25. துப்பனாய் ! மெய்யால், போற்றி ! தூயனே ! சூலா ! போற்றி !
செப்பவே அரியாய் ! போற்றி ! தேவர்தம் தேவே ! போற்றி !
முப்பழம் அனையாய் ! போற்றி ! முடிபோற்றி ! போற்றி ! போற்றி !
அப்பனே ! நங்கை நல்லூர் அர்த்தநா ரீசா போற்றி ! 10

*துப்பு—பவளம்; மெய்—உடல்; முப்பழம்—மா, பலா, வாழைப் பழங்கள்.*

26. கண்டனே ! கழல்கள் போற்றி ! கருணையின் உருவே ! போற்றி !
சண்டனைத் தண்டித் தாண்ட தாள்போற்றி ! போற்றி ! நீறார்
முண்டனே ! போற்றி ! போற்றி ! முதல்வனே ! போற்றி ! போற்றி !
அண்டனே ! நங்கை நல்லூர் அர்த்தநா ரீசா ! போற்றி ! 11

*கண்டன்—வீரன்; சண்டன்—காலன், ஓர் அஸுரன்; முண்டன்—நெற்றியன்; அண்டன்—உலகானவன்.*

27. பந்தனை ஆண்டாய் ! போற்றி ! பாவநா சகனே ! போற்றி !
சிந்தனை செயல்சொற் கெட்டாச் சீர்போற்றி ! போற்றி ! தேவ
வந்தனா ! போற்றி ! போற்றி ! மைந்தனே ! போற்றி ! போற்றி !
அந்தனே ! நங்கை நல்லூர் அர்த்தநா ரீசா ! போற்றி ! 12

*பந்தன்—திருஞாநஸம்பந்தர்; வந்தநா—வணங்கப் பெறுபவனே; அந்தன்—அழகானவன், முடிவானவன்.*

(அர்த்த நாரீச்வரர் 108 போற்றிப் பதிகம் முற்றும்)

# III-4. ஸ்ரீ நடராஜர் அருட்புகழ்ப் பதிகம்–3

(20.8.1984–இல் அருளப் பெற்றது)

## (அறுசீரடி ஆசிரிய விருத்தம்)

### 28.

ஏழிசையும் அறுசுவையும் ஐம்புலனும் நான்மறையும் மூன்றொர் எரியும்
வாழிஇரு சக்திசிவம் ஆம்உருவும் வடிவில்பர வஸ்த்து ஒருபேர்
ஊழிமுடி வின்பிறகும் உளதெனவும் ஆனபரன் உருவ ருவமாம்
ஆழிஅரி அயனறிய அரியநங்கை நலவூர்கொள் ஆடல் அரசே. 1

*மூன்று எரி–காருகபத்யம், ஆகவநீயம், தாட்சிணாக்நி; ஆழி–சக்ரம்.*

### 29.

அண்டமுடன் எண்டிசையும் மேலுலகு கீழுலகொ டாமு லகெலாம்
டுண்டுடென எங்கணும்ந டுங்கமலை எட்டுடன்உ ருண்டு புரள
டிண்டிமம்) முழங்கவும் வழங்கஇசை யாழ்முழவ எங்கும் ஒலியே
அண்டிடவும் ஆடல்செய்வன் நங்கைநல வூர்உறையும் ஆடல் அரசே.

*கீழ்உலகொடு ஆம் உலகு எலாம் எனப் பிரிக்க; ஆம்–ஆகிய; டிண்டிமம்–தம்பட்டம்.*

### 30.

காரிஎனும் வயிரவனை அறுமுகனை ஐந்துகைகொள் கணப திையையும்
வீரியன்ஒர் வீரனையும் வேழமொடு குதிரைஇவர் வீறு நடையும்
காரியையும் மைந்தரென மகிழ்வுசெயும் நெகிழ்வுடைய கடவுள் எருதூர்
ஆரியன்எம் ஐயன்உயர் நங்கைநல வூர்உறையும் ஆடல் அரசே. 3

*வீரன்–வீரபத்ரன்; வேழம்–யானை; காரி–ஐயனார்; எருது–ரிஷபம்.*

### 31.

நட்டமிடும் இட்டன்மிகு துட்டர்தமை வெட்டுவதில் நாட்டம் உடையான்
கட்டம்வரின் ஒட்டஅழி பட்டொழிய விட்டடியர் கவலை களைவான்
நெட்டரியும் மட்டலரை நட்டவனும் எட்டரிய நிலைகொள் உருவன்
அட்டதிசை எட்டுபுகழ் நங்கைநல வூர்உறையும் ஆடல் அரசே. 4

*கட்டம்–கஷ்டம்; ஒட்ட–முழுமையும்; நெட்டு அரி–நீண்டு உயர்ந்த திரி விக்ரமத் திருமால்; மட்டலரை–தேன் உள்ள தாமரையை; அலரை நட்டவன்–பிரமன்; அட்டதிசை–எட்டுத் திக்குகள்.*

## 32.

நாலுதிசை மேலுடையெ னாவுடைய நாயகனொர் நாத னுமிலான்
மேலுலகு விண்ணுலகு மண்ணுலகு கீழுலகுள் மேவும் ஒருவன்
மாலும்அய னும்தெரிய அரியஅடி முடிஉடைய மலையின் வடிவன்
ஆலு(ம்)மயில் பயில்பொழில்கொள் நங்கைநல வூர்உறையும் ஆடல்
அரசே. 5

*நாலு.....நாயகன்—திகம்பரனான சிவபிரான்; ஆலும்—அகவும்.*

## 33.

கொடிகொள்நெடு மாடமொடு கூடம்வெகு மாளிகைகள் கூட உடனே
நெடியபல கோயில்களும் வாயில்களும் நீர்நிலைகள் நிறைய அருகே
முடிவிலதொர் முகில்கள்தொட நிமிரும் எழில் முருகுபொழில் மூசும்
அழகா
அடியவர்கள் பரவுசெனை நங்கைநல வூர்உறையும் ஆடல் அரசே. 6

*நெடிய—கோபுரங்கள் உயர்ந்த; வாயில்கள்—கோயில்கள், வீடுகளின் வாயிற்புறங்கள்; முருகு—வாசனை; மூசும்—நெருங்கியிருக்கும்.*

## 34.

நாடிவரும் நாரணனும் மத்தள(ம்) முழக்கியிட நாலு முகவன்
தேடிஇரு நாலுகைகள் கோலிவெகு தாளமிடல் தேவி வினவாப்
பாடிஉடன் ஆடவொர் பதஞ்ஜலிவி யாக்ரபதர் பரவ விரவி
ஆடிவரு வான்செனையில் நங்கைநல வூர்உறையும் ஆடல் அரசே. 7

*கோலி—சேர்த்து; பரவ—துதிக்க.*

## 35.

யாழ்முழவ(ம்) மொந்தைகுட முழவுதடி பம்பையொ டிடக்கை பணவம்
வாழ்குழல்மண் மத்தளித டாரிபறை தண்ணுமைகைமத்த ளமெலாம்
ஏழ்வகை இசைக்கருவி நால்வகைய ஓசைதர ஆடும் இறைவன்
ஆழ்கடல்கள் சூழ்செனையில் நங்கைநல வூர்உறையும் ஆடல் அரசே.

*முழவம்....மத்தளம்—தோற்கருவிகளின் பெயர்கள்; யாழ்—வீணை; தண்ணுமை—உடுக்கை; ஏழ்வகை இசை—ஏழு ஸ்வரங்கள்; கருவி நால்வகைய—தோல், தொளை, நரம்பு, கழுத்து.*

## 36.

தமிழிசையொ டாரியமொ ழித்துதிகள் பாடிஅடி யார்த வசிகள்
வமிசவழி யாய்வழிப டக்களிகொள் பாதிஉமை மாதி மறையோன்
திமிதமிடு தூரிகைகள் பேரிகைகள் தாளமிடு சேணொ லினொ
அமிழ்தபதம் ஆடல்செயும் நங்கைநல வூர்உறையும் ஆடல் அரசே. 9

*ஆரியம்–ஸம்ஸ்க்ருதம்; பாதி உமை மாதி–அர்த்த நாரீசன்; திமிதம்–பேரொலி; தூரிகை–பெரிய முரசு; சேண்–வெகுதூரம்.*

## 37.

தத்திமிதி தித்திமிதி தட்டுடுடு டுட்டுடுடு தாகு தகுகு
தித்திதிமி தித்ததிகு செக்கண செகக்கண திகுத்தி திகுர்தி
தொத்திதுகு துத்ததகு டிட்டிடிமி டட்டடுடு துந்து பிமுழா
அத்தகஒ லிக்கநடம் நங்கைநல வூரில்இடும் ஆடல் அரசே. 10

*நடராஜப் பெருமானின் நடந காலத்தில் வாசிக்கப் பெறும் வாத்திய ஒலிகள் இப் பாடலில் தரப்பெற்றுள்ளன; அத்தக–அதுபோல.*

## 38.

தந்ததன திந்திமிள னுந்தவில்கள் மேளமொடு தாளம் இரைய
மந்தமுழ வம்பறைகள் மத்தளிமு ழக்கமிட வான வரெலாம்
அந்தரஸு துந்துபிமு ழங்கஅயன் மால்இவர்கள் 'ஆ'எ னவுமே
அந்தமுற ஆடல்செயும் நங்கைநல வூர்உறையும் ஆடல் அரசே. 11

*இரைய–ஒலிக்க; அந்தர துந்துபி–ஆகாச பேரிகை; அந்தம்–அழகு.*

## 39.

கர்த்தனாய் இப்புவிப டைத்தல்காத் திடல்மறைசெய் கருமம் அருளல்
நிர்த்தநா டகமுறையில் ஐந்தொழிலை ஆடலில் நிறுத்து நிலையான்
வர்த்தமா நீச்சரவன் ஆதிபுரி பேரூரில் மருவு திலையான்
அர்த்தநா ரீச்சுவரன் நங்கைநல வூர்உறையும் ஆடல் அரசே. 12

*நிர்த்த நாடகம்–நடநக் கூத்து; ஆடல் வல்லானின் தோற்றமே அவன் செய்யும் ஐந்து தொழில்களையும் குறிக்கின்றது 'தோற்றம் துடியதனில்' என்னும் வெண்பாவைப் பார்க்கவும்; வர்த்தமா நீச்சரவன்–திருப்புகலூர் வர்த்தமாநீச்சரத் தலத்துச் சிவபிரான்; ஆதி புரி–திருவொற்றியூர்.*

## III-5. ஸ்ரீ நடராஜர் ஒருபா ஒரு பான் மூன்று (அந்தாதித் தொடை)–4

(மேட்டூர் அணை முகாமில் 20.8.1984இல் அருளியது)

### (நேரிசை வெண்பா)

40. கூத்தரசே ! அர்த்தநா ரீச்சரமே கோயில்கொண்ட
வேத்தரசே ! நங்கைநல்லூர் மேயோனே ! – பூத்தரசே !
மட்டவிழ்க்கும் சோலை வளர்சென்னை மாநகரிற்
கட்டவிழா மேனியனே ! கா ! 1

*வேத்தரசு–வேந்தரசு–சக்ரவர்த்தி; அரசு–அரசமரம், பூவரச மரமுமாம்; மட்டு–தேன்; கட்டு–உடற்கட்டு (வலிமை).*

41. காடுகுளம் ஊர்கா களம்குடிஎன் றேமுடிபோர்
வீடுபல கோயிலா மேவிறையே ! –ஆடும்
அரசே !நீர் நங்கைநல்லூர் அர்த்தநா ரீசா !
பரசேன் பிறரைநிற்பிற் பட்டு. 2

*காடு, குளம்....மேவிறையே: ஆறு, ஈச்சரம், ஊர், கா, காடு, குடி, குளம், கோயில், துறை, பள்ளி, மலை, வாயில், வீரட்டானம் என்னும் சொற்களைப் பெயர் முடிவிலே கொண்ட பல சிவ ஸ்தலங்களை அப்பர் ஸ்வாமிகளின் அடைவுத் திருத்தாண்டகத்தின் 11 பாடல்களிலும் காணலாம். களம்–அஞ்சைக்களம், நெடுங்களம், வேட்களம்; முடி–முடிகின்ற; வீடு–தலம்; மேவு–கொண்ட; நீர்–நீர்க்குளம்; நிற்பிற்பட்டு–உன்னைப் புகழ்ந்ததற்குப் பிறகு; பரசேன்–புகழமாட்டேன்.*

42. பட்டும் பருத்தியும் பாங்காக்கட் டாமேதோல்
கட்டும்கொள் கைக்கடவுட் கண்ணுதலே ! –நட்ட
நடராஜ ! நங்கைநல் லூர்அர்த்த நாரீ !
திடராஜ யோகிஎனச் செய் ! 3

*தோல்–சிங்கம், புலி, மான், யானைத் தோல்கள்; கண்ணுதல்–நெற்றிக் கண்ணன்; நட்ட–விரும்பிய, நடமிடும்.*

43. செய்யத் தகாதவைகள் செய்தக்க தேர்ந்தறிந்தும்
உய்யச்செய் யாதனசெய் ஊத்தைஎனை – வையத்தே

வாழ்விக்கும் நங்கைநல்லூர் மாதொருபா கா! ஆடல்
சூழ்விக்கும் பாதம் துணை. 4

*செய்தக்க–செய்யத் தகுந்தவை; ஊத்தை–கசடன்; வையம்–உலகம்.*

**44.** துணைஎனக்கு நீயே ! துடிஇடையாள் பங்கா !
இணைஉனக்கிங் காரே ? இலரால்–பணைவளர்க்கும்
நங்கைநல்லூர் மேவும் நடராஜ னே !எனக்குன்
பங்கைநல்காய் ! மாலை பணித்து. 5

*துடி–உடுக்கை; பணை–அரசமரம், வயல், பெருமை; பங்கு–மனைவி எனும் தகுதி; மாலை–திருமண மாலை; பணித்து–அணிவித்து.*

**45.** பணிப்பூணா ! நங்கைநல்லூர்ப் பண்டார நாதா !
மணிப்பூணார் துண்ட மதிசேர்–கணிப்பூணார்
செஞ்ஜடையார் மங்கைபங்கா ! தீயாடீ ! பேயாடீ !
நஞ்சடையா எங்கொள்கண்டா ! நத்து. 6

*பணி–பாம்பு; பண்டாரம்–பொக்கிஷம்; துண்டமதி–பிறைச் சந்திரன்; கணி–வேங்கைமர மலர்; நத்து–விரும்பு.*

**46.** நத்துக் கரனும்ஒரு நான்முகனும் காணாத
பத்துக்கை எட்டுத்தோள் பர்ப்பதமே ! –முத்துப்பல்
வல்லிபங்கா ! ஆட்டரசே ! வாட்டமிலா நங்கைநல்லூர்
வில்லிபங்கா ! இங்காள் ! விரைந்து. 7

*நத்து–சங்கு; பத்துக் கை–ஐம்முகச் சிவனுக்குக் கைகள் பத்து; எட்டுத் தோள்–'எண்டோள் வீசிநின்றாடும் பிரான்' என்பது தேவாரம்; பர்ப்பதம்–மலை; வல்லி–உமை; வில்லி–ராமனாம் நாரணனை இடப் பாகத்தில் கொண்ட சங்கர நாராயணன்; ஆள்–ஆட்கொள்வாய்.*

**47.** விரைக்கொன்றை தும்பைஎருக் கூமத்தம் வேணிக்(கு)
அரைக்கொன்றைத் தோல்வீட் டணிந்தாய் ! –உரைக்கொன்ற
வேதம் விரித்தநங்கை நல்லூர் விளையாடும்
பாதம்தா ! பாவைபங்கா ! பார்த்து. 8

*விரை–வாசனை; வேணி–ஜடை; அரைக்கு–இடுப்புக்கு, ஒன்றை–ஒரு மான், ஒரு புலியை; வீட்டு–கொன்று; உரைக்கு–அர்த்தம் சொல்ல; ஒன்ற–பொருந்த.*

48. பார்த்தால் பசிதீர்க்கும் பார்வையைஎன் மேற்செலுத்தி
ஈர்த்தால் குறையோ ? இறையே !எம்–வார்த்தாளி
மந்திரிணி கைங்கரியம் வாழ்த்துமங்கை பங்காளா !
நந்திதொழ ஆடிறையே ! நல்கு ! 9

*வார்த்தாளி–வாராகியாம் தண்டிநி (ஸேநாதிபதி); மந்த்ரிணி–மந்திரி; தொழ–மத்தளம் வாசிக்க; நல்கு–அருட்பார்வை தந்தருள்.*

49. நல்கும் அபய வரதகர நாயகனே !
ஒல்கும் முயலகன்மேல் ஊர்தாளால்–பல்கும்
திரோபவத்தைச் செய்யும்நங்கை நல்லூர்ச் சிவனே !
ஸரோருஹத்தாள் சக்திபங்கா ! தா ! 10

*ஒல்கு–வலிமை தளர்ந்து; முயலகன்–முயலக நோயைக் குறிக்கும் மனித உருவம்; ஊர்–மிதிக்கின்ற; தாள்–பாதம்; பல்கும்–பெருகும்; திரோபவம்–மறைத்தல்; ஸரோருஹம்–தாமரை.*

50. தாமரைக்கை ஒன்றில் தழலும் தமருகமும்
தாமறைக்க ஏந்துதிருத் தாண்டவனே ! –தா(ம்)மரையை
எங்கொளித்தாய் ? நங்கைநலூர் மங்கைபங்கா !
எந்தைஉனை
இங்கொளித்தாய் ! என்னுள் இனிது. 11

*தாமரை கை ஒன்றில்–இடது மேற் கரத்தில் தாமரை உளது; தழல்–நெருப்பு; தமருகம்–உடுக்கை; மரை–மான்; அர்த்தநாரீச்வரக் கோலத்தில் மான், உடுக்கை, நெருப்பு இவை காணப்படாமையினால் அவை எங்கே ஒளிக்கப்பட்டன என்று கேட்கப்பட்டது இப்பாடலில்.*

51. இனியஅர்த்த நாரி இறைவ!நங்கை நல்லூர்ப்
புநித!நட ராஜ ! புராரீ ! –மனிதர்இனம்
புண்பட்டு நொந்துமநம் போகாமல் வேகாமல்
பண்பட்டு வாழஅருள் பண் ! 12

*புனிதன்–தூய்மையானவன்; புராரி–முப்புரப் பகைவன்.*

52. பண்ணும் பரதமும்நின் பாதத்தால் வாய்மொழியால்
நண்ணும் உயர்வைநட நாதனே ! –எண்ணு(ம்)நங்கை

நல்லூரில் வாழ்அர்த்த நாரீசா ! 'நான்' அஹந்தை
கொல்லூ'ரென் நெஞ்சிலிடுன் கூத்து. 13

*பண்–பாட்டு; பரதம்–நாட்டியம்; நான்....நெஞ்சில்–நான் என்னும் அகங்காரம் கொல்லப்பெற்ற (நீங்கிய) இடமான என் மனத்தில்.*

**கலி விருத்தம்**

53. நல்ல சென்னைசார் நங்கைநல் லூர் அருள்
வல்ல அர்த்தநா ரீச்வர வள்ளலைச்
சொல்ல வும்வலம் சூழவும் தாழவும்
செல்ல வல்லவர் செல்வம் பெறுவரே.

*(9–9–1984 நடராஜர் ப்ரதிஷ்டைக் கும்பாபிஷேகச் சிறப்பு மலரிலிருந்து)*

(அர்த்த நாரீச்சரத்து அருட்புகழ் முற்றும்)

# IV-1. நங்கைநல்லூர் – ஸ்ரீ உத்தர குருவாயூரப்பன் அருட்புகழ்

(26.3.1976இல் அருளப்பெற்றது)

**'ப'வர்க்கப் பாமாலைப் பதிகம்–1**

ஆரபி) கொச்சகக் கலிப்பா (கண்டசாபு (அ) ஆதி

54. பன்னுமறை நான்குடன்ஆ றங்கமுமே பதம்பரவும்
நின்னுடைய தொல்புகழை நேர்வதற்கா ரால்ஆகும் ?
மன்னுநங்கை நல்லூர்வாழ் வடகுருவா யூரப்பா!
என்னுடைய தீவினைதீர்த் தின்னேஆட் கொண்டருளே! 1

*பன்னும்–சொல்லும்; பதம்–திருவடி; தொல்–பழைமையான; நேர்வதற்கு–அறிந்து சொல்ல; மன்னு–நிலைபெற்ற; இன்னே–இப்பொழுதே.*

55. பாலகுமா ரன்விருத்தன் பாங்கிலெலாம் நீபுனையும்
கோலம்அநே கங்களுண்டு குருவாயூர்க் கோயிலிலே
சாலநங்கை நல்லூர்உத் தரகுருவா யூரப்பா!
காலமெலாம் நின்காட்சி காணும்கண் எனக்கருளே! 2

*பாங்கில்–(அலங்கார) முறையில்; புனையும்–தோற்றம் கொள்ளும்; சால–மிகவும், நன்றாக சால உண்டு எனக் கூட்டிப் பொருள் கொள்க.*

56. பின்னழகும் முன்னழகும் பேரழகும் சீரழகும்
துன்னழகுத் தெய்வதமாய்த் தோன்றிஒளிர் ஸுந்தரனே!
மன்னநங்கை நல்லூர்வாழ் வடகுருவா யூரப்பா!
தென்னகமாம் கேரளம்போற் சென்னைவந்தாய்!
தேர்ந்தருளே! 3

*துன்னு—பொருந்திய; மன்ன—நிலைபெற; மன்னனே—அரசனே எனினுமாம்.*

57. பீதாம்ப ரம்புனையும் பெருமானாம் திருமாலே!
மாதாம்ப ரத்தருகில் வளர்மீநம் பாக்கம்அணித்
தோ'தாம்பல் வண்ணா!உத் தரகுருவா யூரப்பா!
பாதாம்பு யம்தா!'என் நங்கைநல்லூர்ப் பகவானே! 4

*அணித்து—அருகில். ஓது ஆம்பல் எனப் பிரிக்க; ஆம்பல்—நீலோற்பல மலர்; பாதாம்புயம்—திருவடித் தாமரை.*

58. புண்டரிகம் போல்ஒளிரும் பூவாய்கொப் பூழ்முகம்கண்
தண்டலைநேர் தாள்இணைசெந் தண்ணிதயம் தாங்கரியே!
கொண்டல்நங்கை நல்லூரிற் குருவாயூர் வடக்குறைவாய்!
வண்டமிழில் நின்புகழே வழுத்தஎற்கு வரம்அருளே! 5

*புண்டரிகம்—தாமரை; புண்டரிகம்....கண்—திருமாலின் வாய், தொப்புள், முகம், கண் ஆகியவை செந்நிறம் உடையன; தண்டலை—(குளிர்ந்த) சோலை; நேர்—ஒப்பான; செந் தாள் இணை—சிவந்த இரு திருவடிகள்; தண்—குளிர்ந்த; அரி—விஷ்ணு; கொண்டல்—மேகம் சூழ்ந்த; வழுத்த—துதிக்க; எற்கு—எனக்கு.*

59. பூந்தண்மா மலிநகரிற் பூவிருந்த வல்லியொடும்
போந்தருளித் திருக்கச்சி நம்பிபணி போற்றினையே!
வாய்ந்தநங்கை நல்லூர்வாழ் வடகுருவா யூரப்பா!
ஆய்ந்தடியேன் செய்பணியும் அன்பாக ஏற்றருளே! 6

*பூம்—அழகிய; தண்—குளிர்ச்சி தரும்; மா—மாமரங்கள்; மலி—நிறைந்த; நகர்—காஞ்சிபுரம்; பூ இருந்தவல்லி—இலக்குமி; போந்து—வந்து; திருக்கச்சி நம்பி—காஞ்சி வரதராஜப் பெருமானுக்குச் சாமரம் வீசிய பெரியார், கஜேந்திர தாஸர் என்ற இயற்பெயரும், காஞ்சி பூரணர் என்ற*

*மற்றொரு பெயரும் உடையவர்.*

60. பெருமாளே! மலையாளப் பில்வமங்க ளப்பெரியர்
திருமாலே எனத்தொழுத திருவநந்த புரம்திகழ்வாய்!
தருநங்கை நல்லூர்உத் தரகுருவா யூரப்பா!
வெருவுங்கை தவம்உடையேன் வினையேனை ஏன்றருளே! 7

*தரு–மரங்கள் நிறைந்த; வெருவும்–சான்றோர் பயப்படும்; கைதவம்–கபடம், பொய்.*

61. பேயாழ்வார் பூதத்தாழ் வார்பொய்கைப் பெயர் ஆழ்வார்
தாயாழ்வார் பூங்கோதை தந்தைபெரி யாழ்வார்தாழ்
மாயா!வாழ் நங்கைநல்லூர் வடகுருவா யூரப்பா!
நாயாவாழ் வேன்என்னை நன்னெறிக்கே உய்த்தருளே! 8

*தாய்–பெண்ணான; ஆழ்வார் பூங்கோதை–ஆண்டாள்; மாயா–மாயவனே; நாயா–நாயாக, ஒரு நிலையான புத்தி இல்லாதவனாக.*

62. பொன்முதலாம் ஒன்பதுகோள் பூந்தளிஓர் புறம்கொள்ள
முன்முதலாம் மூத்தோனும் ஐயனும்மொய் பகவதியும்
தென்முதலா வடக்கீறாத் திகழநங்கை நல்லூர்சேர்
என்முதல்உத் தரகுருவா யூரப்பா! எனக்கருளே! 9

*பொன்–வியாழ பகவான்; கோள்–கிரஹம்; தளி–கோயில்; மூத்தோன்–கணபதி; ஐயன்–சாஸ்தா; மொய்–அருகில் இருக்கும்; தென் முதலா வடக்கு ஈறா–தென்கிழக்கிலிருந்து வடதிசை முடிவு வரை.*

63. போதொருகை பொன்னாழி புரிசங்கம் கதைபொலிகை
யாதொருமூன் றுடையவனோ இன்னபிரான் ஒருநீயே!
மாதொருவா நங்கைநல்லூர் வடகுருவா யூரப்பா!
ஓதொருவாய் போதாதுன் உயர்வுரைக்கப் பலஅருளே! 10

*போது–(தாமரைப்) பூ; ஆழி–சங்கு; புரி–வளைந்த கொடுகள் உள்ள; பொலி–விளங்கும்; யாது–எந்த; ஒரு மூன்று–(1+3) நான்கு; மாது–இலக்குமி; ஒருவா–(மார்பை விட்டு) நீங்காத; ஓது–துதித்துப் பாடும்; பல–பல வாய்களை.*

## IV-2. உத்தர குருவாயூரப்பன் பதிகம்–2
### (*தசாவதாரத் திரு அங்கமாலைப் பதிகம்)

ஸுரடி) கலி வ்ருத்தம் (கண்டஏகம்

64. அத்தியில் மீனாகி அன்றொரு ஸோமுகனைக்
குத்திமுன் குமைசெய்த கோமகன் நான்மறைகள்
மெத்தவும் மீட்டருளி வேதனுக் குரைசெய்தான்
உத்தர குருவாயூர் அப்பனுக் குழை!சிரமே! 1

*அத்தி–அப்தி–கடல்; ஸோமுகன்–ஸோமுகாஸுரன்; குமை செய்த–கொன்ற; வேதன்–பிரமன்*

65. அத்தனை, ஆமைஎன ஆகிஅப் பாற்கடலைப்
புத்தர்கள் கடைஅந்நாள் பொன்மலை மேருஎனும்
மத்தடிக் கிழியாமே தாங்கிய மாயவனை
உத்தர குருவாயூர் அப்பனை உண்!கண்ணே! 2

*புத்தர்–தேவர்; மத்தடிக்கு–மத்து, பூமியான கீழ் ஆதாரத்திலிருந்து; இழியாமே–நகர்ந்து விழாமல்; உண்–உண்பாயாக, காண்பாயாக.*

66. அத்தகு மோழல்என இரணிய அக்கனைவென்(று)
உத்தமி பூதேவி உடலுயிர் மீட்டபிரான்
சித்தஜன் போதயனைச் செய்தவன் நங்கைநல்லூர்
உத்தர குருவாயூர் அப்பனை உணர்!செவியே! 3

*மோழல்–பன்றி; இரணிய அக்கன்–இரண்யாட்சன்; சித்தஜன்–மன்மதன்; போது–தாமரை மலர்; செய்தவன்–படைத்தவன்.*

67. கத்தனை, ஆளரியாய் இரணிய கசிபுவைமுன்(பு)
அத்தனை இலகுவிலே அழிவுசெய் கோளரியை

---

* திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய "திரு அங்க மாலை"யையும், குலசேகராழ்வாரின் "முகுந்தமாலை"யில் உள்ள "ஜிஹ்வே கீர்த்தய கேசவம்" என்னும் சுலோகத்தையும் போன்றது இப் பதிகம்.
சென்னைத் திருமயிலை மாதவப் பெருமாளுக்கும் இதுபோல் "தசாவதார அருட்புகழ்" உள்ளது.

முத்தனை நங்கைநல்லூர் முதல்வனைமுகுந்தனைஎம்
உத்தர குருவாயூர் அப்பனை உயிர்!மூக்கே! 4

*கத்தனை–கடவுளை; ஆள்அரி–நரசிங்கம்; அத்தனை–அவ்வளவு; இலகு–ஸுலபமாக; கோளரி–சிங்கம்; முத்தன்–முத்துப்போன்றவன், எல்லாக் கட்டுகளினின்றும் விடுபட்டவன் எனினுமாம்; முகுந்தன்–திருமால்; உயிர்–மூச்சை இழுத்து விடும் போதும் நினைப்பாயாக.*

68. இத்தனை வாமநனாய் மாவலி இடம்சென்று
கைத்தலம் நீர்வார்க்க மூவடிக் காசிநிகேட்(டு)
ஒத்தடி இரண்டால்மூ வுலகளந் தான்சென்னை
உத்தர குருவாயூர் அப்பனை உரை!வாயே! 5

*மாவலி–மகாபலிச் சக்ரவர்த்தி; காசிநி–பூமி; உரை–கீர்த்தநம் செய்வாயாக.*

69. வித்தக மெய்ப்பரசு ராமன்எ னாமேவி
க்ஷத்திரி யப்பூண்டைக் களைதரக் கங்கணம்பூண்(டு)
உத்தம ராகவன்பால் உறுதவப் பயன்உய்த்தான்
உத்தர குருவாயூர் அப்பனை உணர்!நெஞ்சே! 6

*வித்தக–அறிஞனான; களைதர–அழிக்க; கங்கணம்–சபதம்; உய்த்தான்–அர்ப்பணித்தான்; உணர்–உணர்வாயாக.*

70. புத்திர காமேஷ்ட்டி புரிதய ரதமன்னன்
புத்திர ராமன்எனாப் போந்தொர்இ ராவணனைப்
பைத்தவெஞ் சிலைவளைத்துப் பார்மிசை வீழ்த்தியவன்
உத்தர குருவாயூர் அப்பனை உறு!தோளே! 7

*புத்திர காம இஷ்டி–மகப்பேறு வேண்டிச் செய்யும் யாகம்; போந்து–உலகில் பிறந்து வந்து; பைத்த–பசுமையான–புதிய (ஸீதையை மணக்க வளைத்த வில் பழைய சிவனுடைய வில்); உறு–சுமப்பாய்.*

71. யுத்தம திழைகலப்பை உடையகைப் பலராமன்
ஒத்தவ தாரஞ்செய் துடன்பிறப் பாம்கண்ணன்
மெய்த்தமு னாய்விளையாட் டயர்எது குலமீளி
உத்தர குருவாயூர் அப்பனுக் குழை!கையே! 8

*பலராமனின் ஆயுதம் கலப்பை. ஒத்து—ஒரே பிறவியில்; த(ம்)முன்—தமையன், அண்ணன்; எது குலம்—எது மன்னனடைய குலம்; மீளி—வீரன்; உழை—தொண்டு செய்து உழைப்பாயாக.*

72. மைத்தமெய்க் கோபாலன், தேவகி வஸுதேவர்
தத்தம துளமகிழ்செந் தாமரைக் கண்ணன்என
முத்தமிழ்க் குழல்ஊதிக் கஞ்சனை மொய்ம்படர்த்தான்
உத்தர குருவாயூர் அப்பனுக் குழல்!காலே! 9

*மைத்த—கருமை நிறங்கொண்ட; முத்தமிழ்க்குழல்—கண்ணன் ஊதிய புல்லாங்குழல் இசையில் இயல், இசை, நாடகமாம் மூன்று தமிழ்களும் காணப்பட்டன; கஞ்சன்—கம்ஸன்; மொய்ம்பு—வலிமை; அடர்த்தான்—அழித்தான்.*

73. சுத்தமெய்க் கற்கிஎனாத் தோன்றிஇக் கலியுகத்தில்
பத்தரைப் பாலித்துப் பாவிகள் தமைப்படுத்தும்
எத்தனை நங்கைநல்லூர் என்னமு தின்னரசை
உத்தர குருவாயூர் அப்பன்என் றுய்!மெய்யே! 10

*கற்கி—கல்கி, குதிரைமேல் வீரனாக வரும் அவதாரம்; பத்தர்—அடியார்கள்; பாலித்து—காப்பாற்றி; படுத்தும்—வருத்தும்; எத்தனை—ஸாமர்த்திய சாலியை; உய்—கடைத் தேறுவாயாக.*

(அருட்புகழ்ப் பதிகம் 2 முற்றும்)

## உத்தர குருவாயூரப்பன் அருட்புகழ்க் கீர்த்தனை

கரஹரப்ரியா) 74. (ஆதி

**பல்லவி**

வடகுரு வாயூ ரப்பா! மஹாபில்வ
மங்களர் தவம்செய்த நங்கைநல் லூர்தனில் (வட)

**அநுபல்லவி**

கடவுளர் யாவரும் கண்டுனைக் கைதொழுவார்
இடம்உள வரை'கண்ணா' என்றுகா லில்விழுவார் (வட)

**சரணம்**

சேரல தேசம்என்னும் கேரள தேசம்விட்டுச்
சிசுபாலன் தனைக்கொன்ற பசுபாலன் ஆகிவந்து
நீரலர் தூவித்தொண்டர் நித்தம்வ ணங்கச்சென்னை
நெடுநகர் மீநம்பாக்கம் அடுத்துநீ குடிகொண்டாய்! (வட)

(உத்தர குருவாயூரப்பன் அருட்புகழ் முற்றும்)

## V. *பவழந்தாங்கல் **குகாநந்தாலய அருட்புகழ்

(அருட்கவி ஸேதுராமன் ஆக இருந்தபோது
6.2.1967இல் ஆசு கவியாக அருளப்பெற்றது)

### V-1. விநாயகர் துதி

வஸந்தா) **75.** பாவங்கள் அகன்றிட (ஆதி

தனனந் தாந்தத் தனதான
விதுமன் பாண்டிப் பதிஆனாய்–
விகிர்தன் சேந்தற் கண!கோள்ஒன்;
பதும்அன் பார்ந்துற் றினிதாமா–
பதிதம் தான்செற் றருள்வாயே;
முதுமன் போன்றிப் புவிஆளும்–
முருகன் பூண்டிப் பிளையாரே;

---

*நங்கைநல்லூரின் வடக்குப் பகுதி இது, பல்லவன்தாங்கல் என்ற பெயர் பழவந்தாங்கல் என்றாகிப் பின்மருவிப் பவழந்தாங்கல் என்று வழங்கப் பெறுகின்றது.

** குகாநந்தாலயம்:– காலஞ்சென்ற அருட்கவி ஸ்ரீ(நடிமிண்டி) ந. சுப்ரமண்ய ஐயரவர்கள் வாழ்ந்த இல்லம். அவரால் ஸ்தாபிக்கப் பெற்ற குஹாநந்த மண்டலியின் இருப்பிடம். இதன் கதவு எண் 1/46, 100, 125 என்றெல்லாம் இருந்து தற்போது 42/125, கல்லூரிச் சாலை, பழவந்தாங்கல், சென்னை–114 என ஆகி உள்ளது.

1965 முதல் 1969 வரை அருட்கவியார் பெற்றோருடன் இந்த வீட்டில் குடியிருந்த போது அவரால் பாடப்பெற்றவை இப் பாடல்கள்.

பதுமன் சார்ங்கிக்(கு) உறவோனே—
பவழந் தாங்கற் பெருமாளே.

*விது—சந்திர வம்சத்து; மன் பாண்டி—மன்னர்களாம் பாண்டிய மன்னர்கள் ஆண்ட; பதி—மதுரையம்பதியின்; ஆனாய்—ஆனைமுகக் கடவுளே; விகிர்தன்—செய்யப்படாதவன்; சேந்தற்கு—செந்நிறமுடைய முருகனுக்கு, அண—அண்ணனே; இனிது ஆமா—(தீங்கு செய்யாத) இனியவர்களாக இருக்கும்படி; பதிதம்—தூய்மை இன்மையை; செற்று—அழித்து (சுத்தமானவர்களாக ஆக்கி); முது—மிகப் பழமையான; மன்—அரசன்; முருகன் பூண்டிப் பி(ள்)ளையார்—முருகன் பூண்டி—ஸுந்தரர் தேவாரம் பெற்ற தலம்.*

*"சேரமான் பெருமான் அளித்த பொருள்களைத் திருமுருகன் பூண்டிக் காட்டில் திருடர்கள் மூலம் பறித்தது சிவபிரானே என்பதைச் சுந்தரருக்குக் கூவிக்காட்டிய "கூப்பிடு பிள்ளையார்'' திருமுருகன் பூண்டிக் கணபதியார் தான்.*

*பதுமன்—தாமரை ஆஸநத்துப் பிரமன்; சார்ங்கி—சாரங்கம் என்னும் வில்லைக் கொண்ட விஷ்ணு; உறவோன்—உறவினன். பிரமனின் அம்சமான தருமதத்த முநிவரின் பெண்களாம் ஸித்தி, புத்தி இருவரையும் மணந்ததால் விநாயகர் பிரமனுக்கு மாப்பிள்ளையானார். திருமாலுக்குத் தங்கையான உமையின் மகனானதால் மாலுக்கு மருமகன் என்னும் உறவானார் (குஹாநந்த மண்டலியாருக்குச் சொந்தமான ஒரு ஸுந்தர விநாயகர் கோயில் வடக்குப் பார்த்துக் கல்லூரிச் சாலையில் இருப்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது).*

## V-2. முருகவேள் துதி

மணிரங்கு) **76.** ப்ரணவ த்யாந முறை அறிய (ஆதி

அகாரம் சாருமற் றுமகாரம்—
அதோதும் த்யாநசித் தம்இலேன்யான்;
ப்ரகாரம் தான்உளத் துணர்காலப்—
ப்ரமாணம் சேருட் புரிவாயோ;
சிகாலங் காரசித் ரமயூரா—
சிதாநந் தேச!மெய்த் தணிகேசா;

குகா!கந் தா!குருத் துவராஜா—
*குகாநந் தாலயப் பெருமாளே.

*அகாரம்—அ; உ—உகாரம்; மகாரம்—ம; அ+உ+ம=ஓம்; அது ஓதும்—அந்த ப்ரணவத்தை ஜெபிக்கும். ப்ரகாரம்—வழிமுறை; காலப்ரமாணம்—கால அளவுக்கான அத்தாட்சி; சிகாலங்கார—ஒரு கொண்டையைத் தலையில் கொண்டுள்ள; சித்ர—அழகிய.*

*மயூரா—மயில்வாஹநனே; சிதாநந்தேச—குஹாநந்த நாதரின் சீடராகிச் சிதாநந்த நாதர் என்னும் தீட்சா நாமங் கொண்ட சுப்ரமண்ய ஐயருக்கு இறைவனே; தணிகேசா—ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் செய்யுள் புனையும் பாண்டித்யம் உள்ள இவர் தமிழில் 'திருத்தணிகைப் ப்ரபந்தத் திரட்டு' என்னும் பெயரில் கவிகளைத் தணிகேசனுக்குச் சமர்ப்பித்துள்ளார்.*

*"அருணகிரி நாதர் பெருந்தேவபாணி" என்னும் நூலையும் எழுதியுள்ளார். ஸ்ரீ ஸாதுராம் ஸவாமிகளின் குருவான வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகளை நன்றாக உடன்பழகி அறிந்தவர் ஸ்ரீ சிதாநந்த நாதர். 'சாக்தம்' என்றும் 'அம்பிகை உபாஸனை' என்றும் சொல்லப் பெற்ற ஸ்ரீவித்யா பூஜை, அநுஸந்தாந முறைக்கு அத்வைத ஸித்தாந்த பரமான விளக்கங்களைத் தந்தவர். பலநூல்களை எழுதியவர். இராமாயண, மஹாபாரத, கந்தபுராணப் பாத்திரங்கட்குத் தத்துவங்கள் சொன்னவர். ஸுப்ரம்மண்ய தத்வம் என்ற நூல் சிறப்புடையது. ஸ்ரீ வித்யா பூஜைப் பத்ததியை உருவாக்கியவர்.*

---

**இங்குப் பழைய கட்டிடம் இடிக்கப்பட்டுப் புதிய இல்லம் தற்போது எழுப்பப் பெற்றுள்ளது. குகாநந்தாலயம் இதுதான்.*

# V-3. ஐயப்பன் அருட்புகழ் பதிகம் (அந்தாதித் தொடை)

(நங்கைநல்லூர்க் குஹாநந்த மண்டலி (பழைய எண் 125, புதிய எண் 42, கல்லூரிச் சாலை)யில் 6–2–1967–இல் பாடப்பெற்றது)

நாதநாமக்ரியை) (கலிவிருத்தம்) (ஆதி

77. ஐயன் ஆரியன் ஆரியன் காவுறை
மெய்யன் மேனி கரியவன் விண்டுவின்
கையன் காரி கருங்கடல் வண்ணத்தெம்
துய்யன் காந்த மலைச்சுடர்ச் சோதியே. 1

*விண்டு–விஷ்ணு; கையன்–கையிற் பிறந்தவன்; துய்யன்–தூய்மையன்.*

78. சோதி ஐயப்பன் சுந்தர மேனியன்
ஆதி ஐயப்பன் அச்சன்கோ யிற்கிறை
பூதி ஐயப்பன் போற்றுவார் புந்தியுள்
நீதி ஐயப்பன் நின்மல மூர்த்தியே. 2

*பூதி–செல்வம்; புந்தி–உள்ளம்.*

79. மூர்த்தி யாய்இந்த மூவுல கத்தைஆண்(டு)
ஆர்த்தி தீர அடியார்க் கருள்பவன்
கார்த்தி கேயனின் சோதரன் காமங்கள்
பூர்த்தி செய்தருள் புண்ணிய நாதனே. 3

*ஆர்த்தி–ஆசை; சோதரன்–உடன் பிறந்தான்.*

80. நாதன் பூரணை புட்கலை நங்கைமார்க்(கு)
ஓத நல்ல ஒருத்தன் உருத்திரன்
கோத றும்குளத் துப்புழை கோயில்கொள்
வேத போத விளக்கொளி காண்மினே. 4

*கோது அறும்–குற்றம் அற்ற.*

81. மின்னு மெல்லிடை வேயுறு தோளிபேர்
பன்னு மாபதி பாற்கடற் றுஞ்சியை
முன்னு றப்புணர்ந் தீன்ற முதற்பிளை
என்னு டைக்குல தெய்வதம் என்பனே. 5

*வேய்—மூங்கில்; பன்னு—கூறப்பெறும்; பாற்கடல்துஞ்சி—பாற்கடலில் தூங்கும் திருமால்.*

82. என்ப ணிந்த இறையவன் இம்பர்வான்
முன்ப ணிந்த முதற்பொருள் முக்கணன்
பொன்ப ணிந்தபொன் னம்பலத் தாடல்போல்
அன்ப ணிந்தஎம் ஐயப்பன் ஆடுமே. 6

*இம்பர்—இவ்வுலகத்தவர்; பொன்—இலக்குமி.*

83. ஆடு மாடுக ளார்வன ரட்சகன்
சேடு கொண்ட திரியம் பகபுரத்(து)
ஈடு காண்பார் இலாத ஒருவன்எம்
பீடு தாங்கும் பிளைமணி கண்டனே. 7

*ஆர்—பொருந்திய; வனரட்சகன்—முல்லைநிலக் கடவுள், திருமால்; சேடு—அழகு, இளமை, பெருமை; ஈடு—ஒப்பு; பீடு—பெருமை; பிளை—பிள்ளை.*

84. கண்ட கண்கள் கணக்குள் ளடங்குமோ?
விண்ட வாய்கள் விளம்ப முடியுமோ
தண்ட லைச்சப ரிச்சிலை யாம்தலத்(து)
அண்டர் போற்றிடும் ஐயனை அண்மியே. 8

*விண்ட—சொன்ன; விளம்ப—கூற; தண்டலை—சோலை.*

85. அண்மி வம்மின்எம் ஐயப்பன் மாரொடும்
எண்மி குந்த இருமுடிக் கட்டொடும்
தண்மி டைந்த சபரி மலைக்கிறை
விண்மி டைந்த விளக்கெனத் தோன்றுமே. 9

*அண்மி—நெருங்கி; தண்—குளிர்ச்சி; மிடைந்த—பொருந்திய.*

86. தோன்று தைம்மக ரச்சுயஞ் ஜோதியை
ஈன்று காத்த இருவர் உருவனைச்
சான்று சொல்லிக் கலியுகந் தான்உயும்
ஏன்று கொண்மின் எனதுரை பாருளீர்! 10

*ஈன்று காத்த இருவர்—அரனும் அரியும்; ஈன்று—பெற்று; ஏன்று—ஏற்று.*

87. பாரு ளீர்! வந்து பந்தளப் பாலனைச்
சேரு வீர்! ஒரு மண்டலஞ் செய்தவம்
சாரு வீர்! அழு தைபம்பைத் தண்புனல்
ஆரு வீர்! நும்மை ஆட்கொளும் ஐயனே. 11

*ஆருவீர்—நீராடுதலைச் செய்வீர்.*

(பாடுகையில் தாயார், மாப்பிள்ளை ஸ்ரீ வேணுகோபாலய்யர்,
தங்கை சௌ.பத்மாவதி மூவராலும் எழுதப்பட்டன லை பாடல்கள்)
(ஐயப்பன் அருட்புகழ் பதிகம் முற்றும்)

## VI-1. நங்கைநல்லூர் – ஷண்முக பவநம்*
## ஸ்ரீ ஷண்முக ஸுப்ரம்மண்ய ஸ்வாமி அருட்புகழ்

(19.10.1976–இல் அருளப்பெற்றது)

**சந்தப் பாக்கள்**

நாட்டை) **88.** ஸ்ரீ கணபதி துதி (சதுரச்ர மட்யம்
(கடைக்கண் பார்வை பெற)

*தானத் தன்னன தனன தனதனத் தந்ததான*

'ஞாநக் கண்மணி!' எனமுன் அரன்அழைத் தன்பினோடே—
நாகப் பெண்மணி அருகில் உறஇடைச் சந்தியூடே;
தாநத் துண்மணி எனவும் உனைஇருத் தின்பினாலே—
சாலப் பின்மந(ம்) மகிழ்செய் தனை!எனைக் கண்கள்பாராய்;

---

* 'ஷண்முக பவநம்' என்னும் இல்லம், நங்கைநல்லூர்த் தில்லை கங்கா நகரில் 17ஆம் தெருவில் எண்6/21இல் உள்ளது. இந்த வீட்டின் சொந்தக்காரர் S.G. கணபதி ஐயர்; சிறந்த செந்தில் ஆண்டவன் பக்தர்; வல்லீ தேவஸேநா ஸமேத ஷண்முக ஸுப்ரம்மண்யப் பெருமானை ஐம்பொன் விக்ரக உருவில் முறைப்படி ஆராதித்து வந்தவர். மீனம்பாக்கம் விமாந நிலையத்தில் 'கம்யூனிகேஷன் ஆபீஸராகப்' பணியாற்றியவர். 24.1.1977இல் தை மாத சுக்லபக்ஷ ஷஷ்டியில் மறைந்தவர், எனக்கு ஆப்த நண்பர். அவருடைய நான்கு பிள்ளைகளுள் இருவர் இரட்டையர். அவர்களுள் ஒருவரான

காநத் தண்மழை பொழியும் அடியர்வர்க் கங்களூடே—
காணக் கண்ணுனை அயுதம் அயுதம்எற் கிங்குவேணும்;
மோநப் பண்மொழி மவுநி முநிவரர்க் கஞ்சலீயும்—
மூரிச் "சண்முக பவந" கணபதித் தம்பிரானே.

## VI-2. ஸ்ரீ ஷண்முக ஸுப்ரம்மண்யர் துதி

ஷண்முகப்ரியா) **89.** நன்றி மறவாமை (சதுரச்ர மட்யம்

*தந்த தய்யாத் தன்னன தனனத் தந்த தான*

குன்றில் எல்லாக் கண்மிசை யினும்நிற் கின்றகோவே—
கொஞ்சு சொல்லாற் கன்னல்கொல் எனநற் பண்கள்பாடும்;
வென்றி விள்வாக் கின்னிசை பயிலத் தந்துஞாந—
விந்தை செய்வாய்க் கென்னைகொல்! பதிலுக் கன்புகூர்வேன்?
மன்றில் உள்ளார்க் குண்மறை மொழியைச் சென்றுபோதி—
மைந்த! கொல்லாக் கண்ணுதல் முநிமெய்த் தம்பியே!செய்;
நன்றி கொல்சூர்க் கின்னலை விளைவிக் குங்கைவேலா—
நங்கை நல்லூர்ச் சண்முக பவநத் தம்பிரானே. 1

*நாகப் பெண்மணி—மலை மகளாம் உமை; தாநம்—ஸ்தாநம்—இடம்; ஒள்—ஒளியுடைய; மணி—ரத்நம்; இருத்த இன்பு—உட்காரவைத்ததால் வந்த மகிழ்ச்சி; வர்க்கம்—கூட்டம்; அயுதம்—பேரெண் அயுதம்; அயுதம்—கோடி கோடி, ஆயிரம் ஆயிரம் என்பது போன்ற சொல்லாட்சி; மூரி—இளமை; கல்—மலை; கன்னல்—கருப்பஞ் சாறு; வென்றி—வெற்றி; விள்—சொல்லும் இன்னல்—துன்பம்; போதி—கூறிய; கண்ணுதல்—நெற்றிக் கண்ணராம்—கணபதி.*

---

ஸ்ரீ G. சிவஸ்வாமி அவர்கள் உள்ளூர் உத்தர குருவாயூரப்பன் கோயிலில் பூஜகராகப் பணியாற்றி வருகிறார். தந்தைக்குப் பின் பூஜையைத் தொடர்ந்து நடத்தியவர். தனி வீடாயிருந்த 'ஷண்முக பவநம்' தற்போது அடுக்குமாடிக் கட்டிடமாக மாற்றப்பட்டுள்ளது! இந்த 20 அருட்புகழ்ப் பாடல்களும் அந்த ஆறுமுகனுக்கு உரியவை.

5.3.1995இல் இந்த விக்ரஹங்கள், ஸ்வாமியின் தங்க நகைகள், வெள்ளி ரிஷப வாஹநம், ரொக்கப் பணம் முதலியன களவாடப் பட்டுவிட்டன. இதுவரை கிடைக்கவில்லை.

பைரவி) **90.** பாட அருள்பெற (ஷ

*தானத் தன்னன தனன தன்னன* *தந்ததான*

வேடப் பெண்மயில் விபுதர் விண்மதி தங்கள்கோனே—
வேலைக் கண்ணலை தரள(ம்)மின்னவை செந்தில்வாழ்வே;
பாடப் பண்ணொடு ஜதிகள் பன்னுவல் சந்தமாகப்—
பாலச் சண்முக! பயில இன்னருள் தந்துகாவாய்;
கூடற் கண்ணொரு செழிய மன்னவன் என்றுபோய்முன்—
கோலத் தண்மொழி தமிழை மன்னவை குன்றராஜ;
ஊடற் புன்னகை அரியொ டுண்மைசெய் நங்கையார்நல்—
லூரிற் சண்முக பவந(ம்) மன்னிய தம்பிரானே. 2

*பெண்மயில்—வள்ளி; விபுதர்—தேவர்; விண் மதி—விண்ணுலகச் சந்திரனாம் தெய்வயானை.*

கல்யாணி) **91.** யமபயம் தீர்க்க மயில் மேல் வருக! (மிச்ரரூபகம்

*தந்தன தாத்த தனதனன தனதனன*
*தந்தன தாத்த தனதனன தனதனன*
*தந்தன தாத்த தனதனன தனதனன* *தனதான*

அம்புலி ஏற்ற ஜடைஉடைய அடிகள்வல
நன்செவி கேட்க மறையின்உரை பறைகுரவ!
அஞ்சலி காட்டு கரஅடியர் திரமொடுய அருள்வோனே—
அங்கண னாய்ச்செல் பரிமயிலின் முதுகின்மிசை
நின்றுல கோட்டி வருமுருக! திருமருக!
அஞ்சலெ னாச்சொல் உதவிஎனை அணையஎதிர் வருவாய்நீ;
வெம்புலி போற்கண் எரிகதுவி விரவுபுகை
சிந்திட மாட்டில் எருமைமிசை அருமைபட
மின்கதை தூக்கி ஒருமைரிபு கருமையொடு வருவானேல்—
வென்றிட ஓட்டி அவனைஅதி விரைவில்விசை
வண்கயி றாட்டில் முதுகுவிரி அயில்முடுகி
வெந்பட வீட்டி இனிஉனமெய் அடியர்தமை மருவாமே;
பைம்புலின் வாய்க்கு வரிமுலையை உணவும்அருள்
சங்கர னார்க்கு மதுரைநகர் அதுலைஉமை
பங்கர னார்க்(கு)ஓர் குதலைபகர் மதலைஎன வருவோனே—

வண்டமிழ் கேட்டு மழிசையர்பின் அரவமளி
யும்கொடு போய்ப்பின் அவர்அடிமை கணிகணர்சொல்
வந்தபின் நாட்டுள் வருமுகிலின் மருமகன்என் மருமானே;
நம்புலி வாய்த்த கொடியன்எதிர் கொடியர்தமை
வென்றிகொள் ஆத்தி மலர்கொள்தொடை அரசுமறை
நம்பியை நோக்கி அருமறைகொள் திருமுறைகள் முதல்ஏழும்–
நன்குய வேட்டு வெளியில்வர வழிவகைசெய்
கென்றுபி ரார்த்தி பொழுதருள்செய் கணபதிபின்!
நங்கைந லூர்ச்சண் முகபவநம் மருவுநரர் பெருமாளே. 3

*அம்புலி–சந்திரன்; வல–வலது; உரை–பொருள்; பறை–தெரிவிக்கும்; குரவ–குருவே; திரம்–நிலையாக; அம்–அழகிய; கண்ணனாய்–பன்னிருகண்ணனாக, தோகையில் காணப்படும் பல(மயிற்) கண்களையுடைய; பரி–வாஹநம்; உலகு ஓட்டி–உலகை வலம்வந்து; எரி–நெருப்பு; கதுவி–வெளிப்பட்டு; மின்–மின்னல்போல் ஒளிவிடும்; ஒருமை–மன ஒருமைப்பாடுடைய; ரிபு–பகைவனாம் யமன்; கருமை யொடு–கரிய நிறத்துடன்; கயிறு ஆட்டில்–பாசக் கயிறு வீசும் போது; அயில்முடுகி–வேல் எறிந்து; வெந்–முதுகு; வீட்டி–அழித்து; உன–உன்னுடைய; மருவாமே–அடையாமல்; புலின் வாய்க்கு–புல்வாய்க்கு; மானுக்கு வரி–புலி; பைம் புலின்....சங்கரனார்–புலியின் மடியில் மான் பாலுண்ணச் செய்த சிவபிரான் (திருவிளையாடல்களுள் ஒன்று); குதலை–குழந்தைப் பேச்சு (ப்ரணவத்தின் பொருளை உரைத்தமை); மதலை–குழந்தை; மழிசையர்–திருமழிசை யாழ்வார்; அரவமளி–பாம்புப் படுக்கை; கணிக(ண்)ணர்–திருமழிசையாழ்வாரின் சீடர்; நாட்டுள்–காஞ்சீபுர நகருள்; முகில்–விஷ்ணு; மருமகன்–மாப்பிள்ளை; மருமான்–தங்கை மகன்; புலி....கொடியன்–சோழர்; எதிர்கொடியர்–எதிர்த்த துஷ்டர்கள்; கொடியர்–வில் கொடி, மீன் கொடியரான சேர, பாண்டிய மன்னவர்கள்; வென்றி–வெற்றி; ஆத்திமலர்....தொடை அரசு–அத்தி மாலையை அணிந்துகொள்ளும் ராஜராஜ சோழன்; நம்பி–நம்பியாண்டார் நம்பி; பிரார்த்தி–வேண்டிக்கொண்ட; கணபதி–திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார்; பின்–தம்பி; நரர்–மனிதர்.*

வராளி) **92.** வினாவுரை (த்ரிபுடை

*தந்ததனா தனதன தனதன*
*தந்ததனா தனதன தனதன*
*தந்ததனா தனதன தனதன* *தனதான*

அஞ்சுமுகே சுரர்தம பழையதொர்
துண்டம்அதோ முகமொடும் அறுமுகன்
அன்றுடன்ஆ யினர்அவர் அறுநுதல் விழியூடும்—
ஐந்துடன்ஓர் பொறிவெளி வரஅவை
விண்டலமேல் உலவிட வளிஅனல்
அம்புனலார் வரநதி தனில்விட அவைஓடி;
மிஞ்சுமணார் சரவண மடுவினில்
அம்புயம்ஆ றினில்அறு மகவென
விஞ்சருளால் அருவமொ டருவுரு வடிவாகி—
மின்கொடிநேர் உடுமகள் அறுவரும்
முன்தநமே தரஅமு துணல்செய்து
மென்சிவையாள் அணைதர ஒருவடி வுறல்ஏதோ;
'அஞ்சுமுகா! கணபதி! குணநிதி!'
என்பெயரால் உலகினர் அழைமதி!
அஞ்சுமுகா! அரிபரி எனஇவர் அமலா!'என்—
றன்படியார் விளிதர அளிதர
முந்தும்விநா யகர்பினர் வருகுஹ!
அம்பிகைமார் ஸுரர்பிடி நரர்கொடி இடைவாணா;
நஞ்சுகொலாம் அவுணரை உயிர்கொள
என்றிசைவேல் கருமயில் வசரம்என்
நன்கொடியோ டொருபது படைபிற உடையோனே—
நங்கைநலூர் மருவு'ஷண் முகபவ
நம்'தனில்வாழ் பனிருகை அறுமுக!
நம்பெருமாள் மருமக! மறையவர் பெருமாளே. 4

*தம—தன்னுடைய; துண்டம்—முகம்; அதோ—கீழ்நோக்கிய; அறு—ஆறு; நுதல்—நெற்றி; பொறி—நெருப்புப் பொறி; வளி—காற்று; புனல்—நீர்; வரநதி—கங்கை; மண் ஆர்—மண் நிறைந்த, சரவண நாணற் புல் சூழ்ந்த பொய்கை; அம்புயம்—தாமரை; மின்—மின்னல்; உடு—நக்ஷத்ரம்;*

*தநமே—முலைப் பால் (முதற் பன்னிரண்டு வரிகளில் ஆறுமுகன் தோற்றம் கூறப்பட்டுள்ளது); அஞ்சுமுகா—அம்ஸுமுகா; மதி-யானையே; அஞ்சு—ஐந்து; முகா—முகத்தனே; அரி—சிங்கம், பஞ்சமுக கணபதிக்கு வாஹநம் சிங்கம்; பரி—வாகனம்; இவர்—ஏறி அமரும்; விளிதர—அழைக்க; அளி தர—கருணையைத் தருவதற்கு; முந்தும்—முந்திக் கொள்ளும்; ஸுரர் பிடி—தேவயானை; நரர் கொடி—மனிதர்களாம் குறவர் குலக் கொடிபோல்வாளாம் வள்ளி; வாணா—வாழ்; நனே—கணவனே; வசரம்—கோழி; ஒருபது—பத்து.*

ஸாவேரி) **93.** திருக்காட்சி பெற (ஜம்பை

*தானான தானான தனதனன தனதனன*
*தானான தானான தனதனன தனதனன*
*தானான தானான தனதனன தனதனன தந்ததான*

சூராரி யாய்ஆறு படைஅகமில் உவரிஅலை
வாயான ஈராமில் வளர்இளைய ஷடுமுகவ!
சூலாய்த பாணீசர் குறிகளில்ஐ வடிவில்உற அன்றுபூஜை—
சோராமல் மாறாமல் வழிபடுதல் புரிமுருக!
வேலாய்த! காலாய்த! கொடிமயில! பரிமயில!
சோகாரி பாமாலை புனைபனிரு புயம்உடைய ஸுந்தரேசா;
நீராள மாய்நீடு விழிபெருகு புனல்ஒழுக
ஆராத நீள்காதல் அகமநதில் மிகவளர
நேராக வேகாண நினைஎனதுள் வெளிஎவணும் நின்றுதோண—
நீவேக மாய்வாகை அயில்துவஜம் இருவகையொ
டேதோகை ஒகார மயில்முதுகில் நிறம்ஒர்செமை
நீல்மாதர் தாய்மார்கள் இருவர்இரு புறமில்உற வந்துகாவாய்;
சீராள னார்தாதை பெயர்சிறியர் பெரும் அடியர்
பால்ஏகி ஈசேயை நறியகறி வடிவில்இது
தேசாதி ஆசாரம் எனவயிர வனின்உருவு கொண்டுபோய்முன்—
தேவாதி தேவான கஜமுகவர் கஜமுகனை
மாய்காடு சேராமுன் வினவியவர் கநஸிலையர்
சேயான சேயான ஸிவசரவ ணபவ!ஸுகரர் சிங்கவேளே;

ஓராறு பூவான திருமுகமும் மருநிறமும்
ஈறாறு நீள்தோளும் இலகுகர தலமும்உள
ஒகார ஆகார! உலவுகடல் நிலவுசெனை நங்கையாள்நல்—
லூர்ராஜ ராஜேசு வரிநகரில் உமைதளியின்
மேலான பாலார்'ஷண் முகபவநம்' எனும்இலமில்
ஒவாமல் ஆராதி அடியவரை அடிமைகொளு தம்பிரானே. 5

*சூரஅரி—சூரபத்மனின் பகைவன்; படைஅகம்—படைவீடு; உவரி—கடல்; அலைவாய்—செந்தூர்; ஈர் ஆம்—இரண்டாவதான; ஷடு—ஆறு; குறி—லிங்கம்; ஐ—ஐந்து (பூதங்கள்); சோராமல்—சோர்வடைந்து விட்டு விடாமல்; காலாய்த—காலையே ஆயுதமாக உடைய கோழிக் கொடியனே; கொடிமயில—மயிற் கொடியும் ஏந்துபவனே; சோகாரி—கடப்பமலர் மாலை; நீராளம்—நீர்த்தன்மை; வெளி எவணும்—வெளிப்புறத்தில் எல்லா இடங்களிலும்; வாகை—வெற்றி; துவஜம் இருவகை—கோழி, மயிற் கொடிகள்; ஒகார—ஓங்கார, செமை—செம்மை—சிவப்பு; மாதர் இருவர்—வள்ளி, தேவஸேனை; சீராளனார்—சிறுத்தொண்ட நாயனாரின் பிள்ளை; பெயர் சிறியர்—சிறுத்தொண்டர்; ஈ சேயை—மகனைத் தருவாயாக; வயிரவன்—பைராகி; கஜமுகர்—கணபதி; கஜமுகவனை—கஜகாஸுரனை; மாய் காடு—கொன்ற திருச்செங்காட்டங்குடி; சேராவினவி—சேர்ந்து கேட்டு; பால்ஏகி முன் வினவியவர் எனக் காட்டுக; கந சிலையர்—பொன் மலையான மேருவை வில்லாகக் கொண்டவர் சிவபிரான்; சேயான—மகனான சேயான—செம்மைநிறம் படைத்தவரான முருகபிரான்; சிங்கவேளே—ஸிம்மம் போன்றவனே; ஆகார—வடிவனே; தளி—கோயில்; இலம்—இல்லம்—வீடு; ஒவாமல்—இடைவிடாமல்; ஆராதி—வழிபடுகின்ற; உமைதளியின்....பவநம்—ராஜ ராஜேச்வரி கோயிலின் மேற்குப் புறத்தில் ஷண்முக பவநம் உள்ளது என்ற குறிப்பு.*

தந்யாஸி) **94.** வினாவுரை (ஜம்பை

| | |
|---|---|
| தானதன தனதனன | தந்ததான |
| நாருருவம் அதர்அதென | வந்ததான— |
| நாரதரை முகில்களிடை | சென்றுலாவும்; |
| ஒருருவ மஹதியரை | அன்றுகாநத்— |
| தோதுகுறு முநிவிறல்கொள் | கின்றதேதோ ? |

காருருவர் அவுணர்தமை வென்றவேலா—
காமஜித! கலைஅழக! நங்கையார்நல்;
லூருறு'ஷண் முகபவநம்' நின்றநாதா—
ஒகைஅறு முகவ!ஸுரர் தம்பிரானே. 6

*நார்—அன்பு; அதர்—வழி; நாரதரை....ஏதோ—இசைப் போட்டியில் அகத்தியர் நாரதரை வென்ற ஸூட்சுமம் எதுவோ; கார் உருவர்—கறுத்த உருவத்தினர்; அவுணர்—அஸுரர்; காமஜித—காமத்தை (மன்மதனை) வென்றவனே; ஒகை—மகிழ்ச்சி.*

பிலஹரி) **95. VI-3** ஆறுமுகன் 12 ஆயுத அருட்புகழ்ப் பதிகம் (ஷ
(பதினான்கு சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

வச்சிரம் எனும்குலிசம் ஏந்தும்வல மேற்கைய!
மயில்வாஹ நத்தை மறைவாய்
வைத்துவே லும்கோழி வெல்கொடியும் இனிதுதனி
மார்புறச் சாத்தக் கொடும்
முச்சிரம தார்சூல பாணியனை வேணியனை
முக்கணனை ஐந்து லிங்க
மூர்த்தத்தில் வைத்தருச் சனைசெய்த செந்திநகர்
மூலா லயத்தாந மில்
மெய்ச்சிரம்ஒ ரேஒன்று நாற்கரங் கொள்கோல
மேனியையும் இவண் மறைத்து
மிகுகந்த ஷஷ்டிக்கு வெளியிற் புறப்பட்டு
வீதிவலம் செயும் உத்ஸவ
நச்சிலைஎ னாநங்கை நல்லூரில் ராஜேசி
நகர்விசிய(ம்) மேற்பால தா
நண்ணுஷண் முகபவநம் அண்ணுபன் னிருகைய!
நளிந(ம்)மதி ஆறுமுகனே! 1

*வச்சிரம்....சாத்த: ஷண்முக பவநத்து ஆறுமுகன் சிலையில் மயில்வாஹநம் இல்லை. வழக்கம் போல் வலது கையில் வேலும் இல்லை. வேலும் கோழிக் கொடியும் முருகனது மார்பிலே சாத்தப் பெற்றுள்ளன என்பது கூறப்பெற்றுள்ளது; முச்சிரமதார்—மூன்று (கூர்மையான) முடியையுடைய; சூலபாணி—சிவன்; வேணி—நதி, ஜடை; மூலாயத்தானமில்...நச்சிலை எனா:- செந்தூர் மூலஸ்தாநத்தில் உள்ள*

*முருகர்க்கு ஒரு முகமும் நான்கு கைகளும் மட்டுமே உள்ளன; அவை மறைக்கப்பட்டு ஸ்கந்தஷஷ்டி நாள்களில் புறப்பாடு கொண்டருளும் பன்னிருகைச் சண்முக நாதனே 12 பாடல்களிலும் குறிக்கப்பெற்றுள்ளன என்பது நோக்கத்தக்கது; ந சிலை—நச்சிலை; மேற் பாலதா—மேற்குப் பக்கத்தில்; விசியம்—கோயில்; நண்ணு—அடைந்தமைந்துள்ள; அண்ணு—குடிகொண்டுள்ள; நளிநமதி—தாமரையையும் சந்திரனையும் போன்ற.*

சாருகேசி) 96. (ஷெ

பாணம்எனும் அம்பேந்து பாணியைக் கீழ்வலது
பாற்கொண்ட பரதெய்வமே!
பன்மணிகள் ஒளிரும்ஆ பரண!சர ணாகதிப்
பக்தருக் கருள் சரணனே!
காணவரும் அடியரைக் கண்டுகொண் டின்னருள்
களித்துச்செய் ஆறா நநம்
கதிரவன் போல்விளங் கிப்ரஸந் நமதாதல்
கண்டுதொண் டரும்உனை விடார்
ஆணழக! பெண்ணழகி மார்இருவர் தெய்வானை
அருள்வள்ளி இவர்இடம் வலம்
அருமைஉறு முறைமையை அடைந்தமைந் தமரநடு
அரசுவீற் றுளஆண்ட வா!
நாணமங் கையர்நங்கை நல்லூரில் ராஜேசி
நகர்விசிய(ம்) மேற்பால தா
நன்னுஷண் முகபவநம் அண்ணுபன் னிருகைய!
நளிந(ம்)மதி ஆறு முகனே! 2

*பாணி—கை; பால்—பக்கம்; பன் மணி—பல ரத்திநங்கள்; நடு—இரு பெண்டிருக்கு நடுவில்; அரசு—மன்னன் போல்; நாண மங்கையர்—அச்சம், மடம், (பேதைமை) நாணம், பயிர்ப்பு (மனங்கொள்ளாமை) நான்கும் உள்ள பெண்டிர்.*

காபி) 97. (ஜம்பை

கட்கம்எனும் வாள்ஏந்து கார்போன்ற கொடைவலக்
கையனே! உடை செய்யனே!

கண்கள்ஒரு மூவாறு கொண்டஷண் முகநாத!
கநபவள நிற மெய்யனே!
ஷட்களமில் மகரகண் டிகைமுத்து மணிமாலை
தண்கடம் பிந்தீ வரம்
தழைவெட்சி செங்காந்தள் கூதாள மலர்மாலை
தமிழ்மாலை யாவும் அணிவோய்!
மட்கல்இல் லாப்பவழம் வைடூர்ய(ம்) மாணிக்கம்
வைரம்இழை மகுடம் உடையோய்!
மன்னுபீ தாம்பர(ம்)மெய் மின்னும்இடை யோய்!வாஸ(ம்)
மருவுகள பம்பூசு வோய்!
நட்கல்நிறை தெருநங்கை நல்லூரில் ராஜேசி
நகர்விசிய(ம்) மேற்பா லதா
நண்ணுஷண் முகபவநம் அண்ணுபன் னிருகைய!
நளிந(ம்)மதி ஆறுமுகனே! 3

*கார்–மேகம்; உடை செய்யன்–சிவந்த ஆடையன்; கந–பெருமையுள்ள; ஷட்களம்–ஆறு எழுத்துகள்; தண்–குளிர்ந்த; கடம்பு–கடப்ப மலர்; இந்தீவரம்–நீலோற்பல மலர்; தழை–இலை, அழகொடு விளங்கும் எனினுமாம்; வெட்சி, காந்தள், கூதாளம்–மலர் வகைகள்; மட்கல் இல்–மக்கிப் போதல் இல்லாத; இழை–பொருத்தப் பெற்ற; மன்னு–விளங்கும்; மெய்–உடம்பு; வாஸம்–வாஸனை; களபம்–சந்தநம்; நட்கல்–நட்புக் கொள்ளல், விரும்புதல்.*

சாமா) **98.** (ஷ

சக்கரம் வலத்தேந்து கரவனே! உரவனே!
தரமான நிலை திரவனே!
சம்பரா ரியர்கோடி கோடிஒரு தட்டில்நின்
றனைமற்றொர் தட்டில் இட்டால்
மிக்கஅழ கால்உனது பக்கமே கீழாகு(ம்)
மேலாகும் இன்னொர் தட்டு
மெய்யாக எடைபோட அப்படிஒர் துலைஇங்கு
மேதினியில் மீதில் உளதேல்
அக்கணம் கீழ்மேல தானநிலை சொல்லளவில்
ஆயின்அத் தாழ்ந்த துலையே

அதிவலிது மேலான துலைதோற்ற தழகிலே
ஆரறிய மாட்டார் இதை ?
நக்கன்உறை திருநங்கை நல்லூரில் ராஜேசி
நகர்விசிய(ம்) மேற்பா லதா
நண்ணுஷண் முகபவநம் அண்ணுபன் னிருகைய!
நளிந(ம்)மதி ஆறு முகனே! 4

*கரவன்—கையன்; உரவன்—மார்பினன்; தரம்—உயர்வு; திரவன்—ஸ்திரவன்—நிலையானவன்; சம்பராரி—சம்பராஸுரனின் பகைவனாம் மன்மதன்; நின்றனை—உன்னை; துலை—தராசு; மேதினி—உலகம்; நக்கன்—சிவபிரானாம் அர்த்த நாரீச்வரர்.*

பியாகடை) 99. (ஒ

நாகபா சத்தைவல நலகரத் தேகொண்ட
நாரா யணன்மருக னே!
நான்முகனை முன்குட்டி நன்குசிறை அடைவித்து
நால்வேத முதல்அர்த்த மே
ஏகமூ லாட்சரப் பொருளே தெரிந்துகொள
இச்சையு(ம்) முயற்சியும் இலா
இதுகார ணமதாக நற்புத்தி பெறவிட்ட
எந்தைநீ சிட்டி செய்தாய்!
த்யாகரா ஜப்ரபுவும்வருமோ உனக்கத்
திருக்குடிலை யின்பொருள் எனத்
தேஸிகனு மாய்அவர் திருச்செவியில் முறையின்உப
தேசம்செய் சிவகுரவ னே!
நாகமார் தருநங்கை நல்லூரில் ராஜேசி
நகர்விசிய(ம்) மேற்பால தா
நண்ணுஷண் முகபவநம் அண்ணுபன் னிருகைய!
நளிந(ம்)மதி ஆறு முகனே! 5

*மூவாட்சர ஏக—அ,உ,ம என்னும் மூன்று எழுத்துக்களின் கூட்டான ஓம் என்னும் ப்ரணவத்தின்; சிட்டி செய்தாய்—பிரமனைப் போல் உலகைப் படைத்தாய்; குடிலை—ப்ரணவம்; தேசிகன்—குருநாதன்; முறை—சிஷ்ய குரு பாவத்தில்; குரவன்—குரு; நாகமார் தரு—புன்னை மரம்.*

பெஹாக்) **100.** (ஜ்ஷி

அபயம்அது தரும்அங்கை அஞ்சற்கை வலம்உடைய
அறுமுகவ னாய்நின்ற தோர்
அழகிய திருக்கோலம் அலைவாய் எனும்செந்தில்
அம்பதியில் நீ தென் முகத்
துபயநாச் சியர்பாங்கர் ஷண்முகவி லாஸத்தில்
உள்ளதை நினைப்பிக்கு மால்
ஓதநீர்க் கடல்அங்கும் உண்டுசென் னைக்கடலின்
ஓதம்இங்கும் கண்ட தால்
ஜபயக்ஞ தபயக்ஞ தாநதர்ம யக்ஞங்கள்
தகநிகழ் ஜயந்தி புரமே
தானோஇ தன்றிவட செந்தில்இது வோஎனத்
தகுவகையில் வீற்றுள் ளனை!
நபயஜநம் வாழ்நங்கை நல்லூரில் ராஜேசி
நகர்விசிய(ம்) மேற்பா லதா
நண்ணுஷண் முகபவநம் அண்ணுபன் னிருகைய!
நளிந(ம்)மதி ஆறு முகனே! 6

*உபய நாச்சிமார்–இரு பெண்டிர்; பாங்கர்–பக்கத்தில்; ஷண்முக விலாஸம்–செந்தூரில் உத்ஸவ ஆறு முகன் ஸந்நிதாநம்; ஓதம்–குளிர் காற்று; யக்ஞம்–யாகம், வேள்வி; தக–நன்றாக; ஜயந்தி புரம்–திருச்செந்தூர் ('வடபழநி' சென்னையில் உள்ளதுபோல்) இதுவும் வட செந்திலோ என்னப் பெற்றது; ந பய–பயம் இல்லாத; ஜநம்–மக்கள்.*

கர்நாடக தேவகாந்தாரி) **101.** (ஜம்பை

சத்திவேல் ஏந்தும்இட மேற்கைகொளும் ஆநந்த
ஷண்முக! குஹா! சரவணா!
'சாண்பிள்ளை ஆனாலும் ஆண்பிள்ளை' என்பர்அத்
தகுதிநிஜ மாய்உலகி லே
ப்ரத்தியே கத்தில்உனை ஒருவனைத் தான்மிகப்
ப்ரத்யக்ஷ மாய்ச்சாரு மால்
பெண்பிள்ளை மற்றவர்எ லாம்பெண்கள் பெற்றபிளை
பெண்பிள்ளை தொடர்பின்றியே

நித்தியா நந்தபர நிர்மலா நந்தஸுக
நிஜபோத ரூப நிமலன்
நிர்விகா ரன்பரம கல்யாண குணசீலன்
நீலகண் டன்பெற் றனன்
நத்தியே நினை;நங்கை நல்லூரில் ராஜேசி
நகர்விசிய(ம்) மேற்பா லதா
நண்ணு'ஷண் முகபவநம்' அண்ணுபன் னிருகைய!
நளிந(ம்)மதி ஆறு முகனே! 7

*ஸக்திவேல் ஏந்தும் இட மேற் கை–இந்த விக்ரஹத்தில் முருகனின் இடது மேல் கையில் தான் வேலாயுதம் உள்ளது. ப்ரத்தி யேகம்–முக்யமான ஒன்று (especially); ப்ரத்யட்சம்–கண்ணுக்குத் தெரிதல்; சாரும்–சேரும்; நத்தியே–விரும்பியே.*

வாசஸ்பதி) **102.** (ஷ

வில்லைஇடம் ஏந்துகைய! விண்ணவர்கள் மண்ணவர்கள்
மேலும்எழு பாதலம் உளார்
வெள்ளிமால் வரைஇறைவர் வைகுந்த மால்பிரமன்
வேந்தன்என் தேவேந்த்ரன் ஆர்
எல்லைஎண் திக்கிலும் இருந்துகாப் போர்எண்மர்
எழுமுநிவர் கோள்கள் ஒன்பான்
இப்படியும் அப்படியும் எண்ணிக்கை அற்றவர்கள்
யாசித்திருக்கி றார்கள்
சொல்லைநின் வாயினின் றெதிர்பார்த்(து) உனக்கே
தொழும்புசெயும் வாய்ப்பை என்றும்
ஜோதிவடி வானதிரு வோலக்க மெய்க்காட்சி
தொண்டுசெய்து காண என்றே
நல்லைநீ நனிநங்கை நல்லூரில் ராஜேசி
நகர்விசிய(ம்) மேற்பால தா
நண்ணுஷண் முகபவநம் அண்ணுபன் னிருகைய!
நளிந(ம்)மதி ஆறு முகனே! 8

*எழு பாதலம்–அதல, விதல, ஸுதல, தராதல, ரஸாதல, மஹாதல, பாதாளம் என்னும் ஏழு கீழ் உலகங்கள்; வெள்ளி மால் வரை–*

*கயிலாயம்; எண்மர்–அஷ்டதிக் பாலகர்கள்; எழு முநிவர்–ரிஷிகள் ஏழு பேர்–அத்ரி, ப்ருகு, குத்ஸர், வஸிஷ்டர், கௌதமர், காச்யபர், ஆங்கீரஸர்; ஒன்பான்–ஒன்பது; கோள்–கிரஹம்; சொல்லை–அநுக்ரஹ வார்த்தையை; தொழும்பு–தொண்டு; ஒலக்கம்–காட்சி; நல்லை–நல்லவனான; நனி–நன்றாக.*

ஆரபி) **103.** (ஷெ

கேடகம் இடத்தேந்து செங்கையாய்! தங்கையாய்க்
கேசவனை மூத்தவன் எனும்
கேதார கௌரிஉமை கந்யாகு மாரிஎன்
கிளர்நாம(ம்) மேற்கொண்டுதென்
னாடகம் நிலப்பகுதி முடிவடையு(ம்) முனையிலே
நற்கோயில் கொண்டு ளாள்தென்
னாட்டுச் சயந்திபுரம் அருகிலே வடசெந்தில்
நாதனாம் நிற்கருகிலும்
ஆடக மணிப்பணிகொள் அன்னைநின் னெதிரில்ஓர்
அரசரசர் இறைவி என்பேர்
ஆர்ந்துகுடி கொண்டுளாள் வங்கங்கள் அங்கருகில்
ஆகாய ஊர்தி இங்கே
நாடக நலாய்!நங்கை நல்லூரில் ராஜேசி
நகர்விசிய(ம்) மேற்பா லதா
நண்ணுஷண் முகபவநம் அண்ணுபன் னிருகைய!
நளிந(ம்)மதி ஆறு முகனே! 9

*கேசவன்–(க–) பிரமனும், (ஈச–) சிவ பிரானுமான விஷ்ணுவை; முனை–கன்யா குமரி முனை; கேதார கௌரி....குடி கொண்டுளாள்–தென்னாட்டுத் திருச்செந்தூருக் கருகில் கன்யாகுமரிக் கோயில் இருப்பது போல், வடதிருச்செந்தூர் என்று சொல்லக் கூடிய நங்கைநல்லூர்ச் செந்தூருக் கருகிலும் ஸ்ரீ ராஜ ராஜேச்வரியம்மை கோயில் உள்ளது என்று கூறப்பட்டுள்ளது. தெற்கில் நீரில் மிதக்கும் கப்பல்கள் கடலில் உள்ளது போல் இங்கு ஆகாயத்தில் மிதக்கும் விமாநங்கள் உள்ள மீனம்பாக்கம் விமான நிலையம் உள்ளமையும் ''வங்கங்கள் அங்கருகில் ஆகாய ஊர்தி இங்கே'' என்ற தொடர்களால் குறிக்கப் பெற்றமை கருதத் தக்கது; நாடக நலாய்–*

நித்தியா நந்தபர நிர்மலா நந்தஸுக
　　நிஜபோத ரூப நிமலன்
　நிர்விகா ரன்பரம கல்யாண குணசீலன்
　　நீலகண் டன்பெற் றனன்
நத்தியே நினை;நங்கை நல்லூரில் ராஜேசி
　　நகர்விசிய(ம்) மேற்பா லதா
　நண்ணு'ஷண் முகபவநம்' அண்ணுபன் னிருகைய!
　　நளிந(ம்)மதி ஆறு முகனே! 7

*ஸக்திவேல் ஏந்தும் இட மேற் கை—இந்த விக்ரஹத்தில் முருகனின் இடது மேல் கையில் தான் வேலாயுதம் உள்ளது. ப்ரத்தி யேகம்—முக்யமான ஒன்று (especially); ப்ரத்யட்சம்—கண்ணுக்குத் தெரிதல்; சாரும்—சேரும்; நத்தியே—விரும்பியே.*

வாசஸ்பதி) **102.** (ஷ

வில்லைஇடம் ஏந்துகைய! விண்ணவர்கள் மண்ணவர்கள்
　　மேலும்எழு பாதலம் உளார்
　வெள்ளிமால் வரைஇறைவர் வைகுந்த மால்பிரமன்
　　வேந்தன்என் தேவேந்த்ரன் ஆர்
எல்லைஎண் திக்கிலும் இருந்துகாப் போர்எண்மர்
　　எழுமுநிவர் கோள்கள் ஒன்பான்
　இப்படியும் அப்படியும் எண்ணிக்கை அற்றவர்கள்
　　யாசித்திருக்கி றார்கள்
சொல்லைநின் வாயினின் றெதிர்பார்த்(து) உனக்கே
　　தொழும்புசெயும் வாய்ப்பை என்றும்
　ஜோதிவடி வானதிரு வோலக்க மெய்க்காட்சி
　　தொண்டுசெய்து காண என்றே
நல்லைநீ நனிநங்கை நல்லூரில் ராஜேசி
　　நகர்விசிய(ம்) மேற்பால தா
　நண்ணுஷண் முகபவநம் அண்ணுபன் னிருகைய!
　　நளிந(ம்)மதி ஆறு முகனே! 8

*எழு பாதலம்—அதல, விதல, ஸுதல, தராதல, ரஸாதல, மஹாதல, பாதாளம் என்னும் ஏழு கீழ் உலகங்கள்; வெள்ளி மால் வரை—*

*கயிலாயம்; எண்மர்–அஷ்டதிக் பாலகர்கள்; எழு முநிவர்–ரிஷிகள் ஏழு பேர்–அத்ரி, ப்ருகு, குத்ஸர், வஸிஷ்டர், கௌதமர், காச்யபர், ஆங்கீரஸர்; ஒன்பான்–ஒன்பது; கோள்–கிரஹம்; சொல்லை–அநுக்ரஹ வார்த்தையை; தொழும்பு–தொண்டு; ஒலக்கம்–காட்சி; நல்லை–நல்லவனான; நனி–நன்றாக.*

ஆரபி) **103.** (ஷை

கேடகம் இடத்தேந்து செங்கையாய்! தங்கையாய்க்
கேசவனை மூத்தவன் எனும்
கேதார கௌரிஉமை கந்யாகு மாரிஎன்
கிளர்நாம(ம்) மேற்கொண்டுதென்
னாடகம் நிலப்பகுதி முடிவடையு(ம்) முனையிலே
நற்கோயில் கொண்டு ளாள்தென்
னாட்டுச் சயந்திபுரம் அருகிலே வடசெந்தில்
நாதனாம் நிற்கருகிலும்
ஆடக மணிப்பணிகொள் அன்னைநின் னெதிரில்ஓர்
அரசரசர் இறைவி என்பேர்
ஆர்ந்துகுடி கொண்டுளாள் வங்கங்கள் அங்கருகில்
ஆகாய ஊர்தி இங்கே
நாடக நலாய்!நங்கை நல்லூரில் ராஜேசி
நகர்விசிய(ம்) மேற்பா லதா
நண்ணுஷண் முகபவநம் அண்ணுபன் னிருகைய!
நளிந(ம்)மதி ஆறு முகனே! 9

*கேசவன்–(க–) பிரமனும், (ஈச–) சிவ பிரானுமான விஷ்ணுவை; முனை–கன்யா குமரி முனை; கேதார கௌரி....குடி கொண்டுளாள்–தென்னாட்டுத் திருச்செந்தூருக் கருகில் கன்யாகுமரிக் கோயில் இருப்பது போல், வடதிருச்செந்தூர் என்று சொல்லக் கூடிய நங்கைநல்லூர்ச் செந்தூருக் கருகிலும் ஸ்ரீ ராஜ ராஜேச்வரியம்மை கோயில் உள்ளது என்று கூறப்பட்டுள்ளது. தெற்கில் நீரில் மிதக்கும் கப்பல்கள் கடலில் உள்ளது போல் இங்கு ஆகாயத்தில் மிதக்கும் விமாநங்கள் உள்ள மீனம்பாக்கம் விமான நிலையம் உள்ளமையும் "வங்கங்கள் அங்கருகில் ஆகாய ஊர்தி இங்கே" என்ற தொடர்களால் குறிக்கப் பெற்றமை கருதத் தக்கது; நாடக நலாய்–*

*வேடன், செட்டி, கிழவன், மாடு மேய்க்கும் சிறுவன் ஆகிய வேஷங்களில் நடித்தவனே.*

ஸாரங்கா) **104.** (ஷெ

குக்குடக் கொடிஇடக் கைக்கொண்ட குமரனே!
குங்கும நிறக் கோலனே!
குழகனே! உத்தரக் குருவாத புரநாத
கோபால மாமன் மருமான்!
சிக்குடைச் சடைஅர்த்த நாரீசர் புதல்வனே!
ஸ்ரீராஜ ராஜேச் வரித்
தேவிபெறு முதல்வனார் வரஸித்தி கணநாதர்
சிவகணே சப்பெயரினார்
புக்குடற் பருமனுறு யானையா போந்தஅது
போழ்தில்வள் ளியைமணந் தாய்!
புரவிமுகர் லக்ஷ்மீசர் கோதண்ட ராமர்வாழ்
புடைசூழ்ந்த கோயில் பயில்தேன்
நக்குடைத் தேன்நங்கை நல்லூரில் ராஜேசி
நகர்விசிய(ம்) மேற்பால தா
நண்ணுஷண் முகபவநம் அண்ணுபன் னிருகைய!
நளிந(ம்)மதி ஆறு முகனே!

*குக்குடம்—கோழி; குழகன்—இளமையன், அழகன்; சிக்கு—அடர்த்தி, நெருக்கம்; போழ்து—சமயம்; புரவி முகர்—குதிரைமுக ஹயக்ரீவர்; லக்ஷ்மீசர்—இலக்குமியோடு இருப்பவர்; தேன்—தித்திக்கும் தேனை; நக்கு—நக்கி உண்ணும்; தேன் நங்கை நல்லூர்—தேனிக்கள் நிறைந்த (மலர் மரச் சோலைகள் உள்ள) நங்கைநல்லூர்.*

ஆகிரி) **105.** (ஷெ

அங்குசம் இடக்கையில் ஆர்ந்தபடை யாக்கொண்ட
ஆயிரம் பேர்கொள் ஐயா!
ஆதிமுதல் எப்போது(ம்) 'முருக!முரு கா!'என்
றரற்றுமுரு கம்மை யார்கை
மங்குஸம யத்தில்அதை வெட்டுவாள் பட்டும்இனும்
வளரும் படிச் செய்தனை!

மாமுகிப் பெண்பூதம் நக்கீரர் தமைஅடை
மலைக்குஹையின் வழிவிட்டனை!
செங்குசம முந்துகதை முக்காலின் மேற்பாக்கள்
செப்பிமநம் உளையும் அருணைச்
சிலைநாதர் காமம் ஜெயிக்கப் பணித்துதவி
செய்தனை! எனக்கெது செய்வாய்?
நங்குசமு(ம்) மலிநங்கை நல்லூரில் ராஜேசி
நகர்விசிய(ம்) மேற்பால தா
நண்ணுஷண் முகபவநம் அண்ணுபன் னிருகைய!
நளிந(ம்)மதி ஆறுமுக னே! 11

*அங்குசம்–யானைத் தோட்டி, ஓர் ஆயுதம்; ஆர்ந்த–பொருந்திய; ஆயிரம் பேர்–ஸஹஸ்ரநாமங்கள்; ஆதி முதல்....செய்தனை–கணவனால் வெட்டப் பட்டகை வளர்தலைப் பெற்ற முருகம்மையாரின் வரலாறு; அரற்றும்–அலறும்; மங்கும்–ஒடிந்து முடமாகும்; மா முகி–குதிரை முகத்தையுடைய கற்கிமுகிப் பெண்பூதம்; அடை–அடைத்த; செம்குசம் அழுந்து கதை–விலை மாதர் கொங்கைத் தடத்தில் தோய்ந்து வீணான செய்தி; உளையும்–வருந்திய; அருணைச் சிலை நாதர்–அருணகிரிநாத ஸ்வாமிகள்; காமம்–பெண்ணாசை; நம்–நமக்குத் தேவையான; குசமும்–தர்ப்பைப் புல்லும்; மலி–நிறைந்த.*

பூர்வகல்யாணி) 106. (ஷ

வரதகரம் இடதுபுறம் உடையகுரு பர!குளவ!
வல்லாள ராஜன் மகனாய்
வந்தசோ ணேச்வரர் அண்ணா மலைக்குரவர்
வாய்மலர் திருப்புகழ் நனூல்
சுரதலீ லாப்ரபந் தங்கொல்என மறதியாற்
சொன்னாலும் நரகம் உண்டாம்
தொகுத்துள வகுப்புகள் விருத்தம்ஒரு மூவகை
துணைக்கொள்வேல் மயில்சேவல் மேல்
சரதமாம் பேர்க்கந்தர் அநுபூதி அந்தாதி
தமிழ்அலங் கார(ம்) மற்றும்
சாற்றுதிரு எழுகூற் றிருக்கைப் பீரபந்தம்இவை
தாம்கேட்பை! நீ; 'கால்'நளார்

நரதர்தொழு குஹ !நங்கை நல்லூரில் ராஜேசி
　　நகர்விசிய(ம்) மேற்பால தா
நண்ணு'ஷண் முகபவநம்' அண்ணுபன் னிருகைய!
　　நளிந(ம்)மதி ஆறு முகனே! 12

*குளவன்—சரவணக் குளத்தில் வந்தவன்; குளம்—நெற்றி; சிவனது நெற்றிக் கண்ணில் வந்தவன் வல்லாள ராஜன், திருவண்ணாமலையை ஆண்ட மன்னன், வல்லாள ராஜன் மகனாய் வந்த சோணேசர்—அருணைச் சோணாசலேச்வரர் வல்லாள மகாராஜனுக்கு மகனாய் வந்தது தனி வரலாறு; குரவர்—அருணகிரியார்; சுரதலீலை—ஆண் பெண் கலவி; வகுப்புகள்—25 திருவகுப்புகள்; விருத்தம் ஒரு மூவகை—வேல் மயில், சேவல் விருத்தங்கள்; சரதமாம் பேர்—நிலையான புகழைப் பெற்ற; தமிழ் அலங்காரம்—(இனிமையான) தமிழில் உள்ள கந்தரலங்காரம்; சாற்று—சொல்லப் பெற்ற; கேட்பை—கேட்பாய்; நள்—நடுவில்; ஆர்—பொருந்திய; கால்நள் ஆர் நரதர்—'ந'வுக்கும் 'ர'வுக்கும் நடுவில் 'ா' பொருந்திட (ந+ா=நா) நாரதர் என்று ஆகும்.*

## VI-4. வாழ்த்து

மத்யமாவதி) **107.** கட்டளைக் கலித்துறை (சுத்தாங்கம்

முதிர்பல் லவன்தாங்கல் நங்கைநல் லூர்ஷண் முகபவநத்
தெதிர்உள் ளவள்எம் இராஜரா ஜேச்வரி ஈன்றபிள்ளை
சதிர்கொள் திருச்செந்தில் ஆறு முகன்நேர் ஷடுமுகன்தாட்(கு)
உதிர்சில் அருட்புகழ்ப் பாமலர் வாழி! உலகில்நன்றே.

*முதிர்—பழமையான; சதிர்—அழகு; ஷடு—ஆறு; உதிர்—கொஞ்சமாய்—சமர்ப்பித்த.*

(நங்கைநல்லூர் ஸ்ரீ ஷண்முக பவநத்து ஷண்முக ஸுப்ரம்மண்ய ஸ்வாமி அருட்புகழ் முற்றும்)

# VII-1. நங்கைநல்லூர் ஸ்ரீ வைஷ்ணவி இல்லம்* அருட்புகழ்

(ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள் 2.11.1976இல் அருளியது)

## 108. ஸ்ரீ கணேசர் துதி

நாட்டை) நவக்ரஹ சேஷ்டைகள் நீங்க (சதுச்ர அடம்

*தந்த தய்யா தனதன தந்தத் தனதான*

எங்கள் பொள்ளா மதிமுக! அல்லித் திருமாதின்—
இன்பெண் நல்லார் பனிருவர் புல்கப் பெறுமார்பா;
திங்கள் செவ்வாய் புதகுரு வெள்ளிச் சநிபாநு—
தென்பு செய்வார் இருவரும் உய்வைச் செயஆள்வாய்;
தங்கள் கையே தமுதவி செய்கைக் கெனுமாபோல்—
சம்பு செல்வா! எனதுன தில்லைப் படவேசெய்;
நங்கள் பிள்ளாய்! நதிபதி வெள்ளத் துதியாளா—
நங்கை நல்லூர் வயிணவி இல்லப் பெருமாளே.

*பொள்ளா—உளியாற் செதுக்கப் படாத; மதி—யானை (மதத்தை உடையது); அல்லித் திருமாது—தாமரைவாழ் இலக்குமி; இன்—இனிய; பனிருவர்—திருமாலின் 12 புதல்விகள்; பாடல் இன் குறிப்புரை பார்க்க: புல்க—அணைக்க; தென்பு—வலிமை; செய்வார்—ராகு, கேதுக்கள்; உய்வை—மேன்மையை; சம்பு—சிவபிரான்; செல்வா—மகனே; எனது... செய்—என்னுடையது உன்னுடையது, நான், நீ என்ற வேற்றுமைகள்; இல்லைப் படவே செய்—இல்லாமற் போகும்படி செய்கின்ற; நங்கள்—எங்கள்; பிள்ளாய்—பிள்ளையாரே; நதிபதி—நதிகளின் கணவனான; வெள்ளம்—பெருநீர்க் கடல்; துதியாளா—சிவபிரான் கட்டளைப்படி கடலைக் கலக்கிய (திருமால் அவதாரமான) ஆமையின் வலிமையை அடக்கக் கடலில் வைத்து நீரை உறிஞ்சிய துதிக்கையை உடைய விநாயகனே "மகர ஜலநிதி வைத்த துதிக்கர"—திருப்புகழ் "நினது திருவடி".*

---

*தவத்திரு அருட்கவி ஸாதுராம் ஸ்வாமிகளின் பூர்வாச்ரமத் தமையனார் அருளிசைமணி ஸு.வே.ஸுப்ரம்மண்யன் அவர்களின் இல்லம். மனை—36, புதிய கதவு எண் 10, பழைய எண் 4, 39 ஆவது தெரு, நங்கைநல்லூர், சென்னை—600 061.

## VII-2. 109. முருகவேள் துதி

ஷண்முகப்ரியா) தன்னை நிந்தித்தல் (சதுச்ர அடம்

*தந்த தய்யா தத்தன தய்யத் தனதான*

புந்தி எல்லா வற்றிலும் வைகிப் புணர்மாயைப்—
புன்கண் உள்கேன் முக்தியின் உய்வுப் பொருள்தேடேன்;
அந்தி எல்லா நிற்புகழ் சொல்லித் துதிபாடேன்—
அன்பு செய்யேன் எற்கெது செல்லக் கதியோதான்;
தந்தி மெய்யார் தற்பரர் தைவத் தமுனாவார்—
தம்பின் ஐயா! சக்த! ஓர்சைவக் கவுமாரா;
நந்தி பிள்ளாய்! நற்றவர் செல்வச் செனைமேவும்—
நங்கை நல்லூர் வைஷ்ணவி இல்லப் பெருமானே.

*புந்தி—புத்தி; மாயை—உலக மாயையில் உழல்வதால் வரும்; புன்கண்—துன்பம்; உள்கேன்—நினைக்கமாட்டேன்; உய்வு—கடைத்தேற்றம்; அந்தி எல்லா—இரவு பகலாக; எற்கு—எனக்கு; எது—எந்தப் பாதையில்; கதியோ—விதி வழியோ; தந்தி—யானை; மெய்யார்—உடம்பை உடையவர்; தற்பரர்—கடவுள்; தைவ—தெய்வத் தன்மையுடைய; த(ம்) முன் ஆவார்—அண்ணன் ஆகியவர்க்குத்; தம்பின் ஐயா—தம்பியாகிய ஐயனே; சக்த—வேலாகிய 'சக்தி'யை ஏந்தியவனே, சாக்தனே எனினுமாம்; சைவக் கவுமாரர்—சைவனே! கௌமாரனே; நந்தி—திருமூலர், 'நந்தி' என்ற சொல்லால் குறிக்கும் சிவபிரான்; பிள்ளாய்—மகனே.*

## வைஷ்ணவி அருட்புகழ்ப் பதிகம்

(அநல—மாசி—க்ருத்திகை (25.3.1977) அன்று
கல்கத்தா முகாமிலிருந்து அருளியது)

பைரவி) **110.** கட்டளைக் கலித்துறை (சுத்தாங்கம்

பாதம் பணிந்து பரவசம் ஆகிப் பரவி அருட்
போதம் பெறுபவர் புந்தியுள் நின்ற புநிதவதீ!
நாதம் கலையொடு விந்துசேர் நாயகீ! நங்கைநல்லூர்
மாதம் பதியாக வைஷ்ணவி இல்லத்து வாழ்பவளே! 1

*போதம்—அருளியல் அறிவு; புந்தி—புத்தி*

கல்யாணி) **111.** (சுத்தாங்கம்

நாரா யணற்குயிர்த் தங்கையாம் மங்கையே!நங்கை நல்லூர்
ஊராய் அணவஒள் வைஷ்ணவி இல்லத் துறைபவளே!
பாரா யணம்செய்துன் நாமம்ஓர் ஆயிரம் பன்னுமவர்
நாரா யணிஉனை நாடொறும் இன்பத்தில் நாட்டுவரே 2

*அணவ–பொருந்தியிருக்க; ஒள்–ஒளியுடைய; பன்னுமவர்–சொல்பவர்கள்.*

ஆநந்தபைரவி) **112.** (சுத்தாங்கம்

நல்லவர் வாழும் கடற்சென்னை மாநகர் நங்கை நல்லூர்
எல்லவ ரும்போற்றும் வைஷ்ணவி இல்லத்திருப் பவளே!
சொல்லவும் போமோ? நினதிருப்பேர்சீர் தொழில் அனைத்தும்
வல்லவ ளே!வட முல்லை வநத்துறை வைஷ்ணவியே! 3

*எல்லவரும்–எல்லோரும்; பேர்–திருநாமம்; சீர்–சிறப்புகள்.*

ச்யாமா) **113.** (சுத்தாங்கம்

நண்ணலர் தம்மை நசுக்கிப் பொசுக்கிட நங்கை நல்லூர்க்
கண்ணலர்க் கண்ணியா வைஷ்ணவி இல்லத்தைக் காதலித்து
விண்ணலர் தூவி விபுதர்கள் செய்பூஜை வேட்பைவிடத்
தண்ணலர் அன்பால் தரணியோர் தூஉய்த் தொழத் தங்கினையே 4

*நண்ணலர்–பகைவர்; கண்–இடத்தில்; அலர்க்கண்ணியர்–தாமரை அல்லது நீலோற்பல புஷ்பத்தைப் போன்ற கண்களை உடையவளாக; விண் அலர்–தேவலோகத்து மலர்களை; தூவி–அர்ச்சிக்கும்; விபுதர்–தேவர்; வேட்பை–விருப்பத்தை; தண்–குளிர்ந்த; தரணியோர்–பூலோக மக்கள்; தூய்த் தொழத்–தூவி வழிபட.*

பூர்வ கல்யாணி) **114.** (சுத்தாங்கம்

நாக்குப் படைத்தவர் நாமம் நவிற்றிடும் நங்கைநல்லூர்
வாக்குப் படைத்தநல் வைஷ்ணவி இல்லம் வளர்பவளே!
போக்குப் படைத்து வரவும் புரிந்திடும் பொய்யன் என்னை
ஆக்கிப் படைத்தருள் செய்யும் உனக்கென்னால் ஆவதென்னே? 5

*நாமம்–தெய்வத் திருநாமங்கள்; நவிற்றிடும்–கூறும்; வாக்கு...*

*இல்லம்—அருள்வாக்கு, சொல்லும் வைஷ்ணவி இல்லம்; போக்கு.... பொய்யன்—இறப்பதையும் பிறப்பதையும் செய்து கொண்டிக்கும் பொய் வாழ்வினன்; என்னை...ஆவதென்னை—உனக்கு என்னால் (ப்ரயோஜநம்) நன்மை ஏதும் இல்லை; "என்னால் ப்ரயோஜநம் ஏதுண்டு காண்கச்சி ஏகம்பனே"—பட்டினத்தார்—'பொன்னால்'.*

நீலாம்பரி) **115.** (சுத்தாங்கம்

நற்றவர் போற்றி நனிவழி பாடுசெய் நங்கைநல்லூர்க்
கற்றவர் வாழ்தரும் வைஷ்ணவி இல்லம் களித்திருப்போய்!
பெற்றவர் பிள்ளையைத் தள்ளினும் பிள்ளை பிரிந்திடுமோ?
உற்றவர் மற்றவர் பெற்றவர் எல்லாமாய் உள்ளவளே. 6

*நனி—நன்றாக; கற்றவர்—கல்வி மான்கள்; உற்றவர்...உள்ளவளே—"அப்பன் நீ அம்மை நீ" எனத் தொடங்கும் அப்பர் தேவாரத்தின் கருத்தினது இந்த வரி.*

நாதநாமக்ரியா) **116.** (சுத்தாங்கம்

நாடிய அன்பர் நறுந்தமிழ் பாடிடும் நங்கைநல்லூர்
ஊடியல் பார்ந்தமை வைஷ்ணவி இல்லத் தொளிர்பவளே!
நேடிய நேயர் அருளிசை மாமணி நெஞ்சகத்தே
ஆடிய பாதங்கள் அன்பால் அமைய அமர்சிவையே. 7

*ஊடு—(ஊருக்கு) உள்ளே; இயல்...அமை—இயல்பாகப் பொருந்தி அமைந்துள்ள; நேடிய—(அருளை, ஆன்மிகத்தை) விரும்பிய; நேயர்—அன்பர்; அருளிசை மாமணி—ஸ்ரீ.வே.ஸுப்ரம்மண்யம்; ஆடிய—நடனம் ஆடிய; அமைய—நிலைபெற; அமர்—விரும்பும்.*

நாககாந்தாரி) **117.** (சுத்தாங்கம்

நாமத்தி னால்அர்த்த நாரீச் வரர்உறை நங்கைநல்லூர்க்
க்ராமத்தி னிற்புனற் றண்குளத் தென்கரைக் கண்ணமைந்த
வாமத்தை நோக்கிடும் வைஷ்ணவி இல்லத்து மாதரசே!
ஊமத்தை சூடிக் கொருபாக மாகஉறை உமையே! 8

*நாமத்தினால்—பெயரினால்; அர்த்தநாரீச்வரர்—நங்கைநல்லூரின் வடபகுதியில் உள்ள குளத்தின் வடகரையில் கோயில் கொண்டுள்ள*

*சிவபிரான் திருநாமம், குளத்தின் தென் கரையில் உள்ளது வைஷ்ணவி இல்லம்; தண் புனல்—குளிர்ந்த தண்ணீர்; வாமத்தை—அழகினை; ஊமத்தை சூடி—சிவபெருமான்.*

நாட்டைக்குறிஞ்சி) **118.** (சுத்தாங்கம்

நாரிஓர் பாகர் வடகரைக் கண்ணுற நங்கைநல்லூர்
ஏரியோ என்ன உளகுளத் தென்கரை யின்கண்எழில்
வாரியோ என்றிட வைஷ்ணவி இல்லம் வயங்கனையே!
மாரியோ என்னுமா பேரருள் வாரி வழங்குவையே! (9)

*நாரி ஓர் பாகர்—அர்த்தநாரீச்வரர்; ஏரியோ என்ன உள குளம்—ஏரி என்று சொல்லும்படி குளம் பெரியதாய் உள்ளது; எழில் வாரியோ.... அனையே—வைஷ்ணவி இல்லத்தில் தேவி அழகுக் கடல் என்று கூறும்படி விளங்குகின்றாள் (என்று பாடலில் வந்துள்ளது); மாரியோ என்னுமா—மழையோ என்று சொல்லும்படி; அருள் மாரி—அருள் மழையை; வழங்குவை—தருவாய்.*

ஆந்தோளிகா) **119.** (சுத்தாங்கம்

நாட்டையோ சித்திடில் தொண்டைநன் னாட்டைச்சேர் நங்கைநல்லூர்
வீட்டை யோசித்திடில் வைஷ்ணவி இல்லத்தில் வீற்றிருப்பாய்!
பாட்டையோ சித்திடில் ஸுப்பிர மண்ணியப் பண்ணரசின்
ஏட்டையோ சித்தே அருளிசை கேட்டங் கிருப்பவளே! (10)

*ஏடு—மேன்மை.*

மத்யமாவதி) **120.** (சுத்தாங்கம்

நாளும்விண் ணூர்திகள் மேலே பறந்தெழும் நங்கைநல்லூர்
நீளும் தெருத் திரு வைஷ்ணவி இல்லத்தில் நிற்பவளே!
ஆளும் திருத்தலம் பல்லவன் தாங்கல் அதாப்படைத்த
கோளும் தெரித்தருள்! வைஷ்ணவீ எங்கள் குல தெய்வமே. (11)

*நாளும்....நல்லூர்—நங்கைநல்லூர்க்கு வடமேற்கில் மீநம்பாக்கத்தில் சென்னை விமாந நிலையம் உள்ளமை கருதத்தக்கது; நீளும் தெரு—கிழகு மேற்காய் அமைந்த நீண்ட 39ஆம் தெரு; ஆளும்—(தேவி நம்மை) ஆட்சி செய்யும்; பல்லவன் தாங்கல்—பல்லவ மன்னர்கள் ஒரு*

*காலத்தில் வந்து தங்கிய இடம் இது. இந்த இடத்தின் சரியான பெயர் இது தான்.*

(வைஷ்ணவி இல்லம் அருட்புகழ் முற்றும்)
(நங்கைநல்லூர்அருட்புகழ்ப் பாடல்கள் குறிப்புரையுடன் முற்றும்)

## சென்னை நங்கைநல்லூர்ப் பொங்கி மடாலயம்

வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகளின் சிஷ்யரும், திருப்போரூர் முருகன் திருவருள் பெற்றவரும், ஆசு கவிகள் பாடும் அருட்கவியும் ஆன சேதுராமனார், கீலக வருஷம், சிவராத்திரி நாளில் (15.2.1969–இல்) சென்னை வடதிருமுல்லை வாயில் வைஷ்ணவி ஆலயத்தில், தன் தாயார், தந்தை வழி பெரிய தாயார் ஆகியோருடன் தானும் துறவறம் ஏற்றார். வைஷ்ணவி ஆலயத்தில் மூவரும் தங்கி இருந்தனர்.

தாயார் ஸந்யாஸிநி மோநாம்பா அம்மையார் 27.11.1979–இல் ஸித்தி அடைந்தார்கள். அவரது புநித உடல் நங்கைநல்லூரில் ஸமாதி செய்யப்பெற்றது. இந்த ஸமாதியின் மேல் பொங்கி மோநாம்பிகைத் தேவியின் உருவம் ப்ரதிஷ்டை செய்யப் பெற்றது. 9.9.1993–இல் ஸந்யாஸிநி ஞாநம்மாள் ஸித்தி அடைந்தார்கள். அவர்களின் புண்ய சரீரம் ஸந்யாஸிநி மோநாம்பா அம்மையாரின் ஸமாதிக்குக் கிழக்கில் அடக்கம் செய்யப் பெற்றது. இச் சமாதியின்மேல் ஞாநகணேச கிரிநாதரின் உருவம் திகழ்கின்றது.

10.3.2000–இல் ஸ்ரீ ஸாதுராம் ஸ்வாமிகள் போரூர்க் குமரன் திருவடியில் கூடினார். அவர்தம் அருட்சரீரம் பூர்வாச்ரமத் தாயாரின் ஸமாதிக்கு மேற்கில் நல்லடக்கம் செய்யப் பெற்றது. இதன்மேல் ஸச்சிதாநந்த தண்டபாணியின் திருவுருவம் ஸ்தாபிக்கப்பட்டு ள்ளது. பொங்கி மோநாம்பிகை குடிகொண்ட கோயில் ஆதலின் பொங்கி மடாலயம் என்ற பெயருடன் இத் தலம் விளங்கி வருகின்றது. ஆண்டு தோறும் இம்மடத்தில் கார்த்திகை மாதச் சுக்ல பக்ஷ தசமி முதல் பௌர்ணமி வரை ஆறு நாட்களிலும் இன்னிசைகள், சொற்பொழிவுகள், அந்நதாநங்களுடன் விழாக்கள் நடைபெற்று வருகின்றன.

# VIII. நங்கைநல்லூர் அருட்புகழ்ப் பாடல் முதற்குறிப் பகராதி

(எண்கள்–பாடல் எண்கள்)

(நங்கைநல்லூர் அருட்புகழ்ப் பாடல் முதற்குறிப் பகராதி முற்றும்)



